# இந்த பிரசித்திபெற்ற க்ரீம்கள் உங்கள் சருமத்திற்கு மிகப் பொருத்தமானவை!

### உங்களைச் சுற்றிலுமுள்ள சீதோஷ்ண நிலைக்கும் உகந்தவை

இவ்விரண்டு அற்புதமான பாண்ட்ஸ் அழகு சாதனங்களை உபயோகியுங்கள்! அவை உங்கள் சருமத்திற்கு ஏற்றவை; இரண்டும் உங்கள் வதனத்தை சீதோஷ்ண நிலையின் கொடுமையினின்று பாது காத்து, சருமத்தை நிர்மலமாக, மென்மையாக வைத்திருக்கும்.




வரண்ட சீதோஷ்ண நிலை உங்கள் முகப்பொலிவைப் பாழ்படுத்தினால் — பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உங்களுக்குத் தேவை.. அதிலுள்ள செழிப்பான எண்ணெய்கள் சருமத்திற்கு சமன ஊட்டி, கடுமையான வெயில் மற்றும் வரண்ட காற்றினால் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.




உங்கள் சருமம் இயற்கையாகவே எண்ணெய் பசையுடையதானால், அல்லது உஷ்ணமும் கசகசப்பும் மிகுந்த சூழ்நிலையில் பிசுக்கடையும் பட்சத்தில்—பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கவும். இக்குளுமையான மெல்லிய க்ரீம் சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் அழிந்த ஜீவாணுக்களையும் அகற்றி, உங்கள் முகத்திற்கு சௌமிய பாதுகாப்பளிக்கிறது.

பாண்ட்ஸ் க்ரீம்களை தவறாமல் உபயோகியுங்கள். சொற்ப காலத்தில் உங்கள் சருமம் புதுமையும் அழகும் செறிந்து விளங்குவதைக் காண்பீர்கள்— உணரவும் செய்வீர்கள்!

## உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்




# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்

P. 9947

# கல்கி
# பொருளடக்கம்
## 1955 மார்ச் 13


| | | | |
|---|---|---|---|
| ஆந்திரத் தேர்தலின் படிப்பினை | (தலையங்கம்) | ... | 3 |
| தமிழும் ஆங்கிலமும் | ... | ... | 4 |
| காளிங்க நர்த்தனம் | (கார்ட்டூன்) | ... | 6 |
| என்ன செய்தி? | ... | ... | 8 |
| பனித் துளி | ... | ... | 10 |
| நட்சத்திர விழா | சுப்புடு | ... | 12 |
| நம்பிக்கை | அன்னபூரணி | ... | 14 |
| இலக்கியக் கர்த்தாக்களிடையே வினோபா | சுரேஷ் ராம் | ... | 19 |
| தெய்வீகப் பிறவி | சாந்தா ராமஸ்வாமி | ... | 22 |
| ரகுவின் விவாகம் | காமகிரி | ... | 25 |
| ஆற்றங்கரையினிலே | பேராசிரியர் ரா. பி. சேதுப் பிள்ளை | ... | 30 |
| டி. கே. சி.யின் கடிதங்கள் | ... | ... | 34 |
| ஹாஸ்யக் களஞ்சியம் | சாமா | ... | 36 |
| 'கல்கி'யின் அமரதாரா | ஆனந்தி | ... | 39 |
| புன்னகை பூத்தாள் | சரஸன் | ... | 51 |
| ஆரோக்கிய வாழ்வு | சீதாலக்ஷ்மி குமாரசாமி | ... | 55 |
| துறவியின் பாசம் | ரா. பாலகிருஷ்ணன் | ... | 58 |
| வட்ட மேஜை | ... | ... | 64 |
| சக்கரவர்த்தித் திருமகன் | ராஜாஜி | ... | 67 |
| தங்க மாம்பழம் | ராஜி | ... | 72 |
| கலையாழியின் கனவு | கல்கி | ... | 77 |
| கோகிலா | ரமண்லால் தேசாய்—ரா. வீ. | ... | 83 |
| விந்தை விலங்குகள் | எம். டி. வாசுதேவன் நாயர்—ஜெயமணி | ... | 91 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



"பால் வடியும் உன் முகத்தை ஒருதரம்
பார்த்தாலே பசி தீருமடா
பாலும் தேனும் இணையாகாது
பாப்பா உந்தன் மழலைக்கே...."

உள்ளம் கவரும்

# வள்ளியின் செல்வன்

இப்பொழுது சென்னை வெலிங்டன், பிரபாத், சரஸ்வதி
மூன்று தியேட்டர்களிலும் மற்றும் தமிழ்நாடெங்கும்.....

ஜெமினி ரிலீஸ்

சென்னையில் தினசரி 3 காட்சிகள் - 2-30, 6, 9-30

மலர் 14 இதழ் 33




தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# ஆந்திரத் தேர்தலின் படிப்பினை

ஆந்திர ராஜ்யத்தில் நடந்த தேர்தலில் காங்கிரஸ் வாதிகள் அமோக வெற்றி அடைந்து விட்டார்கள்.

ஆந்திர சட்ட சபையில் உள்ள ஸ்தானங்களில் சற்றேறக் குறைய 75 சத விகிதம் காங்கிரஸ் முன்னணிக்குக் கிடைத்து விட்டது. காங்கிரஸ் அபேட்சகர்களை மட்டும் தனியாகக் கணக்கிட்டாலும் அவர்களுக்கு 60 சத விகிதம் கிடைத்திருக்கிறது. இதைவிட அதிகமாக ஒரு வெற்றியை எவருமே எதிர்பார்க்க முடியாது.

பெரும்பாலான மக்களுக்குக் கலக்கத்தைக் கொடுத்து வந்த கம்யூனிஸ்டு கட்சியினர் படுதோல்வி அடைந்ததைக் குறித்து ஆச்சரியம் அடைவதிற்கில்லை. கம்யூனிஸ்டுகளின் பலம் ஒடிந்து பல பூதங்கள் ஆகி விட்டன.

அந்த உண்மை இப்போது ஆந்திர ராஜ்யத் தேர்தலில் யாதொரு சந்தேகத்துக்கும் இடமின்றித் தெளிவாகி யிருக்கிறது.

எப்போதுமே சிக்கல் ஏற்பட்டால், உலகம் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து போவது வழக்கம். ஆனபடியால் இந்தத் தேர்தலில் பொது மக்கள் ஒன்று, காங்கிரஸ் வாதிகளுக்கு வோட் கொடுக்க வேண்டும்; அல்லது கம்யூனிஸ்டுகளுக்கு வோட் கொடுக்க வேண்டும். ஆந்திர காங்கிரஸ் நிர்வாகத்தில் இருந்த ஊழல்கள் பிடிக்காதவர்கள் எல்லாம் கம்யூனிஸ்டுகளுக்கு வாக்குக் கொடுத்தார்கள்.

எனவே, கம்யூனிஸ்டுகளுக்குக் கிடைத்த வோட்டுக் கணக்கு கம்யூனிஸ்டுகளின் பலத்தின் அளவு அல்ல; காங்கிரஸ் நிர்வாக ஊழல்களில் மக்களுக்கு ஏற்பட்ட அதிருப்தியின் அளவேயாகும்.

ஆந்திர ராஜ்யத் தேர்தலிலிருந்து மற்றொரு முக்கிய விஷயம் வெளியாகியிருக்கிறது.

அதாவது காங்கிரசுக்குத்தான் பாரத நாட்டின் எந்தப் பாகத்திலும் ஆட்சி அதிகாரம் இருக்க வேண்டும் என்பது பொதுஜனங்களின் அபிப்பிராயம் என்ற உண்மை ஸ்திரமாய் விட்டது.

அரசாங்க ஊழல்களைக் காங்கிரஸ்காரர் நிவர்த்தி செய்து விடுவார்கள் என்பது பொது ஜனங்களின் நம்பிக்கை.

அந்த நம்பிக்கை நிறைவேறும்படி செய்ய வேண்டியது ஆந்திர காங்கிரஸ்வாதிகளின் முதற் கடமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

அந்தக் கடமையைச் சரிவரச் செய்ய வேண்டுமாயின், ஆந்திர ராஜ்யத் தேர்தலில் வெற்றி பெற்றவர்கள் சரியான தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அப்படிச் செய்தால், அடைந்த வெற்றியால் ஆந்திர மக்கள் லாபம் அடைவார்கள்.

தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் தவறு ஏற்பட்டால், அடுத்த தேர்தலில் இப்போது நடந்ததற்கு நேர் விரோதமான முடிவு ஏற்பட்டுவிடும் என்று எச்சரிக்க விரும்புகிறோம்.

* * * *

பெறுதற்கரிய சுதந்திரத்தைப் பாரத மக்களுக்கு ஈட்டிக் கொடுத்த காங்கிரஸ் தலைவர்கள் பொது மக்களுக்கு நன்மையான காரியங்களைச் செய்வதில் எப்போதுமே கவனம் செலுத்தி வருவார்கள்.

அந்தரங்க சுத்தியுடன் தொண்டு செய்யும் காங்கிரஸ் கட்சியின் மீது வீண் புகார்கள் செய்வதாலும், வானளாவப் பேசுவதாலும், பொய்ப் பிரசாரம் செய்வதாலும் யாதொரு பயனும் ஏற்படாது என்பதே கம்யூனிஸ்டு கட்சியினர் இந்தத் தேர்தலின் மூலம் கற்றுக் கொள்ள வேண்டிய பாடமாகும்.

எது எப்படியாயினும், கம்யூனிஸ்டுகளைச் சட்டசபை வலைக்குள் போட்டுக் கொண்டது புத்திசாலித்தனம்தான்.

அதன் பலனாகப் புலிகள் எல்லாம் இப்போது பூனைகள் ஆகி விட்டன!

மொத்தத்தில் ஆந்திர ராஜ்யத் தேர்தல் முடிவுகள் காங்கிரசின் முக்கிய கொள்கைகளான சாத்வீகத்துக்கும் ஜனநாயகத்துக்கும் வெற்றி என்று சொல்லலாம்.

தங்களோடு கண்மூடிக் கொண்டு சேராத காரணத்தினால், பாரதநாடு கம்யூனிஸப் பாதையில் சென்று வருகிறது என்று அமெரிக்கா போன்ற நாடுகளைச் சேர்ந்த சிலர் பயந்தது ஆதாரமற்றது என்பதை ஆந்திர ராஜ்யத் தேர்தல் உலகத்துக்கு நன்றாக நிரூபணம் செய்திருக்கிறது.

இந்தத் தேர்தலில் காங்கிரஸுக்குப் பெருவாரியாக வோட்டுக் கொடுத்ததன் மூலம் இந்திய மக்களின் பாராட்டுதலுக்கு மாத்திரமல்ல, உலகில் உள்ள ஜனநாயக நாடுகளின் பாராட்டுதலுக்கே ஆந்திர மக்கள் பாத்திரராகி யிருக்கிறார்கள்.

# தமிழும் ஆங்கிலமும்

தமிழ் மொழி ஸம்ஸ்க்ருதத்தைப் போல், வளர்ச்சி தீர்ந்துபோன மொழியல்ல, உயிருடன் வளர்ந்தோங்கும் தன்மை வாய்ந்தது. இது குறித்துத் தமிழர்கள் பெருமிதம் கொள்ள முடியும். ஆனால் சாதாரணமாக நாம் ஒருவரோடு ஒருவர் பேசும்போது தமிழில் அனாவசியமாகக் கண்டபடி ஆங்கிலச் சொற்களைக் கலந்து வருகிறோம். மொழியின் வளர்ச்சி என்று இதைக் கருத முடியாது.

மாதவபுரம் வாலிபர் சங்கத்தில் டாக்டர் சாமிநாதய்யர் அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில் இவ்விஷயங்களையெல்லாம் ராஜாஜி எடுத்து விளக்கினார்.

எழுதும்போது மட்டும் சுத்தத் தமிழாகத் தேடி எழுதி விட்டுப் பேசும்போது, அதாவது வாழ்க்கை நடத்தும்போது, அவசியமின்றிப் பிற மொழிகளைக் கலக்கும் வழக்கம் வைத்துக் கொண்டே சென்றோமானால், என்றாவது ஒருநாள் தமிழுக்கு அபாயம் என்பது நிச்சயம்!

வார்த்தைகளைச் சிரத்தையோடு கையாளுவதற்கு உரிய அக்கறையும் நிதானமும் இல்லாததால், இன்று நம்முடைய தினசரிப் பேச்சில் எத்தனையோ ஆங்கிலச் சொற்கள் பின்னிக் கிடக்கின்றன. மேனாட்டிலிருந்து மோட்டார் நமக்கு வந்தது. இதனாலே அதோடு மோட்டார் என்ற சொல்லும் வந்தது. இதில் தவறில்லை. 'இலெக்ட்ரிக்' விளக்கு கடல் கடந்து வந்த காரியம். அதோடு சேர்ந்து 'இலெக்ட்ரிக்' என்ற சொல்லும் வந்தது. குற்றமில்லை. ஆனால் எங்களுடைய 'பாதர்ஸ் ஸெரிமெனி' என்று சொல்ல வேண்டும்!

'பம்ப்' என்ற சொல் பழக்கத்தில் வந்து விட்டது. 'பல்ப்' என்ற சொல் வழக்கத்தில் வந்து விட்டது. 'போட்டோ', 'ரயில்', 'பௌண்டன் பேனா', 'நிப்', இப்படிச் சில சொற்கள் நம்முடைய மொழியில் கலந்திருக்கின்றன. உண்மைதான். நிவர்த்திக்க முடியாத 'சொற்களைப் பற்றிக் கவலையில்லை.

புதிய பொருள்களும் அவற்றினோடு வந்த பெயர்களும் பற்றிக் கவலையில்லை. ஆனால் பழைய பொருள்களுக்கும் பழைய கருத்துக்களுக்கும் பழைய பெயர்களையே வைத்து வாழ்க்கை நடத்துவதே உசிதமாகும்; அழகும் ஆகும். தமிழ் மொழியும் தமிழ் இலக்கியமும் சிதைவுபடாமல் இருக்கும்.

ஆங்கிலம் படித்த மக்கள் தங்கள் கருத்துக்களை ஆங்கிலத்திலேயே சிந்தித்துச் சிந்தித்துப் பழக்கம் ஆகிவிட்டது. தமிழிலே சொல்வது என்றால், யோசிக்க வேண்டுமே! நாவுக்கு ஒரு சோம்பேறித்தனம்! இது காரணமாகவே இந்தத் தவறு தீவிரமாகப் பரவி, மொழியைக் கெடுத்து வருகிறது. இந்த அயர்வை மெள்ள அகற்றுவதே நமது முதலாவது கடமை.

தமிழைப் போதனா மொழியாக்குவது சம்பந்தமான கிளர்ச்சியைப் பற்றியும் இங்கே ஒரு வார்த்தை. கல்லூரிகளில் மேல் படிப்புக்குத் தமிழைக் கையாளவேண்டும் என்ற நோக்கம் மகத்தான நோக்கம். அதை நடைமுறைக்குக் கொண்டு வர வேண்டியது மிகவும் அவசியம். உற்சாகமாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். ஆனால் எப்பொழுது அதைச் செய்ய வேண்டும் என்பதை யோசிக்க வேண்டும். வடநாடுகளில் ஹிந்தியின் மூலம் கல்வி கற்பிக்கும் காலம் ஏற்படும்போது தான், தமிழ் நாட்டிலும் தமிழ் மூலம் உயர்தரக் கல்வியைப் புகட்ட வேண்டும். அகில இந்திய அடிப்படையிலேதான் உயர்தரக் கல்வி முறைகளை அமைக்கவேண்டும். இல்லையென்றால், தமிழ் மாணவர்களுக்கு ஒரு பெரிய ஆபத்து ஏற்பட்டு விடும் என்பதை இங்கே எச்சரிக்க விரும்புகிறோம்.

அகில இந்திய உத்தியோகங்களுக்கு நமது தமிழ் நாட்டுப் பட்டதாரிகள் போட்டி போடும்போது, பாரதநாட்டின் மற்றப் பகுதிகளில் உள்ள பட்டதாரிகள் ஆங்கிலமும் ஹிந்தியும் பயின்றவர்களாக இருந்து, நம்முடைய பட்டதாரிகள் தமிழ் ஒன்றை மட்டுமே தெரிந்தவர்களாக இருந்தால் பெரிய இக்கட்டான நிலை ஏற்பட்டுவிடும். அதற்கு இடம் கொடுக்கக் கூடாது. தமிழ் நாட்டுப் பட்டதாரிகள் இப்பொழுது அடைந்துள்ள அகில இந்தியச் செல்வாக்கு எப்பொழுதும் குறையவே கூடாது. நம்முடைய உற்சாகத்தில் இந்த விஷயத்தை நாம் மறந்து விட்டால், நஷ்டம் ஏற்படும். மேல் தரப் படிப்பில் அகில இந்தியத் தராசு எந்த பாஷையில் இருக்கும் என்பதை எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொண்டே யிருக்க வேண்டும். இல்லாவிடில், தமிழ் மக்களுக்கு இடைஞ்சலாகப் போகும்.

என்றாலும், மத்தியதரக் கல்விக்குத் தமிழை உபயோகித்து வருவது அவசியம். ஏதோ சட்டத்துக்குச் செய்கிற காரியம் என்று இராமல், நன்றாகத் தமிழ் மொழியைக் கையாள வேண்டும். அவசியமானதும் இன்றியமையாததும் ஆன புதிய பரிபாஷைச் சொற்களைப் பயன்படுத்தலாம். அவற்றை வைத்தே விஷயத்தை மாணவர்களுக்குத் தாய் மொழியில் நன்றாக விளக்கலாம். இப்படிச் செய்தால்தான் மாணவர்கள் குழப்பமும் சந்தேகமும் இன்றி விஷயங்களைப் புரிந்து கொள்வார்கள். ஆங்கிலச் சொற்கள் சிலவற்றைக் கலக்க வேண்டிய அவசியத்தினால், பேசுவதே முற்றிலும் ஆங்கில மொழியாக இருக்க வேண்டும் என்பதில்லை. தற்போது ஸம்ஸ்க்ருத பாடம் கற்பிக்கும்போது ஸம்ஸ்க்ருத மொழிகளோடு தமிழோ அல்லது ஆங்கிலமோ சேர்த்துத்தான் புலவர்கள் பயிற்சி தருகிறார்கள். கிரேக்க பாஷையை ஆங்கில மாணவர்களுக்கு ஆக்ஸ்போர்டில் சொல்லி வரும்போது, புலவர்கள்

கிரேக்க மொழியில் பேசுவதில்லை. ஆங்கிலத்திலே தான் பேசிச் சொல்லித் தருகிறார்கள்.

பிறமொழியிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்ப்புச் செய்யும் போதும், தமிழ் மொழியின் சாயல், மரபு—இவற்றிற்கு ஏற்ற முறையில் பாஷையை உபயோகிக்க வேண்டும். ஆங்கிலத்தின் மூலம் படித்த கருத்துக்களைத் தமிழிலே சொல்லும் போது, அதில் வேற்றுமொழி வாடை வீசக் கூடாது. அதைத் தமிழ் ஆக்கிவிட வேண்டும். இதுவே அறிஞர்கள் கண்ட முடிவு.

ப்ரெஞ்சு மொழிகள் ஆங்கிலத்தில் கலப்பது சம்பந்தமாக அறிஞர் ஜான்ஸன் இந்த விஷயத்தை மிகத் தெளிவாக ஆராய்கிறார். இதையும் ராஜாஜி மாதவபுரம் சொற்பொழிவில் எடுத்துக் காட்டினார். ஒரு பாஷையிலிருந்து இன்னொரு பாஷைக்குச் சொற்கள் நுழைந்து விடுவதனால் அத்தனை தீங்கு இல்லை. ஆனால் மொழிபெயர்க்கும் போது நம்முடைய மொழியின் மரபு கெட்டுப் போகாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். தொல்காப்பியர் ''மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல்'' என்று அருமையான முறையில் இந்தக் கருத்தையே ''அதர்ப்பட'' (வழியோடு இயைந்த முறையில்) என்று அழுத்தமாகச் சொன்னார்.

எல்லாவற்றையும்விட நம்முடைய கையிலேயே உள்ள காரியம், பிறரை எதிர்பாராமல் கிளர்ச்சிகள் செய்யாமல் நாமே முடித்து விடக் கூடிய காரியம் ஒன்று இருக்கிறது. அது, இந்த விநாடியிலிருந்தே தினசரிப் பேச்சுக்களில் ஆங்கிலச் சொற்களை முடிந்தவரை அகற்றுவதுதான். இது ஒவ்வொரு தமிழனும் செய்யக் கூடிய, செய்ய வேண்டிய காரியம்.

# பொன் விழா

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு மைசூரிலிருந்து ஒரு அனாதைச் சிறுவன் சென்னைக்கு வந்தான். அந்தக் காலத்தில் பெங்களூரில் பரவியிருந்த விஷ ஜுரத்தில் பெற்றோர்களை இழந்த அந்தச் சிறுவன் இனி தெய்வமே கதி என்று நம்பித் தனது படிப்பைத் தொடர்ந்து நடத்த ஆசைப்பட்டு சென்னைக்கு வந்தான். தெய்வம் ஒரு முனிவரின் கோலத்தில் காட்சி தந்து உதவிற்று.

ஏதோ ஒரு கற்பனைக் கதையைச் சொல்வதாக எண்ண வேண்டாம். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அப்படி அனாதையாக வந்து சுவாமி ராமகிருஷ்ணானந்தா என்ற முனிவரிடம் சரண் புகுந்த அந்த மைசூர் மாணவன்தான் இப்பொழுது பொன் விழாக் கொண்டாடிய ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் விடுதிக்கே அஸ்திவாரக் கல் நாட்டினான் என்று சொல்ல வேண்டும்.

அந்த மாணவன் சுவாமி ராமகிருஷ்ணானந்தாவிடம் உதவி நாடிய அதே சமயம், தியாக சீலர்களான இரு சகோதரர்கள் ''ராமு, ராமானுஜு'' என்று இன்றும் அன்போடு அழைக்கப் பெறும் இரு சகோதரர்கள், சுவாமி விவேகானந்தரின் பரம பக்தர்கள்,— இந்த இருவரும் ராமகிருஷ்ணானந்தாவிடம் பக்தியோடு பழகி வந்தார்கள். சுவாமியும் அந்த ஏழை மாணவனுக்கு உதவ வேண்டும் என்ற தமது ஆசையை இவர்களிடம் வெளியிட்டார். உடனே ஏற்பாடு தொடங்கியது.

நம் நாட்டில் இருந்து வந்த ஒரு பழைய வழக்கத்தின்படி ஏழை மாணவர்களுக்கு, நண்பர்கள் சிலர் சேர்ந்து ஒரு நாளைக்கு ஒரு வீட்டில் என்று உணவு ஏற்பாடு செய்தார்கள். சில வாரங்களில் மயிலைக் கேசவப் பெருமாள் வீதியில் டாக்டர் நஞ்சுண்டராவ் என்ற சீலர் தமது இல்லத்தை மாணவர்கள் தங்குவதற்கு வழங்கினார். தம்முடைய இரண்டு பையன்களுக்கும் படிக்க வசதி நாடி வந்த ஒரு ஏழை மனிதர், இந்த விடுதியில் சமையல் வேலை செய்ய முன் வந்தார். வெகு சீக்கிரத்தில் 1905-ம் ஆண்டு பெப்ருவரி 17-ந் தேதி விடுதி ஒரு புண்ணிய முகூர்த்தத்தில் தொடங்கிற்று. ராமகிருஷ்ணானந்தா அந்த விடுதியின் ஆரம்ப விழாவில், ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் திருவுருவப் படத்துக்கு முன்பாக அமர்ந்து சொன்னார்: ''அன்னதானம் என்பது நமது நாட்டில் ஒரு மகாதானம் என்று அழைக்கப்படுகிறது. பெரும் புனிதமாகக் கருதப் படுகிறது. வித்யா தானம் அதைவிடப் பெரிது. இவை இரண்டையும் விடப் பெரிது, ஆத்ம ஞானத்தை வழங்குவதாகும். இந்த ஸ்தாபனத்தின் இலட்சியம் இம் மூன்று தானங்களும் இணைந்து நடக்க வேண்டும் என்பதே. பகவான் ராமகிருஷ்ணர் இந்த முயற்சியின் வெற்றிக்கு அருள்வாராக !''

பகவான் ராமகிருஷ்ணரின் சிறந்த சீடரான ராமகிருஷ்ணானந்தா என்ற அந்தப் பெரியார் அன்று செய்த இந்தப் பிரார்த்தனை இதுகாறும் இந்த ஸ்தாபனத்தைக் காத்து வந்திருக்கிறது. அன்று எளிமையாக ஆரம்பிக்கப்பட்ட இந்தச் சிறிய மாணவர் விடுதி இன்று பாரத நாடு முழுதும் கொண்டாடும் அளவில் பெரிதாக வளர்ந்து, மார்ச் 6-ந் தேதி பொன் விழாவும் கொண்டாடப்பட்டது.

''இந்த ஸ்தாபனம் நம் நாட்டிலுள்ள தெய்வ பக்திக்கு ஒரு சான்று. சுவாமி விவேகானந்தரிடம் மக்களுக்கு இருந்த விசுவாசம், பக்தி இவற்றின் சின்னம். தரும சிந்தனை இன்னும் நம் நாட்டில் முழுதும் மறைந்து விடவில்லை என்பதற்கு அறிகுறி. நம் தென்னாட்டு மக்களுக்குக் கல்வியிலுள்ள ஆர்வத்துக்கு ஒரு அத்தாட்சி'' என்று விழாவுக்குத் தலைமை வகித்த ராஜாஜி குறிப்பிட்டார்.

இந்த யுகத்தில் எல்லாம் அரசாங்கமே செய்ய வேண்டும் என்று மக்கள் நினைக்கிறார்கள். அரசாங்கமும் தானே எல்லாம் செய்து விடலாம் என்றும் நினைக்கிறது. இதைப் பற்றி ராஜாஜி குறிப்பிடுகையில், ''மக்கள் தங்கள் தரும சிந்தனையை விட்டு விடாமல் வளர்த்துக் கொண்டே போனால் தான் நாடு செழிப்படையும்'' என்று கூறினார்.

மக்களுடைய தரும சிந்தனையும், கல்வி ஆர்வமும், பக்தியும் சேர்ந்து உருவாகியதே ஸ்ரீ ராமகிருஷ்ண மாணவர் விடுதி. இதன் பொன் விழா, விவேகானந்த முனிவரின் சேவைக்கு மக்கள் செய்கிற பொன் விழா ஆகும். ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் ஆத்மாவுக்குச் செய்கிற ஒரு அஞ்சலி ஆகும்.

நமது தமிழ் நாட்டில், சுடர் விளக்காக நின்று மக்களுக்கு தர்மத்தையும், கடமையையும் காட்டி வருகிற இந்த ஞான நிலையம், மாணவர்களை மேலும் மேலும் நல்ல முறையில் உருவாக்கி நாட்டுக்கு வழங்கும் என்று எதிர்பார்க்கலாம்.

# காளிங்க நர்த்தனம்




ஆந்திராவில் நடந்த தேர்தலில் கம்யூனிஸ்டு கட்சி படுதோல்வி அடைந்தது.

## அவர் முயற்சி!

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸின் வேகத்தை அதிகப்படுத்த முயல்வதாக ரயில்வே மந்திரி திரு லால்பகதூர் சாஸ்திரி லோக் சபையில் தெரிவித்தார்.

## இந்தியா – இலங்கை நேச உறவு!













இந்திய சர்க்கார் இலங்கை சர்க்காரிடம் அதிருப்தி கொண்டிருப்பதாகத் தெரிவித்திருக்கிறது. அதுபோலவே இந்திய சர்க்காரிடம் இலங்கை சர்க்கார் அதிருப்தி கொண்டிருக்கிறது!

# என்ன சேதி?

## மூர்ச்சை அடைந்தார்கள்!

சென்ற இரண்டு வாரங்களில் சென்னை ராஜ்யமெங்கும்—சர்க்கார் காரியாலயங்களிலும், ரயில்களிலும், பஸ்களிலும், நடைபாதைகளிலும், ஏன் சில வீட்டில் உள்ளவர்கள் — அநேகர் 'பட்பட்' என்று மூர்ச்சை போட்டு விழுந்தார்களாம்! அப்புறம் சர்க்கார் காரியங்களும் இதர வேலைகளும் ஒழுங்காக நடக்க வேண்டுமே என்று மூர்ச்சை தெளிந்து எழுந்தார்களாம்! யாரா? வேறு யார்? ஆங்கிலம் இந்த நாட்டின் நிர்வாகத்தில் இருந்தும், கல்லூரிகளில் இருந்தும் விலகினால் நாட்டின் நிர்வாகம், அறிவு வளர்ச்சி எல்லாம் கெட்டு விடும் என்று சொல்லிக் கொண்டிருந்தார்களே அப்படிப்பட்ட பிரஹஸ்பதிகள்தான்!

சென்னை சட்டசபையிலும், சென்னை நகரசபையிலும், தமிழில் பட்ஜெட்டைத் தயாரித்து வெளியிட்டு விட்டார்கள். தமிழ் ஆட்சி மொழியாக, போதனை மொழியாக ஆக வேண்டும் என்று தமிழ்நாடெங்கும் கிளர்ச்சி வலுத்துக் கொண்டிருக்கிறது. இந்த வேளையில் தமிழ் மொழி வளர்ச்சிக்குச் சாதகமாகவே அறிஞர்கள் பலர் யோசனைகளைக் கூறி வருகிறார்கள். மேற்படி செய்திகள்தான் ஆங்கில மொழிக்கு அடிமையானவர்களைத் திக்குமுக்காடச் செய்து விட்டிருக்கிறது!

சென்னை சர்க்காரிலும், சென்னை நகரசபையிலும் தமிழ் மொழியில் 'பட்ஜெட்' சமர்ப்பித்து விட்டதால் ஆங்கிலத்தை ஒன்றும் அவர்கள் ஒதுக்கித் தள்ளி விடவில்லை. ஆங்கிலத்திலும் 'பட்ஜெட்' அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள் என்பது ஆங்கில மோகம் உள்ளவர்களுக்கு ஒரு சிறிது ஆறுதல் அளிக்கலாம். நாளடைவில் ஆங்கில மோகம் உள்ளவர்களும் ஆங்கிலத்தைப் போல தமிழையும் வளமுள்ள ஆட்சி மொழியாக்கத் தங்கள் ஆங்கில ஞானத்தைப் பயன்படுத்துவார்களானால் அவர்களைத் தமிழ் மக்கள் ஒரு நாளும் மறக்க மாட்டார்கள். தமிழ் நாட்டின் மதிப்பு உலகில் இன்னும் அதிகமாகும்.

## பாராட்டைப் பாராட்டுகிறோம்!

தமிழ் நாட்டு மக்கள் மிகவும் மகிழ்ச்சி அடையக் கூடிய விதத்தில் சங்கீத நாடக அகாடமியார் ஒரு அருமையான காரியம் செய்திருக்கிறார்கள். சமீபத்தில் தென்னாட்டுக் கலைஞர்கள் மூவருக்கு விருது வழங்கியிருக்கிறார்கள்.

நமது தமிழ் நாட்டு வித்வான்கள் பலருக்கும், குரு பரம்பரை என்று சொல்லக் கூடிய பழைய சங்கீத வழிக்கு ஒரு எடுத்துக் காட்டாக விளங்குபவர் மகாராஜபுரம் விசுவநாதய்யர். தமக்குச் சமதையாகத் தமது சிஷ்யர் ஒருவரைத் தயாரித்து அந்த உன்னத ஸ்தானத்தை அவருக்கு வழங்கிய பெருமை இவரையே சாரும். செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யரின் குரு என்ற பெருமை இவருக்கே உரியது. இத்தகைய மகா வித்வானைப் பாராட்டியது மிகவும் பொருத்தமான காரியமாகும்.

திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையைப் பற்றிப் புதிதாக ஒன்றும் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. தமிழ் நாட்டின் பூர்வீக வாத்தியமான நாகஸ்வரத்தில் இணையற்ற தேர்ச்சி பெற்று, மெய் சிலிர்க்கும் படியாக அமுத இசை வழங்கக் கூடிய மேதை அவர். அகில உலகத்திலும் புகழ் பரப்பிய நாதஸ்வர சக்ராதிபதி. இவருக்குக் கௌரவம் அளித்தது தமிழ் நாட்டுக்கே ஒரு கௌரவம் ஆகும்.

திருமதி பாலஸரஸ்வதி பரத நாட்டிய கலையின் புனர் அமைப்புக்கே முழு முதற் காரணமாக விளங்கியவர். அபிநய கலையில் ரஸமும், பண்பாடும் நிரம்பிய உத்தம வழியைக் கடைப்பிடிப்பவர். கலைச் சூழ்நிலையில் சங்கீதத்தோடேயே பிறந்தவர் என்று சொன்னால் பொருத்தமே.

விருது பெற்ற மூவரும் மூன்று துறைகளில் மாணிக்கங்கள். இந்த மூன்று மாணிக்கங்களையும் கௌரவித்ததன் மூலம் தமிழ் நாட்டையும், தமிழர் கலைகளையுமே கௌரவித்தவர் ஆகிறார்கள், அகாடமியார். இது குறித்து அவர்களை மிக மிகப் பாராட்டுகிறோம்!

## குன்றைச் சுமந்த குன்றக்குடி அடிகளார்!

இந்தோனேஷ்யாவுக்கும் இந்தியாவுக்கும் நெடுங்காலமாகத் தொடர்பு இருந்து வருகிறது. நம் பழந் தமிழ்ப் பேரரசர்கள் அங்கு தமிழ்க் கொடியை உயர்த்தி, தமிழ்ப் பண்பாட்டுக்கும், கலைகளுக்கும் உறைவிடமாகிய பல கலைக்கோயில்களை நிர்மாணித்தார்கள். சமீப காலத்தில் இந்தோனேஷ்யாவுக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்த பெருமை இந்தியாவையே சாரும்.

கிழக்கு ஆசியப் பகுதிகளுக்குத் தமிழ் நாட்டிலிருந்து குன்றக்குடி அடிகளார் விஜயம் செய்து தமிழின் பெருமையைப் பரப்பி வருவது தெரியுமல்லவா? அவர் இந்தோனேஷ்யாவிலும் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறார்.

இந்தோனேஷ்யாவின் தலைநகரான ஜோக் ஜாகர்த்தாவுக்கு அருகிலுள்ள பிரம்பாணன் என்ற இடத்தில் இந்தியக் கலையின் உறைவிடமாகச் சிவன் கோயில் ஒன்று இருக்கிறது. அக் கோவிலைச் சுற்றி 240 சிறு

கோயில்கள் இருந்து அவை காலப் போக்கில் சிதைந்து விட்டன. இவைகளெல்லாம் போய்ப் பார்த்து விட்டுக் குன்றக்குடி அடிகளார், "கல்லெல்லாம் கலையாக் இக் கலையெல்லாம் கடவுளாகக் கண்ட மாபெரும் தமிழ்க் குலத்தின் உயிர் நாடியை ஜோக் ஜாகர்த்தாவில் கண்டேன். அந்த மாபெரும் தமிழ் மரபு கலை வடிவில் மறைந்து கிடக்கிறது!" என்று மனமுருகிக் கண்ணீர் வடித்திருக்கிறார்.

தமிழ் நாட்டு நாகரிகத்தின் சின்னங்களாயுள்ள இந்தச் சிதைந்த திருக் கோயில்களை மீண்டும் செப்பனிட்டுத் திருத்தும் திருப்பணியில் அரசாங்கத்தார் ஈடுபட்டிருக்கிறார்கள். அந்தத் திருத்தொண்டில் குன்றக்குடி அடிகளாரும் கலந்து கொண்டு சேவை செய்தார். அவர் பெருங் கல்லைத் தூக்கிச் செல்லும் காட்சியைப் படத்தில் காணலாம்.



குன்றக்குடி அடிகள் தம் தோள் மீதே கல் சுமந்து திருப்பணி செய்கிறார்.

## இங்கிலாந்து தொழிலாளர்

'படிப்பது ராமாயணம் இடிப்பது பெருமாள் கோவில்' என்றும், 'படிப்பது திருவாசகம் இடிப்பது சிவன் கோவில்' என்றும் சைவம் வைணவம் என்ற பேதம் இல்லாமல் இரண்டு வகைப் பழமொழிகளும் நம் நாட்டில் வழங்கி வருகின்றன. இங்கிலாந்தில்தான் இரண்டு பழமொழிகளும் குறிக்கும் பொருளுக்கு ஏற்ற நடவடிக்கை ஒன்று சென்ற மாதம் நிகழ்ந்தது.

அதாவது இங்கிலாந்தில் வெஸ்ட் பிரோம்விச் என்னும் நகரத்தில், பம்பாய் ராஜ்யத்தைச் சேர்ந்த பிகா பட்டேல் என்பவரை பஸ் கண்டக்டராக நியமித்தார்கள். உடனே அந்த பஸ்ஸின் டிரைவர், "ஒரு கறுப்பு மனிதன் கண்டக்டராக நியமிக்கப்பட்டால் நான் பஸ் ஓட்ட மாட்டேன்" என்று மறுப்பு வெளியிட்டார். எப்படி அகில உலகத் தொழிலாளர்கள் யாவரும் ஓரினம், ஓர் குலம் என்று எல்லாம் முழங்கும் தொழிலாளி இம்மாதிரியான ஒரு மறுப்பு வெளியிட்டு. இந்தத் தாவா கிட்டத்தட்ட ஒரு மாத காலம், பஸ் நிர்வாகஸ்தர்களுக்கும். தொழிலாளர்களுக்கும் நடந்திருக்கிறது. பஸ் நிர்வாகஸ்தர்கள் 'இன, மத, நிற பாகுபாடு நாம் பார்ப்பதில்லை' என்று பிடிவாதமாகச் சொல்லி விடவே அந்த வெள்ளை டிரைவர் கறுப்புக் கண்டக்டருடன் ஒத்துழைக்கச் சம்மதித்து விட்டார்!

இந்தத் தகராறின் பயனாக இங்கிலாந்து தொழிற் சங்கக் காரியதரிசி ஆர்தர் டீசன் என்பவர் அரசாங்கத்தை மத, இன, நிற பாகுபாடு தொழில் துறையில் காட்டக் கூடாது என்று சட்டமியற்றும்படி வற்புறுத்தப் போவதாகக் கூறியிருக்கிறார்.

# காலஞ் சென்ற மேதை

தமிழ் நாட்டின் அரும் புதல்வர்களில் ஒருவரும், பொருளாதார சாஸ்திர மேதையுமான டாக்டர் பி. வி. நாராயணசாமி நாயுடு ராஜ்கோட்டில் தமது பதவி நிமித்தம் சென்றிருந்த போது சென்ற வாரம் மாரடைப்பால் திடீரென்று காலமான செய்தி எல்லோரையும் மிகுந்த துக்கத்தில் ஆழ்த்தி விட்டது.

ஸ்ரீ நாராயணசாமி நாயுடு இந்தியாவிலும் இங்கிலாந்திலும் படித்துப் பட்டம் பெற்றவர். அண்ணாமலை சர்வ கலாசாலையில் பேராசிரியராகவும், பிறகு துணைத் தலைவராகவும் இருந்து அப் பதவிகளைத் திறம்பட வகித்து வந்தார். 1939-ம் ஆண்டில் ராஜாஜி சென்னை முதன் மந்திரியாக இருந்த போது சேலம் ஜில்லாவில் மதுவிலக்கு அமுலுக்கு வந்தது அல்லவா? மதுவிலக்கினால் மக்களின் பொருளாதார நிலை முன்னேற்றம் அடைந்ததை ஆராய்ச்சியின் மூலம் நிரூபித்துக் காட்டிய பெருமை ஸ்ரீ நாயுடு அவர்களுக்கே உரியது. பிறகு அவர் பச்சையப்பன் கல்லூரியின் பிரின்ஸிபலாக இருந்து புகழ் பெற்றார். அதன்பின் அவர் சென்னை சர்க்காரின் பொருளாதார ஆலோசகராகப் பதவி வகித்ததுடன், வாய்தா பேர மார்க்கெட்டுகள், பங்கு மார்க்கெட்டுகள் நிலையைப் பற்றி விசாரித்து இந்திய சர்க்காருக்குத் தமது அரிய யோசனைகள் அடங்கிய அறிக்கையைச் சமர்ப்பித்தார்.



ஸ்ரீ நாராயணசாமி நாயுடு எழுதியுள்ள பல அபூர்வமான பொருளாதார ஆராய்ச்சி நூல்கள் அவருக்குச் சிறந்த ஞாபகச் சின்னங்களாக இருந்து வரும் என்பது நிச்சயம்.

எப்போதும் எல்லோருடனும் புன்முறுவல் ததும்பச் சகஜமாகப் பழகி, ஐம்பத்து நாலாவது வயதில் அகால மரண மடைந்த அப் பெரியாரின் மனைவிக்கும் புதல்வர்களுக்கும் நமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பளிச்துளி

"உண்ணாவிரதங்களுக்கு எந்த நிலைமையிலும் பம்பாய் சர்க்கார் ஊக்கமளிக்காது."

—செய்தி

*"எங்கள் உண்ணாவிரதத்துக்குச் சர்க்கார் ஊக்கமளிக்காதல்லவா!" என்று கேட்கிறார் பிச்சைக்காரர் ஒருவர்.*

●

"தென் இந்திய மாங்காய் சட்னியை யாராலும் மறக்க முடியாது!"

—சர்வதேச ஹோட்டல் சங்கத்தினர் பாராட்டு

*"அவ்வளவு புளிப்பா!" என்கிறார் ஒருவர்.*

●

"பயிர்களுக்குப் பூச்சிகளால் ஏற்படும் சேதத்தை ஒழிக்கச் சாத்தியமான நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கின்றன."

—சர்க்கார் செய்தி

*"அப்படியானால் நடவடிக்கையின் நகல் பூச்சிகளுக்கும் அனுப்பப்பட்டதா!" என்று கேட்கிறார் ஒருவர்.*

●

"பிரபல கள்ள நாணய கோஷ்டியினர் பிடிபட்டனர்!"

—பத்திரிகைச் செய்தி

*அவர்கள் நாணயம் அம்பலமாகி விட்டது போலும்!*

●

"கார் ஓட்டுபவர்களுக்கு ரஸ்தாவில் அடிக்கடி சங்கடம் விளைவிப்பவர்கள் சைக்கிள்காரர்கள் என்பது தெரிந்த விஷயமே!"

—ஒரு நீதிபதி

*"இருக்கலாம். ஆனால் கார் ஓட்டுபவர்கள் ஓயாமல் எல்லோருக்குமே சங்கடம் விளைவிப்பவர்களாயிருக்கிறார்கள் என்பதும் தெரிந்த விஷயமே!" என்கிறார் ஒரு பாதசாரி.*

●

"தி. கொ. ஆரம்ப ஆசிரியர்களுக்குச் சம்பள உயர்வு."

—செய்தி

*பேஷ்! அவர்களுக்கு நல்ல ஆரம்பம்!*

●

"திண்டுக்கல்லில் சிறு கலவரம். பலமான கல் வீச்சு."

—பத்திரிகைத் தலைப்பு

*அந்தக் கல் வீச்சில் திண்டுக்கல் விழாமல் இருக்க வேண்டுமே!*

அட்டைப் படம்

**கலையாழியின் கனவு**

இந்தக் கதையில் வரும் ஒரு முக்கிய நிகழ்ச்சி இந்த வாரத்து அட்டைப் படச் சித்திரமாகத் திகழ்கிறது.

"நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டங்களில் மத்திய சர்க்கார் ஏராளமாகப் பணம் போடத் திட்டமிட்டிருக்கிறது."

—டில்லிச் செய்தி

*காசைக் கரியாக்காமல் இவ்விதம் செய்வது பாராட்டுக்கு உரியதுதான்.*

●

"வேலையில்லாதார் சங்கத்தினர் ஒவ்வொரு வருஷமும் வேலையில்லாதார் அநுதாபதினம் கொண்டாடுவதென்று தீர்மானித்திருக்கின்றனர்."

— செய்தி

*பேஷ்! இது நல்ல வேலை!*

●

"கிருஷ்ணா ஜலத்தைக் கொண்டு வந்து பாலாற்றில் விடலாம் என்று ஒரு புதிய யோசனை கூறப்பட்டிருக்கிறது."

—செய்தி

*ஜலத்தைப் பாலில் கலப்பது ஒன்றும் புதிய விஷயம் அல்லவே!*

●

"சோகரஸம் எனக்குப் பிடிப்பதில்லை; சோக நாடகத்தைப் பார்க்கும்போது எனக்குத் தூக்கம் வந்து விடுகிறது."

—நேருஜீ

*பரவாயில்லையே. சில பேருக்கு அழுகையே அல்லவா வந்து விடுகிறது!*

●

"ரயில் வண்டிகளின் போக்குவரத்து நேரங்களைச் சரியானபடி காட்ட எல்லா ஸ்டேஷன்களிலும் நல்ல கடிகாரங்கள் தேவை."

—ரயில்வே அதிகாரி

*காலண்டர்கள் இருந்தால் சௌகரியமாக இருக்குமே என்கிறார் ஒரு பிரயாணி.*

●

"அணு ஆயுதத் துறையில் நம் முன்னேற்றத்தை எட்டிப் பிடிக்க ரஷ்யாவுக்குப் பத்து அல்லது பதினைந்து வருஷங்கள் பிடிக்கும்."

—ஒரு அமெரிக்க நிபுணர்

*அணு அணுவாகத்தானே முன்னேற வேண்டும் என்பது மேற்படி நிபுணரின் அபிப்பிராயம் போலும்!*

●

"ஹைதராபாத் நகரின் ஒரு பகுதியில் பதினெட்டு நிமிடம் வரை இருள் சூழும்படி ஒரு சிறு எலி செய்து விட்டது."

—செய்தி

*உடனே, அந்த எலியின் வாழ்விலும் இருள் சூழ்ந்து விட்டிருக்குமே!*

●

"ஆண்களுக்கும் பெண்களுக்கும் சரிநிகர் சம்பளம்."

—பம்பாய்ச் செய்தி

*எப்படியிருந்தால் என்ன! ஒருவருக்கும் அம்மாவின் தயவை எதிர்பார்த்துத் தானே ஆக வேண்டியிருக்கிறது!*

# மறுபடியும் சந்திப்பார்களா?

**ரஜனி**

கொழும்பு, மார்ச்கபீ 5உ

இலங்கை இந்தியப் பிரச்னைகள் மீண்டும் ஒரு நெருக்கடியான கட்டத்தை அடைந்து வருவதற்கான அறிகுறிகள் தோன்ற ஆரம்பித்துள்ளன. இலங்கைப் பிரதம மந்திரிக்கு எழுதியிருப்பதாக டில்லி ராஜ்ய • சபையில் நேருஜி அறிவித்த கடிதம் இரண்டு தினங்களுக்குப் பிறகுதான் இங்கு கிடைத்தது. டில்லி ஒப்பந்தத்தை இலங்கை அமுல் நடத்தும் போக்கிலே யிருந்த அதிருப்தி தெரிவித்து அந்தக் கடிதத்தை நேருஜி எழுதியிருந்தார். ஒப்பந்தத்தை இந்தியா ஒழுங்காக அமுல் நடத்தவில்லையென்று இலங்கை அரசாங்கம் புகார்க் கடிதம் எழுத எண்ணியிருந்த சமயத்தில் நேருஜி முந்திக் கொண்டு விட்டாரென்று இலங்கை அதிகாரிகள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். டில்லி ஒப்பந்த அமுல் இரு அரசாங்கங்களுக்கும் திருப்தியளிக்கவில்லை யென்பது இப்பொழுது தெளிவாகி விட்டபடியினால் அடுத்தபடியாக என்ன என்ற கேள்வி எழுந்திருக்கிறது.

## எட்டு ஒப்பந்தங்களால் பலனில்லை

ஆசியா-ஆப்பிரிக்க தேசப் பிரதிநிதிகள் மகாநாட்டுக்காக பாண்டுங் நகருக்கு அடுத்த மாத இறுதியில் விஜயம் செய்யும்பொழுது இலங்கை-இந்தியப் பிரதம மந்திரிகள் அங்கு சந்தித்து நிலைமையை ஆராயலாமென்று சிலர் கருதுகின்றனர். இலங்கையைத் தாயகமாகக் கொண்ட இந்திய வம்சாவளியினர்களுக்கு இலங்கை அரசாங்கம் நீதி நியாயத்துடன் பிரஜாவுரிமை வழங்கத் தயாரா யிருந்தாலொழியச் சமரசப் பேச்சுகளினாலும் ஒப்பந்தங்களினாலும் எவ்வித மான நன்மையும் ஏற்பட முடியாதென்பதை இந்திய வட்டாரங்கள் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வருகின்றன.

இவ்வித நெருக்கடியான நம்பிக்கை இழந்த சூழ்நிலையில் கூடவிருக்கும் இலங்கை ஜனநாயக காங்கிரஸின் வருடாந்திர மகாநாடு என்ன வழி காட்டப் போகிறதென்பதை இலங்கை இந்தியர்கள் ஆவலுடனும் கவலையுடனும் எதிர்பார்க்கிறார்கள். சமாதான மார்க்கங்களை யெல்லாம் இவ்வளவு வருட காலமும் பொறுத்திருந்து பார்த்து விட்டபடியினால் போராட்டம் நடத்திப் பார்ப்பதென்று காங்கிரஸ் தீர்மானிக்குமானால் அந்தத் தீர்மானம் யாருக்கும் ஆச்சர்யத்தைக் கொடுப்பதா யிருக்க முடியாது. இதற்கிடையில் காங்கிரஸில் பிளவை உண்டுபண்ணும் எண்ணத்தோடு காங்கிரஸ் தலைவர்களுக்கிடையில் கருத்து வேற்றுமை யிருப்பதாகச் சிங்களவர் ஆதரவில் நடக்கும் சில பத்திரிகைகள் மறைமுகமாகப் பிரசாரம் செய்து வருகின்றன. அடுத்த வருட காங்கிரஸ் தலைமைப் பதவிக்கு ஸ்ரீ எஸ். சோமசுந்தரம் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்படலாமென்று கூறப்படுகிறது.

## நீதிபதி நியமனப் பிரச்னை

பிரதம நீதிபதி நியமனப் பிரச்னையில் தோன்றிய தகராறு இன்னும் தீரவில்லை. நீதிபதி ஸ்ரீ ஸி. நாகலிங்கம் ஒரு தமிழரா யிருப்பதினால்தான் நியாயமாக அவருக்குக் கிடைக்க வேண்டிய பிரதம நீதிபதி பதவியில் ஸ்ரீ பஸநாயகா என்ற ஒரு சிங்களவரை அரசாங்கம் நியமித்திருப்பதாகத் தமிழ் மக்களிடையே ஒரு எண்ணம் உறுதியாக ஏற்பட்டுள்ளது. ஸ்ரீ நாகலிங்கம் பிரதம நீதிபதியாக நியமிக்கப்பட்டாலும் சுமார் ஆறு மாதங்களுக்கு மட்டுமே இப்பதவியை அவர் வகிக்க முடியும். பிறகு அவர் சட்டப்படி 62 வயதடைந்து ஓய்வு பெற்றிருக்க வேண்டும். ஓய்வு பெறும் சமயத்தில் அவரைப் பிரதம நீதிபதியாயிருந்து விட்டு ஓய்வுபெற அரசாங்கம் சந்தர்ப்பமளித்தால் எவ்வளவோ கௌரவமா யிருக்கும். தமிழ் மக்களிடையில் மனக்கசப்பு ஏற்படுவதையும் தவிர்த்திருக்கலாம். இதை விட்டு அர்த்தமில்லாத பல குதர்க்கவாதம் செய்து சுப்ரீம் கோர்ட்டிலிருந்து ராஜினாமாச் செய்யும் சூழ்நிலையை ஸ்ரீ நாகலிங்கத்துக்கு அரசாங்கம் ஏற்படுத்தியுள்ளது. தமிழ் மக்களை அரசாங்கம் நேர்மையுடன் நடத்தவில்லை யென்பதற்கு இதை ஒரு உதாரணமாகப் பலரும் சுட்டிக் காட்டுவதோடு பல பிரபல சிங்களத் தலைவர்களே இவ்விஷயத்தில் அரசாங்கத்தின் போக்கை வன்மையாகக் கண்டிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். இது சம்பந்தமாகச் சர்க்கார் மீது கொண்டுவரப்பட்ட ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானம் இவ்வாரம் பார்லிமெண்டில் விவாதத்துக்கு வர இருந்தது. கடைசி நேரத்தில் விவாதத்தை 15-ம் தேதிக்கு ஒத்தி வைத்திருக்கிறார்கள்.

## திருத்த மசோதா வருகிறது!

இமிகிரேஷன் சட்டத்துக்கு இலங்கை அரசாங்கம் ஒரு திருத்த மசோதாவை மார்ச் 15-ம் தேதி கொண்டுவரத் தீர்மானித்திருக்கிறது. இது ஏற்கெனவே கடுமையான சர்ச்சையிலிருந்து வந்த அதே மசோதாதான். இந்தியர்களுக்கு வாசபர்மிட்டுகளைப் புதுப்பித்துக் கொடுக்க மறுப்பதோடு காலாவதியாகிய வாசபர்மிட் உடையவர்களை வேலைக்கு வைத்திருப்பதைத் தடுத்து, பிழைப்புக்கு வழியில்லாமல் அவர்களை விரட்டியடிப்பதுதான் இம்மசோதாவின் இலட்சியம். பௌத்த தர்மத்தைக் கடைப்பிடிக்கும் நாடு அனுஷ்டிக்கும் மனித தர்மத்துக்கு இதுவும் ஒரு உதாரணம் போலும்!

## ஒரு குறிப்பு

ராஜாஜியைப் பற்றி, மலேயா முதலிய தீவாந்திரப் பிரயாண வதந்திகளுக்கு ஆதாரம் இல்லை. அவருடைய உடல் நிலை இதற்கெல்லாம் இடம் தராது.




**சுப்புடு**

வான வீதியிலே எவ்வளவோ நக்ஷத்திரங்கள் மின்னுகின்றன. பிரதி ஒன்றும் எதிர்பார்க்காது இயற்கை நியதியை ஒட்டித் தம் கடமையைச் செய்து வருகின்றன.

வானிலை ஆராய்ச்சிக் குழுவினரையும் ஏதோ சில கவிகளையும் தவிர வேறு யாராவது அவற்றை அண்ணாந்து பார்த்து அவைகளின் அழகை அனுபவிக்கிறார்களா? கிடையாது என்று உறுதியாகக் கூறலாம்.

ஆனால் சினிமா நக்ஷத்திரங்கள் விஷயத்தில் நாம் காண்பது என்ன? வயோதிகர் முதல் வாண்டுப் பயல்கள் வரை உத்சாகம் உந்த இந்த நக்ஷத்திரங்களின் தரிசனம் கிட்டத் தவம் கிடக்கத் தயாராயிருக்கிறார்கள்.

புது தில்லியில் நடந்த திரைப்படக் கலை அரங்கு இதற்கு ஒரு சான்று. ஒரு ஜன சமுத்திரம் தேசிய பௌதிக ஆராய்ச்சிக் கழகத்துக்குச் செல்லும் மார்க்கம் பூராவும் அலைமோதிச் சென்றது.

நக்ஷத்திரங்களுக்கெல்லாம் நக்ஷத்திரமாய்த் துருவ நக்ஷத்திரமாய் விளங்கும் நேருஜி திறப்பு விழா நடத்த இசைந்தது கலை அரங்கு நிர்வாகிகளின் பெரும் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்.

மஹால் மகோன்னதமாகச் சிங்காரிக்கப்பட்டிருந்தது. எங்கு பார்த்தாலும் கண்ணைக் கவரும் பூந் தொட்டிகள். வர்ண ஜால விசித்திரம் என்பார்களே அம்மாதிரி.

மேடை மீது ஆரணங்குகளும், ஆடவர்களும் கொலு வீற்றிருப்பது போல் அரை வட்டமாக அமர்ந்திருந்தார்கள். நர்கீஸ், ராஜ்கபூர், திலீப் குமார், உதயசங்கர், வாஸன், தேவகி போஸ், சர்க்கார், டேவிட் இவர்களெல்லாம் விநாடிக்கு ஒரு தரம் காமிராக் காரர்களின் விளக்கொளி தாளாது
கண் சிமிட்டி
கொண்டிருந்தார்கள்.

சரியாகப் பத்து
மணிக்கு நேருஜி வ
தார். வானையளாவிய
கரகோஷம். ஒ
தாவில் மேடை மீது
குதித்து ஆசனத்தில்
அமர்ந்தார்.

ராஜமன்னாரின்
முன்னுரையுடன்
விழா துவங்கிற்று
"நேருஜி இவ் விழ
வைத் துவக்க இசை
தது நம் பாக்கியப்
பார்மோசா எங்கே
திரைப்படக் கலை
அரங்கு விழா எங்கே
பல் வேறு அலுவ
களுக்கிடையே அவ
இந்த விழாவுக்கு வ
ஒத்துக் கொண்டதற்கு என்னுடைய மன
பூர்வமான நன்றி" என்று கூறினார்.

ஸ்ரீமதி தேவிகா ராணி, சுமக்க முடியாம
சுமந்து ஒரு பெரிய மாலையை நேருஜிக்கு
அணிவித்தார். இந்த வைபவத்துக்கு உயி
நாடிபோல் விளங்கியவர் தேவிகா ரா
தான். அவருடைய சலியா உழைப்பு
ஏனைய நடிகர்களிடமும், தயாரிப்பாளர்
களிடையும் அவருக்கு உள்ள செல்வாக்குமே
இந்த விழாவின் வெற்றிக்குக் காரண
என்றால் அது மிகையாகாது.

நேருஜி தம்முடைய தலைமை உரையி
சினிமாக்களின் மகத்தான பொறுப்பை
பற்றிச் சொன்னார். கொஞ்சம் கூட அரசிய
பிரச்னைகளைக் கலக்காமல், குறிப்பிட்ட வி
யத்தை மாத்திரம் பேசியது எல்லாரையு
ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. மேலும் அவ
ரொம்ப குதூகலமா யிருந்ததால் மனம் வி
டுப் பேசினார். ஒவ்வொரு வரியிலும் ஹா
யம் மிளிர்ந்தது. கேளுங்கள்:—

"ஒரு பிரதம நீதிபதி இந்த சங்கீத நாட
அகடாமிக்குத் தலைவரா யிருப்பதைப் பார்
கும்போது நம் நாட்டில் சட்டத்துக்கு ஒ
ஆபத்தும் இல்லை என்று தோன்றுகிறது.

'திரு வாஸன் அவர்கள் தாம் நான்கு நா
கழித்துப் பேசப் போகும் விஷயத்தின் நகலை
மூன்று நாளுக்கு முன் அனுப்பி வைத்தா
சினிமாத் தொழிலின் இன்னல்களைப் பற்
யும் இடுக்கண்களைப் பற்றியும் அதில் ரொம்
சாந்தமான முறையில் எழுதி யிருந்தார். இ
விஷயத்தை நான் எழுதி யிருந்தால் இவ்வள
சாந்தமாக எழுதியிருக்க மாட்டேன். கோப
கனலைக் கக்கி யிருப்பேன்."

பிரபல நடிகர் டேவிட் மேடையி விருந்தோரை ஒவ்வொருவராக நேருஜிக்கு அறிமுகம் செய்து வைத்தபின் முதல் நாள் வைபவம் கோலாகலமாக முடிந்தது.

பின்வரும் சந்தேகங்களை யாராவது தீர்த்து வைப்பார்களா?

1. தென்னாட்டில் சூரியன் அஸ்தமிப்பதே இல்லையா? அஸ்தமிக்கிறது என்றால் நமது நக்ஷத்திரங்களெல்லாம் எங்கே? பானுமதி, வைஜயந்திமாலா வெல்லாம் மறைந்து போய் விட்டார்களா? தென்னாட்டி விருந்து வந்தவர்களெல்லாம் 60 வயதைக் கடந்த குமாரர்கள்.

2. 800 பேர் உட்கார வேண்டிய கொட்டகைக்கு 2000 அனுமதிச் சீட்டுகள் வழங்கிய வள்ளல் பெருந்தகை யார்?

3. "அடுத்த புரோகிராம் என்ன?" என்று என்னைக் கேட்டார் பிருதிவிராஜ். குறுக்கும் நெடுக்கும் ஓடி உயிரை வாங்கிய நிர்வாகிகள் எல்லாம் சமயம் பார்த்து எங்கே போனார்கள்?

பிருத்விராஜிடம் கல்கி திரைப் பட அரங்கு மலரைக் கொடுத்த போது அதை உவகையுடன் ஏற்றுக் கொண்டு மணியாய்ச் சொன்னார். "கூடிய சீக்கிரத்தில் இந்த அமிழ்தினு மினிய தமிழ் மொழியை நன்றாகக் கற்றுக் கொண்டு தமிழ்ப் படத்திலேயே நடிக்கப் போகிறேன்." * * *







1. பிரதம மந்திரி நேருஜி நட்சத்திர விழாவைத் துவக்கி வைக்க விஜயம் செய்தபோது திரு டேவிட், பிரதம நீதிபதி ராஜமன்னார், திரு பிருத்வி ராஜ் கபூர், திருமதி தேவிகாராணி முதலியவர்கள் உற்சாகமான வரவேற்பு அளித்தனர்.

2. விழா மேடையில் திருமதி தேவிகாராணி, திரு எஸ்.எஸ்.வாசன், திரு பி. என். ரெட்டி ஆகியவர்கள் அமர்ந்திருப்பதைக் காணலாம்.

3. பாரதத்தின் உப ஜனாதிபதி டாக்டர் ராதா கிருஷ்ணன், திருமதி இந்திரா காந்தி மற்றும் பல வெளி நாட்டுப் பிரமுகர்களும் வந்திருந்து நட்சத்திர விழாவைச் சிறப்பித்தனர்.

எதிர்ப்பக்கத்தில் உள்ள படத்தில் பாரதநாடெங்கும் இருந்து வந்திருந்த சினிமாக் கலை அரங்கின் பிரதிநிதிகளில் ஒரு சிலரைக் காணலாம்.

# நம்பிக்கை



அன்னபூரணி

கதிரவன் கொஞ்சம் கொஞ்சமாய் மலை வாயிலில் மறைந்து கொண்டிருந்தான். பட்சி இனங்கள் தம் தம் இருப்பிடம் நோக்கிக் கோஷ்டி கோஷ்டியாகப் பறந்து சென்று கொண்டிருந்தன. காக்கைகள் கூட்டம் கூட்டமாகக் குளக்கரையில் கூச்சல் போட்டவாறு குளித்துக் கொண்டிருந்தன. மாடுகள் மந்தை மந்தையாகத் தொழுவத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. பகலவனின் மஞ்சள் கிரணம் பட்டு ஒவ்வொரு பொருளும் அலாதி அழகுடன் சோபிக்கும் அந்த மாலை அழகு என் மனத்தைக் கவர்ந்தது.

தூரத்தில் கத்திரித் தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்த ஒருவன்,

"விழலுக்கு நீர்பாய்ச்சி மாயமாட்டோம்–வெறும்
வீணருக் குழைத்துடலம் ஓயமாட்டோம்"

என்று துள்ளும் மகிழ்ச்சியுடன் கம்பீரமான குரலில் பாடிக் கொண்டிருந்தான்.

நான் இயற்கை அன்னையின் தெய்வீக அழகை ரசித்தவாறு அந்தக் குளக்கரையில் ஒரு பாறையின்மேல் உட்கார்ந்திருந்தேன். எனக்கு எதிர்க் கரையில் பெண்கள் வண்ணச் சேலை உடுத்தித் தண்ணீர் மொண்டு சென்று கொண்டிருந்தார்கள்.

"யார் அங்கே!" என்ற குரல் கேட்டுத் திரும்பினேன். குளத்து அருகில் தென்னங் கீற்றினால் வேயப்பட்ட ஒரு சிறிய குடிசை காட்சி யளித்தது. வாசலில் காலை நீட்டியவாறு ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள். அவளை எனக்கு நன்றாகத் தெரியும்.

"என்ன பாட்டி! என்ன சேதி!" என்று அவளை விசாரித்தேன்.

"யாரு! அய்யர் வீட்டுத் தம்பியா! ஏன் தம்பி! நீ எப்போ வந்தாய்! இப்பவாவது உனக்குத் தாய் தகப்பன் நினைப்பு வந்ததே!" என்றாள் கிழவி.

நான் பதில் சொல்வதற்கு முன்பாக, "ஏன், தம்பி! நீ வேலைக்குப் போய் நாலு வருசம் ஆகிறதில்லையா! நடுவிலே பெத்தவர்களைப் பார்க்கக்கூட இந்தப் பக்கம் வரவில்லையே! அப்படி என்ன வேலை தம்பி!"

"என்ன செய்வது! லீவு கிடைக்கவில்லை,பாட்டி!"

"அத்தனை தொலைவில் போய் என்ன வேலை பார்க்கறீங்களோ, எனக்குத் தெரியவில்லை. பார்க்கிற வேலையை உள்ளூரிலேயே பார்க்கக் கூடாதா!' என்று கேட்டாள் கிழவி.

அவளுக்கு நான் என்ன பதில் சொல்லி என்ன: அவளுக்குப் புரியப் போகிறதா! அதனால் பதில் ஒன்றும் சொல்லாமல் இருந்தேன்.

"கிராமத்திலேயே உங்கள் அப்பாவுக்கும் ஒத்தாசையா யிருக்கும். உங்கள் அப்பா ஆறு பிள்ளைகளைப் பெத்தும் நீங்கள் ஒருவராவது அவர் பக்கத்திலே இல்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு மூலையிலே இருக்கிறீங்க. நீ குழந்தையாக இருக்கிற பொழுது உன் அப்பாரு என்ன சொல்லுவார் தெரியுமா! 'என் ஆறு பிள்ளைகளிலே கடைக் குட்டி ஒருவன்தான் என் வேலையைப் பார்த்துக் கொண்டு என்னோடு இருப்பான். இவனுக்குப் படிப்பு வாசனையே கிடையாது என்று ஜாதகத்திலே சொல்லி இருக்கிறது' என்பார். நீ என்னடா என்றால் எல்லோரையும் விடக் கூடப் படித்து விட்டு வடக்கே போய் விட்டாய்! நாலு வருசமா உன்னைப் பார்க்காமல் ஐயர் என்னமா துடித்துப் போய் விட்டார், தெரியுமா! அவர்களுக்கு எல்லோரையும்விட உன்னிடம்தான் அதிகப் பிரியம். உம்......பெற்ற மனம் பித்து. பிள்ளை மனம் கல்லு!" என்று கூறி முடித்தாள் கிழவி.

பாட்டி இடுப்பில் செருகி யிருந்த துணிப் பையைத் திறந்து வெற்றிலை போட்டுக் கொள்ள ஆரம்பித்தாள். அவளுக்கு வயது அறுபத்தைந்து ஆகிறது. ஆயினும் உடற் கட்டுத் தளரவில்லை. உழைத்து உழைத்து உரமேறி இருந்தது. அவள் வீட்டுக்குப் பின் பக்கத்தில் உள்ள தோட்டத்தில் என் பார்வையைச் செலுத்தினேன். பச்சைப் பசேல் என்று தோட்டம் செழுமையாகக் காட்சி யளித்தது. தக்காளிச் செடியில் செக்கச் செவேல் என்று தளதளப்புடன் பழங்கள் நிறைய இருந்தன. கத்திரிச் செடிகள் ஒன்றை யொன்று போட்டி போட்டுக் கொண்டு வளர்ந்திருந்தன. கண்ணே பட்டுவிடப் போகிறதென்று நான் பார்வையை வேறு புறத்தில் திருப்பினேன். கிழவியைப் பற்றிய சிந்தனையில் என் மனம் லயித்தது.

உலகில் சிலர் கஷ்டப்படுவதற்கே பிறந்திருக்கிறார்கள். வாழ்வில் சுகம் என்றால் என்ன என்றே

அறியாமல் பிறருக்காகவே உழைத்து உழைத்து ஓடாகி விடுகிறார்கள். அவர்களது அந்த உழைப்பை, அதனால் பயன் பெற்றிருப்பவர் கூடச் சிந்தித்துப் பார்ப்பதில்லை. அவர்களது உதவிக்குக் கைம்மாறாகக் கொடுமைகூடப் படுத்துகிறார்கள். கடைசியில், நீ யாரோ நான் யாரோ என்று சொல்லவும் அவர்கள் அஞ்சுவதில்லை.

கிழவி பாஞ்சாலியும் ஒருவரை அப்படி உழைத்துப் பாடுபட்டு வளர்த்துக் கடைசியில் ஆதரிக்க ஆளின்றி நிற்பவள்தான். ஆனால் அவளிடத்தில் தளராத நம்பிக்கை இருந்தது. அவள் வாழ்க்கை வரலாற்றை நான் என்னுடைய தாயார் மூலம் அறிந்து கொண்டிருந்தேன்.

பாஞ்சாலியின் பெற்றோர்கள் அவளுக்குக் கல்யாணமாகி ஆறு மாதத்துக் கெல்லாம் ஒருவர் பின் ஒருவராக மறைந்தனர். கையில் ஆறுமாதப் பெண் குழந்தையுடன் தன் கணவனையே நம்பி இருந்தாள். பாழும் காலரா அவனைச் சோதித்தது. அவள் கணவன் அதன் கடும் பசிக்குப் பலியானான். அப்போது பாஞ்சாலிக்குப் பதினெட்டு வயது. உற்றார் உறவினர் எல்லாரும் அவள் தன்னிடம் வந்து விடுவாளோ என்று அஞ்சி விலகினர். ஆனால் அவள் உறவினரிடம் போய்த் தன்மானம் இழந்து நிற்க வில்லை. தன் கணவன் தனக்கு ஆஸ்தியாக விட்டுச் சென்ற தோட்டத்தையும் மாடுகளையும் கொண்டு தன் பலத்தில் நின்று வாழ்க்கையை ஓட்டினாள்.

அவள் தன் பெண்ணைக் கண்ணின் கருமணியென வளர்த்தாள். அழகே உருவான தன் பெண்ணுக்குத் திருமேனி என்ற அழகான பெயரையும் சூட்டினாள். தன் அருமைப் பெண்ணைப் பள்ளியில் படிக்கவும் வைத்தாள். ஆறாவது வரை படித்தாள் திருமேனி. அவள் அறிவும் குணமும் ஒருங்கே அமையப் பெற்றவள். வயது வந்ததும் நல்ல இடமாகப் பார்த்துத் திருமேனிக்கு மணம் முடித்து வைத்தாள். மாப்பிள்ளை எட்டாவது வரை படித்து விட்டுக் கிராமத்திலேயே விவசாயத்தில் ஈடுபட்டிருந்தான். இரண்டு வருஷம் தன் மகள் நடத்தும் இன்ப வாழ்க்கையைக் கண்டு மனம் மகிழ்ந்தாள். மூன்றும் வருஷம் நற்குணமே உருவாய் இருந்த மாப்பிள்ளை கெட்ட வழியில் இறங்கத் தலைப்பட்டான். அவனது தீய இச்சைக்குத் திருமேனி தடை போட முயலவே, திருமேனியை இரக்கமில்லாமல் உதைக்கவும் அடிக்கவும் ஆரம்பித்து விட்டான்.

அந்த அரக்கனிடம் அடிபட்டுச் சாவதற்காகவா பெண்ணை அப்படி அருமையாக ஊட்டி வளர்த்தாள்! பெற்ற வயிறு கொதித்தது.

ஒரு முறை திருமேனியின் கணவன் பெரிய திருட்டில் பிடிபட்டுச் சிறை சென்றான். அப்போது அவள் நிறை மாதக் கர்ப்பிணி. பாஞ்சாலிக்கு வெளியில் தலைகாட்டவே அவமானமாக இருந்தது. திருமேனி ஒரு பிள்ளையைப் பெற்றுத் தாயிடம் ஒப்படைத்து விட்டுப் பெற்ற பத்தாம் நாளே கவலையற்றுக் கண்களை மூடி விட்டாள்.

அதிலிருந்து பேரனை வளர்க்க ஆரம்பித்தாள். அந்தப் பேரனின் முகத்தைக் கண்டு கண்டு அவளுக்குப் பெண் உண்டாக்கி விட்டுச் சென்ற புண் சிறிது சிறிதாக ஆறியது.

பேரன் பெரியவனானால் தன் கஷ்டம் விடியும், அவனை ஆளாக்க வேண்டும் என்ற ஒரே நம்பிக்கையுடன் பாலும் பழமும் ஊட்டி ஒரு குறையும் காணவண்ணம் வளர்த்தாள். அவனுக்கும் எனக்கும் ஒரே வயது. அவன் என்னோடு சேர்ந்து படித்தவன். சுந்தரம் என்று அவனுக்குப் பெயர். நல்ல பொருத்தமான பெயருங்கூட. என்னோடு உயர்நிலைப் பள்ளி வரை படித்தவன். ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்தான். நான் கல்லூரியில் சேர்ந்து படித்தேன்.

அதில் தேர்ச்சி பெற்று எங்கள் ஊருக்குப் பக்கத்துக் கிராமத்தில் ஆசிரியராய் அமர்ந்தான். ஒரு வருடம் நன்றாய் வேலை பார்த்தான். கிழவி பேரனுக்கு மணம் முடிக்க விரும்பினாள். அதை முடித்து விட்டால் அவள் கடமை தீர்ந்து விடும் அல்லவா! ஆனால் சுந்தரம் அவளுக்கு அந்த சிரமத்தை வைக்க விரும்ப வில்லை. தானே பெண் பார்த்துக் கொண்டான். பார்ப்பதற்குப் பெண் நன்றாகத்தான் இருந்தாள். ஆனால் குணம் நடத்தைதான் நேர்மாறாக இருந்தது. அதனால் கிழவி, "அவள் வேண்டாம். உனக்கு நல்ல குணம் வாய்ந்த பெண்ணை நான் மணமுடித்து வைக்கிறேன்" என்றாள்.

'மணந்தால் அவளைத்தான் மணப்பேன்' என்று சுந்தரம் பிடிவாதமாக இருக்கவே, கிழவி அவளையே அவனுக்கு மணம் முடித்து வைத்தாள். ஆனால் கிழவிக்கும் அவளுக்கும் குணம் ஒத்து வரவில்லை. தினம் பொழுது விடிந்தால் பொழுது போனால் சண்டை. மனைவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு, தன்னை அருமையாக வளர்த்த பாட்டியுடன் சண்டை போட்டுக் கொண்டு, ஒருநாள் சுந்தரம் தன் மனைவியோடு பட்டணம் போய் விட்டான். பட்டணம் போகத்தான் போனானே! பாட்டியிடம் சொல்லிக் கொண்டாவது போகலாம் அல்லவா! அதுதான் இல்லை. பாட்டி பக்கத்து ஊர்ச் சந்தைக்குப் போயிருந்த சமயம்

# கல்கி

(வாரப் பதிப்பு)

## சந்தா விவரம்

★

| | | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|---|
| இந்தியா<br>இலங்கை | ரூ. | 13-0-0 | 6-8-0 |
| பர்மா<br>மலேயா<br>வெளிநாடு | ரூ. | 16-4-0 | 8-2-0 |

குறிப்பு:—வி. பி. பி. மூலம் அனுப்புவது கிடையாது. தயவு செய்து முன் பணம் அனுப்ப வேண்டும். இலங்கை நேயர்கள் மட்டும் வி. பி. பி. மூலம் சந்தாத் தொகையைச் செலுத்தலாம்.

கடிதம் எழுதும்போது சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

மானேஜர் - கல்கி காரியாலயம் - சென்னை


பார்த்து, அவன் சேர்த்து வைத்திருந்த நூற்றைம்பது ரூபாயையும் அவனுக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டு கம்பி நீட்டிவிட்டான். பாட்டியின் வேதனையை எப்படி எழுத்தில் பதிக்க முடியும்!

நான் அந்தக் காலத்தில் கல்லூரிப் படிப்பை முடித்து விட்டு வேலையில்லாமல் வீட்டில் பொழுது போக்கிக் கொண்டிருந்தேன். சாயங்கால வேளையில் இதே குளக்கரையில் இதே பாறையில்தான் நான் வந்து உட்காருவது வழக்கம். பாட்டியும் தன் வேலைகளை முடித்துக் கொண்டு இப்போது உட்கார்ந்திருக்கும் இதே இடத்தில் வந்து உட்கார்ந்து கொள்வாள். தான் பிறந்தது, பெற்றோர் இறந்தது, பின்னர் கணவன் தன்னை நிர்க்கதியாக விட்டுச் சென்றது, பெண் கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுத்தது, கிளி சித்திரவதைப்பட்டு இறந்தது, பேரனைச் செல்வமாக வளர்த்துக் கடைசியில் ஒரு பெண் பேய்க்கு உயிருடன் பலி கொடுத்தது ஆகியவற்றை அடுக்கு அடுக்காகச் சொல்லி அங்கலாய்ப்பாள்.

பாட்டியின் சோகக் கதையைக் கேட்டு அங்குள்ள ஆடுகள், மாடுகள், பறவைகள் எல்லாம் தங்களை மறந்து அசையாமல் நின்று துயரத்தில் மூழ்கும். இது அந்தக் காலத்திய தினசரிச் சம்பவம்.

★

எனக்கு இந்தியத் தலைநகரில் நல்ல உத்தியோகம் கிடைத்ததால் வயிற்றுப் பாட்டை எண்ணி அங்கு சென்றேன். பின் ஊர்ப் பக்கமே வரவில்லை. நான்கு வருடத்தைத் தள்ளிவிட்டு இப்போது வந்திருக்கிறேன். இந்தக் கிழவி இன்னமும் தன் கையை நம்பித்தான் பிழைக்கிறாள் என்று சொல்லாமலே சொல்லின அந்தத் தோட்டமும், தொழுவமும். சிந்தனை முதிர்ந்து கிழவியைத் திரும்பிப் பார்த்தேன். கன்றுப்பை உருட்டி வாயில் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் வீட்டுக்குள்ளிருந்து குழந்தையின் அழுகுரல் கேட்டது. கிழவி எழுந்து உள்ளே சென்றாள். வரும்போது ஒரு குழந்தையுடன் வெளியே வந்து உட்கார்ந்து கொண்டாள். அதற்கு இந்தக் கன்னம் மாற்றி அந்தக் கன்னத்தில் முத்த மழை பொழிந்தாள். ஏதேதோ சொல்லிக் கொஞ்சினாள். குழந்தையின் அழுகை நின்றது.

"ஏன், பாட்டி! ஏது இந்தக் குழந்தை? தத்து எடுத்திருக்கிறாயோ!" என்றேன்.

"என்ன, தம்பி! உங்கள் அப்பா சொல்லவில்லையா! இது என் பேரன் சுந்தரத்தின் மகள். நீ இங்கே இருக்கிறபோது ஓடிப்போய்விட்டானே, நினைவில்லையா! பட்டணத்திலே போய் வாத்தியார் வேலை பார்த்தானாம். அவன் பெண்டாட்டி இரண்டு வருடம் இவனோடு சந்தோஷமாக வாழ்ந்து வந்தாள். அப்புறம், இந்தப் பெண்ணைப் பெற்றுப் போட்டு விட்டு இவ்வுலகை விட்டே போய்விட்டாள். அவன் என்னசெய்வான், பாவம்! என்னிடம் வந்து அழுதான். 'நான் குழந்தையை வளர்க்கிறேன். நீ கவலைப்படாமல் இரு' என்று குழந்தையை வாங்கிக் கொண்டேன். பிறகு இங்கு ஆறுமாதம் இருந்தான். அப்புறம் இன்னொருத்தியைக் கலியாணம் செய்து கொண்டு போய் விட்டான். கொஞ்சநாள் பத்து ரூபாய் அனுப்பினான். இப்போது அதுவும் நின்று விட்டது. நான் வளர்க்கிறேன் இந்தச் செல்லக் குட்டியை!" என்று கூறி, அதன் சிறு வாயிலும் ரோஜா நிறக் கன்னத்திலும் மாறி மாறி முத்தம் கொடுத்தாள். கபட மறியாத குழந்தை பேரொலி செய்து சிரித்துப் பாட்டியை மகிழ்வித்தது.

"பிள்ளைக் குழந்தையாயிருந்தால் பரவாயில்லை. பெண் குழந்தையாயிற்றே பாவம்!" என்றேன்.

"என்ன தம்பி அப்படிச் சொல்கிறாய்! பிள்ளை சாதிப்பதைப் பெண் சாதிக்காமலா போய்விடும்! இதை என் அநுபவத்திலே கண்டேன், தம்பி! என் மாப்பிள்ளை, பேரப்பிள்ளை இவர்களுக்காக நான் எத்தனை பாடுபட்டேன்! வாயைத் திறந்து ஒருநாள் இப்படிக் கஷ்டப்படுகிறாயே என்று சொல்லியிருப்பார்களா! என் பெண் தினமும் எனக்காக இத்தனை கஷ்டப்படுகிறாயே என்று உருகும். சாகிறபோது கூட, 'நான் பிறந்ததினாலே உனக்குக் கஷ்டம்தான், அம்மா! ஒரு சுகமும் இல்லை. எனக்காக எத்தனை பாடுபட்டாய்! உனக்கு ஒரு நாள் கூட நான் ஒத்தாசை செய்யவில்லையே! என்னை வளர்க்கப்பட்ட கஷ்டம் போதாதென்று இந்தப் பயலை வேறு உன் பொறுப்பிலே விட்டு விட்டுப் போகிறேன். நீதான் இதை அப்பனிடம் விடாமல் வளர்க்கணும்! இந்த வகையில் உனக்கு ஒரு புண்ணை ஏற்படுத்தி விட்டுப் போகிறேனே' என்று கதறினாள்! எதற்கு இந்தப் பழைய கதையைச் சொன்னேன் என்றால் நீ பிள்ளை என்றால் தேவலை என்றாயே அதற்குத்தான். தாய்க்குப் பெண்ணு எப்போதுமே ஒசத்தி தான்" என்று கூறினாள்.

கிழவிக்கு இத்தனை அநுபவப்பட்டும் வாழ்க்கையில் நம்பிக்கையே போக வில்லை. இந்தப் பெண் பின்னால் ஏதோ சாதிக்கப் போவதாய்த் தான் இன்னமும் நினைக்கிறாள்.

நான் கைக் கடிகாரத்தைப் பார்த்தேன். ஏழு அடிக்கச் சில நிமிஷங்களே இருந்தன. கதிரவன் நன்றாய் மறைந்து விட்டான். இருள் அரசன் சிறிது சிறிதாகத் தன் ஆட்சியைச் செலுத்தத் தொடங்கினான். நான் எழுந்தேன். கையைச் சோம்பல் முறித்துக் கொண்டே, "வருகிறேன், பாட்டி! நேரமாகி விட்டது" என்று பாட்டியிடம் விடைபெற்று வீட்டை நோக்கி நடந்தேன்.





தாயார் மிகவும் மனக்கிலேசமுற்றாள். அவளது குழந்தை, எதிர்பார்த்த அளவுக்குப் புஷ்டி பெறவில்லை- இரவெல்லாம் குழந்தை நிம்மதியின்றியும், பகல் வேளைகளில் சதா சிணுங்கிய வண்ணமுமிருந்தது.

பிறகு.....அவள் சகோதரி 'க்ளாக்ஸோ' வைச் சிபாரிசு செய்தாள்— குழந்தையும் 'க்ளாக்ஸோ' வினால் கிரமமாகத் தேறிவந்ததுமின்றி எப்போதும் சந்தோஷமாயும் இருந்து வந்தது.






திடமான எலும்புகளும் பற்களும் வளர்வதற்கென விடமின் டி யும், நல்ல ரத்தம் உண்டாவதற்காக இரும்புச்சத்தும் சேர்த்துத்தயாரிக்கப்பட்ட 'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.

அன்னையின் கவலைகள் அகன்று விட்டன. குழந்தையும் நன்கு உண்டு, உறங்கி, கிரமமாக புஷ்டியும் பெற்று வளர்கிறது. குழந்தையை 'க்ளாக்ஸோ' போஷாக்கில் இருத்திய பின்னர் எத்தகைய ஆச்சரியகரமான மாறுதல் !

# Glaxo

**"க்ளாக்ஸோ" ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.**

'க்ளாக்ஸோ' லேபரடரீஸ் (இந்தியா) லிமிடெட்

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

# இலக்கியக் கர்த்தாக்களிடையே வினோபா

சுரேஷ் ராம்

பீஹாரிலிருந்து ஒரிஸ்ஸாவுக்கு வரும் வழியில் ஸ்ரீ வினோபா பாவே இருபத்தைந்து நாட்கள் வங்காளத்தில் கழித்தார். அந் நாட்களில் அவர் வங்காளத்தின் உயிர்த் துடிப்பை நன்ருகத் தெரிந்து கொள்ள முடிந்தது. அவர்களின் வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களை, அவர்களுடன் நெருங்கிப் பழகியதில் தெரிந்து கொள்ள முடிந்தது. வினோபா பாவேக்கும் வங்க இலக்கிய கர்த்தாக்களுக்கும் ஒரு சந்திப்பு ஏற்பட்டது. இதுதான் அவர் வங்க மக்களைத் தெரிந்து கொள்ளும் வகையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் எல்லாம் மிக முக்கியமானது என்பேன்.

இந்தச் சந்திப்பு ஜனவரி 19ம் தேதி மிட்னபூரில் நிகழ்ந்தது. வங்க இலக்கியத்தில் மிகவும் புகழ் பெற்ற பல பேராசிரியர்கள் வினோபாபாவேயைத் தரிசிக்கவும், அவரது அறிவுரைகளைக் கேட்கவும் வந்திருந்தனர். சர்வ ஸ்ரீ தாராசங்கர் பானர்ஜி, ஸஜனி காந்ததாஸ், கஜேந்திரதாஸ், பிரமதா நாத் கோஷ் ஆகிய பல எழுத்தாளர்களும், கலைஞர்களும் வந்திருந்தனர். அந்தச் சந்திப்பு பரம பவித்திரமான சந்திப்பாகவே விளங்கியது.

இலக்கிய கலைஞர்கள், மகான் வினோபா பாவேக்கு கவி ரவீந்திரநாதரின் 'அக்ரதூத்' என்ற பாடலைப் பாடி வரவேற்பு கூறினர். அந்தப் பாடலைப் பாடியபோது ஒவ்வொருவர் உள்ளத்திலும் அமரகவி ரவீந்திரர் அந் நாட்களிலேயே வினோபாஜியை மனத்தில் கொண்டு இந்தப் பாடலைச் செய்தாரோ என்று தோன்றிக் கொண்டிருந்தது. பிறகு உணர்ச்சி மிக்க வரவேற்புரை வாசித்தளிக்கப்பட்டது.

மதிப்பும் அன்பும் கலந்த அம் மொழிகளைக் கேட்டபோது வினோபாவின் மெய் புளகித்துவிட்டது. கண்களை மூடிய வண்ணம் சில நிமிஷ நேரம் இருந்து விட்டார். பிறகு தான் என்றும் மறக்க வொண்ணு அற்புதப் பேச்சு ஆரம்பமாயிற்று.

*　　　*　　　*

சென்ற ஆறு ஆண்டுகளாக வினோபாஜியுடன் கூடவே இருந்து வருகிறேன். அவரது பேச்சுக்கள் ஒன்றைவிட ஒன்று அற்புதமாக விளங்கும் அதிசயத்தைப் பார்த்து வந்திருக்கிறேன். ஆனுல் அன்று பேசிய பேச்சு என்னை அதிசயத்தின் எல்லைக்கே கொண்டு வந்து விட்டது. அவ்வளவு அற்புதமாக இருந்தது! சரஸ்வதியின் தனிப் பெரும் கடாக்ஷம் பெற்ற பேச்சு என்ருல் இது தானே என்று எண்ணும்படியாக இருந்தது.

வினோபா பாவுக்குப் பல மொழிகள் தெரியும். ஆனுல் எல்லாவற்றையும் பேசும் அளவுக்கும் எழுதும் அளவுக்கும் தெரியாது. ஆகவே, வினோபா தாம் வங்க மொழியில் பேச இயலாமைக்கு வங்க மக்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு தம் பேச்சைத் துவக்கினுர்:

"நான் நம் தேசத்திலுள்ள ஏறத் தாழ எல்லா மொழிகளிடமும் அன்புப் பரிச்சயம் செய்து கொண்டிருக்கிறேன். ஆனுல் அவற்றுடன் ஞானப் பரிச்சயம் வைத்துக் கொள்ள முடியவில்லை. அதற்குப் போதிய நேரமும் அவகாசமும் எனக்குக் கிடைக்கவில்லை. என் வாழ்க்கையில் பல சமயங்களில் எழுத்தாளர்களைச் சந்தித்துப் பேசி யிருக்கிறேன். ஜான்ஸி, கயா, பட்னு, கிரகாங் முதலிய பல இடங்களில் சந்தித்து இருக்கிறேன். இப்பொழுது சரஸ்வதியின் உறைவிடமாகிய வங்காளத்துக்கே வந்து விட்டேன். வங்காளம் தேசத்தின் கிழக்குப் பகுதியிலிருப்பதாகச் சொல்லுகிருர்கள். உலகத்தை உய்விக்க ஒளிவீசி வரும் சூரியன் உதிக்கும் திசையில் — கிழக்கில் — இருப்பதாகச் சொல்லுகிருர்கள். 'கிழக்கு' என்று மட்டும் ஒன்றில்லை. 'தூரக் கிழக்கு' என்று மற்றுமோர் திசையும் இருக்கிறது. மேலும் உலகம் உருண்டை வடிவானது. இதில் சுற்றி வந்தால் நாம் எது கிழக்கு என்று சொல்லுகிருேமோ அது மேற்காகவும், மேற்கு கிழக்காகவுமே ஆகி விடுகின்றன.

"பாரதத்தின் தற்கால இலக்கியம் முதன் முதலில் வங்கத்தில்தான் பிறந்தது. இது சரித்திரம் கூறும் உண்மை. இந்த இலக்கியத்தை வளம் பெறச் செய்தவர்களில் இருபது பேரை இருந்த இடத்திலிருந்து நாம் நினைவு கூர்ந்து கூறி விடலாம். ஆனுல் இவர்கள் அத்தனை பேரையும் பொது மக்கள் அறிவார்களா! — மாட்டார்கள். அவர்களுக்கு மூன்று பேரைத்தான் தெரியும்— பங்கிம் சந்திரர், சரத்சந்திரர், ரவீந்திரநாத் டாகூர். இவர்களை அறியாதவர்களே இருக்க மாட்டார்கள். பாரத நாட்டு இலக்கிய வானிலே அழியாப் புகழ் பெற்றவர்கள் அல்லவா!

"இம் மூவரிலும் காளிதாஸனுக்குப் பிறகு ரவீந்திரநாத டாகூர் அந்த உயர்ந்த புகழைப் பெற்ருர். பாரதப் பண்பாட்டுக்கு இலக்கிய உருவமும் வேகமும் ரவீந்திரர்தான், காளிதாஸனுக்குப் பிறகு கொடுத்தவர். அவரைப் போல் வேறு யாரும் அத்தகைய மகத்தான பணி புரியவில்லை. ஆம், மிகப் பெரிய கவிகள் நமது நாட்டில் ஒவ்வொரு காலத்திலும் இருந்திருக்கிருர்கள். துளஸிதாஸர், ஞானதேவர், கபீர், கம்பர் என்று பல பேர் இருந்திருக்கிருர்கள். இவர்கள் வகையே வேறு; காளிதாஸர், தாகூர் வகையே வேறு. துளஸிதாஸர் முதலியவர்கள் பக்திக் கவிஞர்கள். காளிதாஸர், தாகூர் முதலியவர்கள் வாழ்க்கையை இலக்கியக் கண்கொண்டு பார்த்த கவிஞர்கள். இவ்வகைக் கவிஞர் நம் நாட்டின் உத்தரப் பிரதேசத்திலும் பஞ்சாபிலும் பிறந்திருக்கலாம். எப்பொழுது! உபநிடதங்கள் தோன்றிய காலத்தில். காளிதாஸனுக்குப் பிற்பட்ட காலத்தில் வங்கம்தான் அத்தகைய இலக்கியத்துக்குப் பிறப்பிடமாகியது!"

வினோபா தாம் ஓர் இலக்கிய ஆசிரியனில்லை என்ருர். பிறரும் தம்மை அப்படி எண்ணிவிட முடியாது என்று கூறி, அதற்குக் காரணங்களைப் பின்வருமாறு விளக்கினுர்:

"நானும் மராத்தியில் ஏதோ எழுதியிருக்கிறேன். அதை மக்களும் விரும்பிப் படிக்கிருர்கள் என்பதும் உண்மைதான். ஆனுல் அதை மக்கள் இலக்கிய நூலாகக் கருதிப் படிக்கவில்லை; சமய நூலாகக் கருதித்தான் படித்து வருகிருர்கள். அதனுல்தான் நான் ஒரு இலக்கிய ஆசிரியனல்ல என்று சொல்லுகிறேன்.

"நான் இலக்கியத்தை ரொம்பவும் ரஸிப்பவன். அதன் மதிப்பும் சிறப்பும் எனக்கு நன்றாகத் தெரியும். நான் சிறுவனாக இருந்தபோது எனக்குக் கவிதை புனைவதில் மிகுந்த ஆசையிருந்தது. இரண்டு மூன்று நாட்களில் ஒரு செய்யுள் புனைந்து விடுவேன். அதைத் திருத்தியும், மாற்றியும், செப்பனிட்டும் நானே பாடிப் பாடிப் பார்த்து ஓரளவு திருப்தி யடைந்தவுடன், நேரே சமையலறைக்குப் போய் அடுப்பில் வைத்து விடுவேன். அக்னி பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிடுவேன்.

"இந்த என் இயல்பைப் புரிந்து கொண்டீர்களானல், இன்று நான் நிலத்தை அர்ப்பணம் செய்யுங்கள் என்று கூறி வரும் இப்பூதான இயக்கத்தையும், புரிந்து கொள்வீர்கள்!

"நீராவிக்கு ரொம்ப சக்தியிருப்பதாக வெல்லாம் பேசுகிறோம். காற்றில் விடப்பட்ட நீராவி, வீணாகப் போகிறது என்று கூறுகிறோம். அதையே நன்றாக அடைத்து வைத்தால் எத்தனையோ நற்காரியங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆகவே ஆண்டவனுடைய சக்தியை உணர்ந்த ஞானத்துடன் கூடிய இலக்கிய உணர்ச்சியை நம் உள்ளத்தில் பூட்டி வைத்தால் ஒரு நஷ்டமும் ஏற்படுவதில்லை. அதற்கு மாறாக இறைப் பற்று தீவிரம் அடைகிறது.

"ஆகவே, நான் வீட்டைத் துறந்து பிரும்மத்தை நாடிப் புறப்பட்டேன். காசிக்குப் போய்ச் சேர்ந்தேன். காசிக்குப் போயும் எனக்கிருந்த கவிதை மோகம் என்னை விடவில்லை. மீண்டும் கவிகள் புனையத் தொடங்கினேன். கவி முழுதும் பாடிய பிறகு அதைக் கங்கைக்கு அர்ப்பணம் செய்து வந்தேன். அக்னி பகவானுக்குப் பதில் அன்னை கங்கைக்கு அர்ப்பணம்! நெருப்புக்குப் பதில் நீர்—அவ்வளவுதான்!

"அந்தச் சமயத்தில் நிகழ்ந்த மற்றொரு கதையும் நினைவுக்கு வருகிறது. என் தாயார் கீதைப் பிரசங்கங்களைக் கேட்கப் போவாள். ஒரு நாள் அவள் என்னிடம் இந்தக் கீதை உபந்நியாசங்களைப் பற்றி, 'எல்லாம் சம்ஸ்கிருதத்தில் சொல்லுகிறார்கள். மராத்தியில் சொன்னால் நன்றாக இருக்கும்' என்றாள். நான் மராத்தி வசனத்திலிருந்த கீதை புஸ்தகத்தைக் கொண்டு வந்து கொடுத்தேன். அதைப் பார்த்து விட்டு, 'இது செய்யுள் உருவத்திலிருந்தால் மிக நன்றாக இருக்கும்' என்றாள். செய்யுளாக இருந்த புஸ்தகத்தைக் கொண்டு போய்க் கொடுத்தேன். அது எனக்கே பிடிக்க வில்லை. செய்யுள்கள் கரடுமுரடாகவும் கடினமாகவும் இருந்தன. 'இது சமஸ்கிருதம் போலவே இருக்கிறதே! இதை விட எளிமையான செய்யுள் கீதையைக் கொண்டு வந்து தர முடியுமா!' என்றாள் என் தாயார். பிறகு அவளுக்கு என்ன தோன்றிற்றோ தெரிய வில்லை. திடீர் என்று, 'நீதான் எனக்காக ஒன்று பாடிக் கொடேன்' என்றாள். நான் கீதையைக் கவி உருவத்தில் பாடிக் கொடுக்க முடியும் என்ற அந்த நம்பிக்கை அவளுக்கு என்னிடத்தில் எப்படித் தான் ஏற்பட்டதோ தெரிய வில்லை.

"எப்படியாயினும், அவள் மொழிகள் எனக்கு அளவு கடந்த நம்பிக்கை யூட்டின. நம்பிக்கை என்பதுதான் மாய சக்தி. இரும்பைப் பொன்னாக்கும் ரஸவாதம் என்பதைக் கண்டேன். நம்பிக்கை! மனிதனைச் சக்திவானாக்குகிறது.

"வேதங்களிடம், 'நான் ஏழை, அநாதை, இடறி விழுந்தவன்' என்று முறை யிட்டால் அவை 'அப்படி யார் சொன்னது! நீ பிரம்மன்!' என்று கூறுகிறது. மனிதனிடம் மனிதத் தன்மையில் நம் முன்னோர்களுக்குத்தான் எவ்வளவு திடநம்பிக்கை!

"என் தாயார் இப்படி என்னையே கவியாக மொழிபெயர்த்துத் தரும்படி கேட்டது என் உள்ளத்தில் இருந்து கொண்டே யிருந்தது. கடைசியில் என் தாயார் இறந்த பல ஆண்டுகளுக்குப் பிறகு மராத்தியில் கீதையை மொழிபெயர்த்தேன். இதுதான் கீதாயீ பிறந்த வரலாறு. கீதாயீ என்றால் மராத்தியில் தாயார் என்று பொருள்.

"மகாராஷ்டிர தேசத்தில் இப்பொழுது வீட்டுக்கு வீடு கீதாயீ வாசிப்பது சகஜமாகி விட்டது! இவ்வளவு பிரபல்யம் அடைந்ததற்குக் காரணம் அன்று நான் அக்னி தேவனுக்கும், கங்கைத் தாய்க்கும் என் கவிதைகளை அர்ப்பணம் செய்ததுதான் என்று நினைக்கிறேன். இல்லை. என் அன்னையின் அருளாகவே இருக்கலாம்.

"ஏற்கெனவே கூறியபடி நான் ஒரு இலக்கிய ஆசிரியனே அல்ல. ஆனால் நான் உங்கள் ஆசிகளை வேண்டுகிறேன். ஏனெனில், இலக்கியத்தின் சக்தி இறைவனின் சக்திக்கு ஏறத்தாழ இணையாகவே இருக்கிறது என்று உறுதியாக நம்புகிறவன் நான். இப்படிச் சொல்வதை அதிகப் பிரசங்கித்தனம் என்று சிலர் எண்ணலாம். ஆனால் அகில அண்டத்தில் என்னவெல்லாம் இருக்கின்றனவோ அத்தனையும் இலக்கியத்தில் இருக்கின்றன. நாம் உலகில் ஒரு கங்கையைத்தான் காண்கிறோம். பூமியின் மீது பாயும் கங்கையைத்தான் பார்க்கிறோம். இலக்கியத்தில் மூன்று கங்கையுண்டு,—ஆகாச கங்கை; பூமியில் பாயும் கங்கை, பாதாள கங்கை. அதனால்தான் இலக்கியம் மாபெரும் சக்தியைத் தன்னகத்தே கொண்டது என்றேன். உள்ளத்தின் ஆழத்திலிருந்து உண்மை யொளியுண்டாகும்போது இலக்கியகர்த்தா இலக்கியம் சிருஷ்டிக்கிறான். பேனாவைத் திறந்து வைத்துக் கொண்டிருக்கும் போதெல்லாம் உலகத்துக்கு நன்மை செய்ய வேண்டும் என்று நினைக்கிறான் என்று சொல்ல முடியாது. இலக்கிய கர்த்தா என்பவன் ஆத்மானுபவத்துடன் ஒன்றியவன்.

"இலக்கியம் என்பது பொருள் சம்பாதிக்கும் சாதனம், லக்ஷ்மி தேவியின் மற்றோர் வகை வழிபாடு என்று கருதாமல், தாய் என மதித்து அன்பு செலுத்தி, வழிபட்டு, உழைத்த அரும் புதல்வர்களால் நிர்மாணிக்கப்பட்டது நமது இலக்கியம். மக்களோடு மக்களாகத் தம்மை இரண்டறக் கலந்து விட்ட மகான்களால் சிருஷ்டிக்கப்பட்டது இலக்கியம். பணத்துக்கு விலை பேசாத, அரசர்களையும் தனவந்தர்களையும் பொருட்படுத்தாத லட்சிய புருஷர்களால் உருவானது நமது இலக்கியக் களஞ்சியம். துளசிதாஸ் கபீர், துகாராம், போதன்னா—இவர்கள் அத்தனை பேரும், அரசர்களை நம்பாமல், ஆண்டவனை நம்பி, பக்தி செலுத்தி இலக்கியத்தை வளர்த்தவர்கள். இதோ என் எதிரில் உட்கார்ந்திருக்கும் நீங்கள் அவர்களுடைய பரம்பரையைச் சேர்ந்தவர்கள். நான் உங்களை இறைஞ்சிக் கேட்டுக் கொள்வதெல்லாம் உங்கள் உள்ளத்தின் குரலுக்குச் செவி கொடுத்து அது ஊக்குவிக்கும் வழியிலே செல்லுங்கள் என்பதே.

"கடைசியில் ஒரு வார்த்தை. நீங்கள் யாவரும் ஆசிரியர்கள். இந்த நாட்டு மக்கள் என்ற முறையிலே உங்களுக்கும் சொத்து இருக்குமல்லவா! அதனால் உங்களையும், இந்த பூதான யக்ஞத்துக்குச் சிறிது வழங்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்" என்று சொன்னார். பிறகு வினோபா பாவே தம் இரு கைகளையும் கூப்பி வணங்கி, அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார்.

# தெய்வீகப் பிறவி

சாந்தா ராமஸ்வாமி

"ஐயோ, ராமா! இந்தக் கண்ணும் தெரியாமே காதும் சரியாகக் கேட்காமே நீ எதுக்குத்தான் இன்னும் என்னை விட்டு வச்சிருக்கியோ! சீக்கிரம் உன்னிடம் சேர்த்துக்கப்படாதா?" என்று எங்கள் பாட்டி அடிக்கடி அங்கலாய்ப்பதைக் கேட்டிருக்கிறேன். அப்பொழுதெல்லாம் என்னால் கூடுமானவரை ஆறுதல் மொழிகள் கூறுவேன். ஆனால் அவ்விதம் ஆறுதல் கூற மகளோ பேத்தியோ இல்லாத எழுபத்தினாறு வயதான அமெரிக்கப் பாட்டி ஒருவர் சென்ற வாரம் இந்தியாவில் இரண்டு மாதம் சுற்றுப் பிரயாணம் செய்வதற்காக டெல்லியில் வந்திறங்கினார். தலைநகரைச் சுற்றிப் பார்த்தார். டெல்லி மக்கள் பாடக் கேட்டார். அவர்களைத் தன் 'மழலை'ச் சொற்களால் மெய் மறக்கச் செய்தார். "எங்களுக்கு ஆறுதல் வேண்டாம். அன்புதான் வேண்டும்" என்று கண் தெரியாத, காது கேளாத பிறவிகள் சார்பாகக் கூறினார். வயது முதிர்ந்தது எனினும் உள்ளத்தில் இளமை பொங்குகிறது. தள்ளாமை என்பதையே சிறிதும் அறியாதவர் போலும். தெய்வத்தின் சிருஷ்டியைத்தான் என்னவென்று சொல்வது!

குழந்தை அழகாகத்தான் பிறந்தது. ஆறு மாதத்தில் பேசத் தொடங்கியது. ஒரு வயதில் நடக்கத் தொடங்கியது. பெற்றோர் குழந்தையின் மழலையில் அகமகிழ்ந்தனர். ஆனால் தெய்வத்தின் சோதனைதான் என்னே! பத்தொன்பதுமாதக் குழந்தைக்குக் கடுஞ்சுரம் அடித்தது. கண் பார்வை பறிபோயிற்று. காதுகள் கேட்கும் தன்மையை இழந்தன. பேச்சும் தடைப்பட்டது. ஒரு வேளை அந்தக் குழந்தைக்கு அவ்விதக் குறைகள் நேர்ந்திரா விட்டால் நாம் இப்பொழுது இத்தகைய ஒரு தெய்வீகப் பிறவியைக் கண்டிருக்கமாட்டோமோ என்னவோ!



மத்தியப் பிரதேசத்திலும் பம்பாயிலும் கவர்னராக இருந்த ஸ்ரீ மங்கள் தாஸ் பக்வாஸாவின் மருமகள் ஸ்ரீமதி பூர்ணிமா பக்வாஸா பம்பாய் ராஜ்பவனில் டாக்டர் ஹெலன் கெல்லருக்கு இந்தியப் புடவை உடுத்தி மகிழ்கிறார்.

ஆறு வயது சிறுமி ஹெலனுக்கு 1886ம் வருடத்தில் ஆன் ஸலிவன் என்பவர் உபாத்தியாயினியாக அமர்த்தப் பட்டார். கண் இல்லாதவர்களுக்கென ஏற்பட்டிருந்த புகழ் பெற்ற அமெரிக்க பள்ளிக்கூட உபாத்தியாயினி இவர். உபாத்தியாயினியின் முதல் சந்திப்பிலேயே வாழ்க்கையின் ஒளியைக் காண ஆரம்பித்தாராம் ஹெலன். குழந்தையின் கைகளில் வார்த்தைகளை எழுதி எழுதியே பாடம் கற்பித்தார் ஆன் ஸலிவன். இப்பொழுதும் ஹெலன் அம்மையாரின் இணைபிரியா துணைவி பாலி தாம்ஸன் எல்லா விஷயங்களையும் கையில் எழுதியே அவருக்குத் தெரிவிக்கிறார். அக் கைகளே ஹெலன் கெல்லருக்குக் கண்ணும் காதுமாக இருந்து வருகின்றன.

குழந்தை ஹெலனிடம் எல்லாவற்றையும் கற்க வேண்டுமென்ற அதிசய ஆர்வம் மிகுந்து காணப்பட்டது. எதையும் துரிதமாகக் கிரஹித்துக்கொள்ளும் சக்தி அச்சிறுமியிடம் அபாரமாக இருந்தது. ஸலிவன் தன் சிநேகிதி ஒருவருக்குப் பின்வருமாறு கடிதம் எழுதுகிறார். "என் வாழ்க்கையில் இக் குழந்தையின் படிப்பு முக்கியத்துவம் பெறப் போகிறது. அவளிடம் அபாரத் திறமை காணப்படுகிறது. அதைப் பக்குவப்படுத்தி மேலும் விருத்திசெய்ய என்னால் முடியுமென நம்புகிறேன்." இந்த உபாத்தியாயினியின் மொழிகள் உண்மையாயின. சீக்கிரத்திலேயே உலகத்தின் கவனம் அவர் பக்கம் திரும்பியது. அசாதாரணமான அவர் புத்திசாலித் தனத்தையும், விடா முயற்சியையும் கண்டு வியந்தது, மகிழ்ந்தது.

படிப்பில் வெகு விரைவாக முன்னேறினார் ஹெலன். பத்து வயதில் நியூயார்க்கில் செவிடர்களுக்கென உள்ள பள்ளியில் சேர்க்கப் பட்டார். சத்தம் என்றாலே என்னவென்று அறியாத பத்து வயதுக் குழந்தை இரவும் பகலும் பாடுபட்டு ஒவ்வொரு வார்த்தையையும் மணிக்கணக்காகச் சொல்லிப் பார்த்து மெல்ல மெல்லப் பேசக் கற்றுக் கொண்டார். மூன்று வருஷப் பயிற்சியின் பயனாகப் பொது ஜனங்களிடையில் பிரசங்கம் செய்யும் திறன் பெற்றார்.

ஹெலன் கெல்லர் ஆங்கிலத்தில் மட்டும் பாண்டித்தியம் பெறவில்லை. லத்தின், பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய மொழிகளையும் கற்றார். கலாசாலையில் சேர்ந்து படித்தார். அவர்



ஒரிஸ்ஸாவில் முகாமுக்குச் செல்லும் வழியில் மாதர்கள் ஸ்ரீ விநோபாவை எதிர்கொண்டு அன்புடன் வரவேற்கின்றனர்.

உபாத்தியாயினி அவர் கூடவே வகுப்புகளுக்குச் சென்று பிரசங்கங்களை அவர் கையில் எழுதிக் காட்டி உதவி புரிந்தார். 1904ல் அவர் ராட்கலிப் கலாசாலையில் ஆங்கிலத்தில் விசேஷப் பரிசும் பெற்றார்.

ஹெலன் கெல்லர் ஒரு பெரிய எழுத்தாளரும் கூட. தம் வாழ்க்கை வரலாற்றை அருமையாக எழுதியிருக்கிறார். மற்றும் அநேக புத்தகங்கள் எழுதியிருக்கிறார். தம்முடைய கட்டுரைகளை எப்பொழுதும் தாமேதான் டைப் செய்வாராம் ஹெலன்.

அவர் பெரிய கலா ரஸிகர். திரைப்படங்களுக்கும் நாடகங்களுக்கும் செல்லுவார். அவர் கூடச் செல்பவர் கதையின் சாராம்சத்தை அவர் கையில் எழுதிக் காண்பிக்க, அவர் அகக் கண் சினிமாவைக் கண்டு களிக்கும். கண் பார்க்காமலே, காது கேட்காமலே, உலகப் பொருள்கள் அனைத்தையும் அறிந்து கொள்ளும் ஒரு அதிசய சக்தி அவரிடம் இருக்கிறது. சங்கீதத்தை அதன் நாதத்தைக் கொண்டு கேட்டு மகிழ்கிறார். ஹெலன் தம் குறைகளைப் பெரிதாக நினைப்பதே இல்லை. "ஆம்! என்றாவதுஒரு சிறு ஏக்கம் தோன்றலாம். ஆனால் என் மனோ திடத்தின் முன் ஏக்கத்துக்கு இடமில்லை" என்கிறார் ஹெலன்.

தெய்வ நம்பிக்கை நிறைந்தவர் ஹெலன். "அதுதான் என்னைக் காப்பாற்றுகிறது. வாழ்க்கையில் கசப்புக் கொள்ளாமல் இருக்கச் செய்கிறது" என்று டெல்லி மக்களிடம் கூறினார். அவர் வாயிலிருந்து எழும் வார்த்தைகளை மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்தோம். அவர் முகத்தில்தான் என்ன ஜீவகளை! அவர் உயிரில்லாக் கண்களில் என்ன உற்சாகம் மிதந்தோடுகிறது. அன்பும் ஆதரவும் நிறைந்த முக பாவம். முகத்தில் சிறிதளவேனும் குறையின் ரேகைகள் படர்ந்திருக்க வேண்டுமே. கிடையாது. பார்க்கப் போனால் சாந்தி மிகுந்த அம் முகத்தில் மலர்ச்சியே தாண்டவமாடியது. சிறு குறைகள் நமக்கு வந்திடினும் நாம் முகத்தைத் தொங்கப் போட்டு விடுகிறோம்; நமக்கு இம்மாதிரி நேரலாமா என்று குமுறுகிறது மனம். அச்சமயத்தில் மற்றவர்களைப் பார்க்கக்கூட அஞ்சுகிறோம். ஆனால் வாழ்க்கையில் மிகுந்ததை அனுபவிக்க முடியாதபடி இருந்தும் சிறிதும் குறையின்றி — ஏன், உற்சாகமே மேலிட்டவராய், — தன்னைப் போன்ற குறைப்பட்டவர்களுக்குத் தொண்டு புரிய வேண்டு மென்று கருதுகிற ஹெலன் அம்மையாருக்கு நம் கைகள் தாமாகவே வணக்கம் செலுத்த முற்படுகின்றன.

இப்பொழுது அவர் இந்தியாவுக்கு வந்திருப்பதற்குக் காரணம் தொண்டு புரிய வேண்டு மென்ற அவருடைய அடங்கா ஆவல்தான். கண் இல்லாதவர்களுக்குப் போதிய கவனம் காண்பிக்காததினால் அவர்கள் தாங்கள் சமூகத்துக்குப் பாரமாக இருப்பதாக நினைத்து ஏங்குகிறார்கள். இத்தகைய மனப்பான்மையைத் தகர்த்தெறிய வேண்டு மென்கிறார் ஹெலன். பார்வை இழந்தவர்கள் பிறர் கையை நாடுவதை வெறுக்க வேண்டும். தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளும் சக்தியைப் பெற வேண்டும் என்று பிரசாரம் மட்டும் செய்யாமல் நடை முறையிலும் செய்து காண்பித்து மக்கள் மனத்தை மாற்றி வருகிறார்.

# உங்கள் ஆல்பத்திற்கு ஒரு அருமையான படம்

## —உங்கள் 'கோடக்' காமிராவைக்கொண்டு வெகு சுலபமாக எடுக்கவும் கூடும்




ஸ்படிகம்போன்ற பெரிய வியூபைண்டரின் மூலம் காட்சியைக் குறி பார்த்துக் கொண்டு பொத்தானை அழுத்துங்கள். இச்சிறப்பு மிகுந்த 'கோடக்' காமிராக்கள் விஷயத்தில் இவ்வளவே நீங்கள் செய்ய வேண்டியது—ஒவ்வொரு முறையும் பழுதேயில்லாமல் அற்புதமான படங்கள் எடுக்க முடியும்.

உங்கள் கோடக் வியாபாரியிடம் போய் மார்க்கெட்டிலுள்ள சிறந்த காமிராக்கள் அத்தனை ரகங்களையும் காண்பிக்கச் செய்யுங்கள். உங்களுக்கு ஏற்றதான ஒரு 'கோடக்' மாடல் கண்டிப்பாக இருக்கும்.

'கோடக்' பிளாஷ்ஹோல்டர்களையும் பாருங்கள். இவற்றின் உதவியால் வெளிக் காட்சியைப் போன்றே சுலபமாக வீட்டினுள்ளும் படம் பிடிக்கலாம்.



**புதியது!**

உன்னதமான சிக்ஸ்-20 'பிரௌனி' காமிரா-மாடல் F. கவர்ச்சியிலும் சிறப்பிலும் இணையற்ற ஒரு பாக்ஸ் காமிரா இது! ஒரு 'பிரௌனி' காமிராவில் நீங்கள் எதிர்பார்க்கும் எளிமையும் நம்பகத்தன்மையும் கிடைப்பது தவிர இதன்மூலம் புதிய 'பிரௌன் & பெய்ஜ்' மோஸ்தரை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள். க்ளோஸ்-அப் லென்ஸ் மற்றும் கலர் பில்டர் இதிலேயே உண்டு. விரல் பட்ட மாத்திரத்தில், சிறந்த போர்ட்ரேட்டுகளும் வெளிக் காட்சிப் படங்களும் எடுத்து விடுகிறீர்கள். வீட்டினுள் தெளிவான ஸ்நாப்புகள் எடுக்க ஒரு 'கோடக்' பிளாஷ்ஹோல்டரை பொருத்திக் கொள்ளுங்கள், போதும்.

உங்களை புளகாங்கிதமடையச் செய்யும் காமிரா! ரூ. 36/8
இணையான தோல் கேஸ் ரூ. 8/-
பிளாஷ்ஹோல்டர்கள் ரூ. 22/12 மற்றும் ரூ. 31/4
இதர சிக்ஸ்-20 'பிரௌனி' மாடல்கள் ரூ. 24/- லிருந்து.





இவ்விலைகளில் விற்பனை வரி சேராது.

**கோடக் லிட்.,** (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் – கல்கத்தா – டில்லி – மதராஸ்

K. 807 (a)




'அயோத்தியா'வின் எஜமானி பவானி அம்மாள் ஒரு நாள் படுக்கை விட்டெழுந்ததுமே வேலைக்காரன் வந்து, "அம்மா, தங்கள் சகோதரராம். ஊரிலிருந்து வந்திருக்கிறார்..." என்று சொல்லியபடியே தயங்கினான்.

பவானி அம்மாள் முகம் சிவந்தது. ஒரு விநாடி ஏதோ யோசித்தாள். 'இவன் எங்கு இங்கு வந்தான்!' என்று தனக்குள் முணுமுணுத்துக்கொண்டாள். பிறகு, "பெயர் என்னவாம்! இந்தக் காலத்தில் அண்ணன், தம்பி என்று சொல்லிக்கொண்டு எத்தனையோ பேர் ஏமாற்றி வருவது சர்வ சகஜமாகி விட்டது" என்றாள். அவளுக்குத் தன் உறவினர்கள் ஏழைகள் என்பதைத் தன் வேலைக்காரர்களோ நண்பர்களோ அறிந்து கொள்ளக் கூடாது என்பது எண்ணம்.

வேலைக்காரனுக்கு, வந்தவர் தன் எஜமானி அம்மாள் சாயலாகவே இருந்ததால் அவர் எஜமானி அம்மாளின் சகோதரர்தான் என்பதில் எந்த விதமான சந்தேகமும் தோன்றவில்லை.

"சரி, உங்கள் பகுதியில் ஒரு அறையில் இருக்கச் செய். நான் சொல்லியனுப்பும் பொழுது என்னை வந்து பார்க்கட்டும். வந்தவன் யாரோ! எவனோ! யார் கண்டார்கள்!" என்று, தனக்குள் சிறிதும் சந்தேகமில்லாமலிருந்தும், மேலுக்கு அவ்விதம் சொல்லி வைத்தாள்.

* * *

மார்க்கபந்து தன் தங்கை வீட்டில் ஒரு வாரமிருந்தார். அவருக்கு வேளா வேளைக்குச் சோறு கிடைத்த போதிலும், தன் சகோதரியின் பேட்டி இன்னும் கிடைக்கவில்லை. அவர் மகா மானி. முடிவில் விடைபெற்றுக் கொள்ளத் தாமாகவே அவளிடத்துக்குச் சென்றார். அப்பொழுது பவானி அம்மாள் தன் மகன் ரகுவுடன் கொஞ்சிக் குலாவிப் பேசிக் கொண்டிருந்தாள். அந்தச் சமயம் மார்க்கபந்து உள்ளே வந்தது அவளுக்கு ஒரு அதிர்ச்சியாக இருந்தது. அவரைப் பார்வையால் வரவேற்றாளே தவிர உட்காரும்படி சொல்லவில்லை. அவரே, "பவானி! நான் ஊருக்குப் போய் வருகிறேன். என் மனைவி உன்னை விசாரித்து வரச் சொன்னாள். இவன் உன் பிள்ளை ரகுவா! என் மகளுக்குச் சீதா என்று பெயர்!" என்றார்.

இதைக் கேட்டபோது பவானியின் முகம் மறுபடியும் கோபத்தால் சிவந்தது. அதற்குள் ரகு, "ஓ, என் மாமாவா நீங்கள்!" என்று அவரிடம் ஓடப் போனான். உடனே பவானி அவனை இழுத்துப் பிடித்தாள். இந்த அவமானம் தாங்கமாட்டாமல் மார்க்கபந்து சென்று விட்டார். "நான் என் பிள்ளைக்கு 'ரகு' என்று பெயர் வைத்திருப்பதைக் கேள்விப்பட்டுத் தன் மகளுக்குச் 'சீதை' என்று பெயரிட்டிருக்கிறான்" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு பொருமினாள் பவானி.

இது நடந்து ஆண்டுகள் பல ஓடின.

சாந்தமூர்த்தி மிகவும் அடக்கமானவர், மிதமாகப் பேசுவார். தம் மனைவி 'தாயின் அன்பு' என்ற பெயரில், வயது வந்த மகனை, கொஞ்சியும் குலாவியும் செல்லம் கொடுப்பதை அவர் விரும்பவில்லை. அதனால் கேடுதான் விளையும் என்று தீவிரமாக நம்பினார்.

பவானியோ தன் மகனுக்கு வயது வரவும், அவன் எங்கு தன்னிஷ்டம் போல் யாரையாவது கலியாணம் செய்து கொண்டு விடுவானோ என்று மிகவும் பயந்தாள். அவளுக்குத் தன் சகோதரனைப் பற்றிய நினைப்பும் பயமும் அதிகமாக வளரத் தொடங்கியது. ஏழைகளிடம் உறவு கொள்வதை விரும்பவில்லை. தங்கள் பணக்கார நண்பரான கனகலிங்கம் என்பவரின் ஒரே மகளைத் தன் மகனுக்கு மணம் முடிக்க நிச்சயித்திருந்தாள்.

கனகலிங்கத்தின் புதல்வி கனகமும் சாந்தமூர்த்தியின் புதல்வன் ரகுவும் சட்டக் கல்லூரியில் ஒன்றாகப் படித்து வந்தனர். ஆனால் ரகு வகுப்பில் தவறி விட்டான். கனகம் தேறி விட்டாள். பிறகு ரகு வைத்தியக் கல்லூரியில் சேர்க்கப்பட்டான். அங்கும் அவனால் முன்னேற முடியவில்லை. இதற்கெல்லாம் காரணம் அவன் தாயின் செல்லம்தான் என்பதில் சாந்தமூர்த்திக்குக் கொஞ்சங் கூடச் சந்தேகமிருக்கவில்லை. ஆனாலும் என்ன செய்வது! வேறு வழியின்றி, 'தம் காரியாலயத்திலேயே அவனுக்கு ஒரு வேலை போட்டுத் தம் கண்காணிப்பில் வைத்துக் கொண்டார். இது தாய்க்கு மிகவும் பிடித்தது. ஏன் என்றால் ரகு தன் ஆட்சியிலிருந்து விடுபட்டதும் தந்தையின் மேற் பார்வையில் மற்றப் பொழுதைக் கழிக்கிறான் அல்லவா!

ஒரு நாள் ரகு எங்கு சென்றானோ தெரியவில்லை. மாலையில் காலாகாலத்தில் வீடு திரும்பாமல் சற்று நேரங் கழித்து வீட்டுக்கு வந்தான். வீட்டின் அருகே வரும்பொழுதே அவனது இருதயம் பயத்தால் படபடத்தது. வாசற் பக்கம் வெளிச்சம் தெரியவே மறைவாகப் பின்புறம் சென்று கிணற்று சன்னல் வழியே உள்ளே குதித்து மாடியிலுள்ள தன் அறைக்குச் சென்றான். மாடியிலுள்ள எல்லா அறைகளிலும் சிறந்த அவனது அறைக்கு ஒரு 'பால்கனி' உண்டு. அதிலிருந்து தோட்டத்துக்கு ஒரு படியும் உண்டு. ரகு அவசரம் அவசரமாகத் தன் படுக்கையைப் படுத்திருந்த மாதிரி அலங்கோலப்படுத்தி விட்டு வெளியே எட்டிப் பார்த்தான். வெளியே இவனது அறைமீதே கண்ணோட்டமா யிருந்த பவானி தன் மகனைக் கண்டதும் "குழந்தாய் இப்போதுதான் வந்தாயா! இத்தனை நேரம் எங்கே போயிருந்தாய்!" என்று கேட்டுக் கொண்டே படி ஏறி வந்து விட்டாள்.

ரகு திக்குமுக்காடிப் போனான். "நான் இங்கே தானே யிருக்கிறேன், அம்மா. ஏதோ வெளியே சத்தம் கேட்டுப் படுக்கையை விட்டு எழுந்து வந்தேன்" என்றான்.

"நீ பொய் சொல்லுகிறாயே!" என்றாள் தாய். "நீ வாசல் வழியாகவும் வரவில்லை. நமது மோட்டார் வண்டியும் வீட்டிலேயே இருக்கிறது. நீ எப்படி உள்ளே வந்தாய்!" என்றாள்.

"சற்று கடற்கரைப் பக்கம் சென்று காற்று வாங்கி விட்டு வந்தேன், அம்மா!"

பவானிக்கு அந்தப் பதில் சரிப்படவில்லை. ரகு ஒருநாளும் தனியே வெளியே தங்கியதில்லை.

"நீ எப்படி உள்ளே வந்தாய், ரகு!" என்று மீண்டும் கேட்டாள்.

"கிணற்று சன்னல் வழியாகக் குதித்து வந்தேன். உன்னை எழுப்ப வேண்டாம் என்று ஒருவருக்கும் தெரியாமல் உள்ளே வந்தேன்."

பவானிக்கு நெஞ்சம் பதறியது. மார்பில் கை வைத்துக் கொண்டு, "ஐயோ ரகு, என்றைக்குமில்லாத வழக்கமாக வெல்லாம் நடந்து கொள்ளாதே! நீ கிணற்றில் விழுந்திருந்தாயானால் என் கதி என்ன!" என்று அலறினாள் பவானி.

சற்று மன நிம்மதி யடைந்த பிறகு, "ரகு, நீ வந்து எவ்வளவு நேரம் ஆகியிருக்கும் சொல்லு" என்று கேட்டாள்.

"மாமா — கனகலிங்கம் மாமா வீட்டுக்கு—" என்று ஏதோ உளறினான்.

"அது உன் மாமா வீடில்லையே!"—பவானி இதைத் தன்னை யறியாது சொல்லி விட்டாள். ரகு அவளை உற்று நோக்கினான்.

ஆனால் பவானி அதற்குள்ளாகவே "ஒரு வேளை கனகத்தின் மாமா கோபாலன் வீட்டுக்கா!" என்று கேட்டாள். ரகு தலையை ஆட்டித் தப்பித்துக் கொண்டான்.

பவானிக்கு அன்றிரவு தூக்கம் பிடிக்கவே இல்லை. மறுநாள் பொழுது விடிந்ததும் சாந்தமூர்த்தி அவளைப் பார்த்து, "ரகுவைப் பற்றியே ஏதேதோ எண்ணி ஏன் இப்படி உடம்பைக் கெடுத்துக் கொள்ளுகிறாய்!" என்றார்.

"ரகு கோபாலன் வீட்டுக்குத் தனியே சென்றிருந்தானாமே, உண்மையா!" என்றாள்.

சாந்தமூர்த்தி தலையைச் சொறிந்து கொண்டார். வாயில் வார்த்தை வரவில்லை.

## 2

மறுதினம் கணவனுடன் மகனும் காரியாலயம் சென்ற பின், சாந்தமூர்த்திக்கு மனைவியிடமிருந்து 'டெலிபோன்' வந்தது. அவள் மாலையில் காரியாலயத்தில் கணவனுடனும் மகனுடனும் 'தேநீர்' அருந்தி விட்டு, பிறகு மகனுடன் கடைத் தெருப் பக்கம் போவதாகத் திட்டம் போட்டிருப்பதாகக் கூறினாள்.

சாந்தமூர்த்தி அவளிடம், "நீ வர வேண்டாமே, நானே வீட்டுக்கு வருகிறேனே" என்று சொல்லிப் பார்த்தார். அவள் விடாப்பிடியாய், "இல்லை, ரகு என்னுடன் இன்று மாலை கடைத் தெருவுக்கு வருகிறான்" என்றாள். பவானி ஒன்று சொல்லி விட்டால் அதற்குச் சாந்தமூர்த்தி குறுக்கே நிற்க விரும்ப மாட்டார்.

வீட்டை விடக் காரியாலயத்தில் ரகுவுக்குச் சுதந்திரம் அதிகம். காரியாலயத்தில் கற்பகம் அன்றலர்ந்த பொற்றாமரை மலர் போலத் தனது இடத்தில் "பளிச்" சென்று உட்கார்ந்திருப்பாள். அவளுக்கு அருகே ரகு அடிக்கடி தானே போய்க் காரியாலயக் கடிதங்களை எழுதச் செய்வான். அவளும் அதைச் சுருக்கெழுத்திலிருந்து 'டைப்' செய்து அவனிடம் எடுத்துச் செல்வாள்.

கற்பகம், ரகுவின் ஏழை மாமா மார்க்கபந்துவின் மகள். அவளைச் சாந்தமூர்த்தி தம் காரியாலயத்திலேயே வேலைக்கமர்த்திக் கொண்டார். மற்றவர்களுக்கு அவள் ரகுவின் மாமாவின் மகள் என்று தெரியாது. பவானிக்குத்தான் அது பிடிக்காதே! பவானியும் கற்பகத்தைப் பார்த்ததில்லை.

அன்று ரகு தன் தாய் வருவதைக் கேட்டதும் "அப்பா, நீங்களே அம்மாவை அழைத்துச் செல்லுங்கள்" என்றான்.

சாந்தமூர்த்தி அமைதியாய், "அம்மா அழைத்தால் நீ போவதுதான் சரி" என்று கூறினார்.

குறிப்பிட்ட நேரத்தில் மகனுடன் வாசல்புறம் சென்று மனைவியை வரவேற்றார்.

பவானிக்குக் காரியாலய ஏற்பாடுகள் எல்லாம் சரியாகக் காணப்பட்டது. ஆனால் அங்கே ஒரு இளநங்கை 'டைப்பிஸ்டா' யிருந்தது சரிப்படவில்லை. அத்துடன் ரகு அவளிடம் தானாகவே நூறு தடவைகள் காரியமாகச் சென்று வந்ததாக அவளுக்குப் பட்டது!

## 3

பவானி ஒரே கவலையிலாழ்ந்தாள். தன் குடும்பத்துக்கு ஒரு ஆபத்து நேரப் போவது போலத் தோன்றியது. ரகு பேர் ஆபத்தில் சிக்கிக் கொண்டிருப்பது போலவும் தோன்றியது. எத்தனை நாள் தவங் கிடந்து ரகு பிறந்தான்! 'அவனைப் படாத பாடு பட்டு வளர்த்து இறுதியில் சாக்கடையிலா தள்ளுவது! பெற்ற தகப்பனேயா இதற்கு இடம்

கொடுப்பது! என்ன அநியாயம்!' என்று எண்ணி எண்ணி அவள் மனம் புழுங்கினாள்.

பவானியின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகியது. 'தாயின் அருமை மகன்—கோடீசுவரனின் ஒரே வாரிசு—யாரும் பொறாமைப் படக்கூடிய வாய்ப்பு. அவனை ஏமாற்ற எவ்வளவு பேர்கள் காத்திருப்பார்கள்! தந்தை யெனப் பட்டவர் சிறிதாவது யோசனை செய்தாரா!' பவானியின் மனம் இவ்விதம் ஓடிக் கொண்டிருக்கையில் அங்கே வந்த சாந்தமூர்த்தி அவளைப் பார்த்ததும் பயந்து விட்டார்.

அவரைக் கண்டதும் பவானி கண்களைத் துடைத்துக் கொண்டு, "எனக்குப் பதில் சொல்லுங்கள். உங்கள் காரியாலயத்தில் அந்த இளம் பெண்ணை எதற்கு வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்! நமது பையன் வயது வந்தவன் அல்லவா! அவனைக் கெடுக்கவா இந்த மாதிரி வழிகள் எல்லாம்!" என்று சூலாயுதம் பாய்ச்சுவது போல் கேட்டாள்.

சாந்தமூர்த்தி சற்று அமைதி யிழந்தார்:

"பவானி! காரியாலயத்தில் யாரை அமர்த்துவது சரியோ, அவர்கள்தான் அமர்த்தப் பட்டிருக்கிறார்கள். ரகு யோக்கியமான பையன். அவனைப் பற்றி நீ தவறாக எண்ணக் கூடாது" என்றார்.

பவானி விசித்து விசித்து அழுது விட்டாள். சாந்தமூர்த்தி அவளைச் சமாதானப் படுத்தினார்.

"மகன் பெரியவன் ஆகி விட்டதை நீங்கள் அறியவில்லையா!"

"நான் அறிந்துதான் இருக்கிறேன்."

"எதனால் சொல்லுகிறீர்கள்!"

"வயது வந்த பிள்ளைகளை அதிகமாகக் கட்டாயம் செய்யக் கூடாது. சற்று சுதந்திரம் கொடுக்க வேண்டும்" என்றார்.

பவானிக்கு மனம் சமாதான மடையவில்லை. மகனிடமே மன்றாடத் தீர்மானித்து விட்டாள்.

ரகு தினமும் மாலையில் ஸ்நானம் செய்வது வழக்கம். அவன் அதை முடித்துக் கொண்டு வருவதற்குள் அவளால் பொறுக்க முடியவில்லை. குழாயில் வழிந்தோடும் ஜலத்தின் ஓசையும் சாக்கடை வழியாக ஓடும் நீரின் ஓசையும் அவளுக்கு விநாடியை நாழிகையாக எடுத்துக் காட்டியது. இருதயத்தை ஈட்டி கொண்டு குத்துவது போலிருந்தது. 'இவ்வளவு பெரிய சீமான்-சீமாட்டியின் புதல்வன் ஒரு ஊர் பேர் தெரியாத பெண்ணிடம் மயங்க, பெற்றோர் இடம் விடுவதா! ரகுவுக்காக அவள் பட்டிருக்கும் கஷ்டங்கள் எவ்வளவு! ரகுவின் நலத்தை எண்ணி அவள் கட்டி யிருக்கும் மனக்கோட்டை எவ்வளவு! எத்தனை இன்பங்களைத் திரட்டியும், திரட்டிக் கொடுக்கவும் தயாராக இருக்க, எங்கிருந்தோ வந்து நுழைந்த பெண்ணுடன் நேசம் கொள்ள விரும்புகிறானே! அதற்குத் தகப்பனாரே வழி விடுகிறாரே! இதை விடத் தன் சகோதரன் மகள் என்று ஒருத்தி வழியோடிருந்தால் அவளைக்கூட மணந்து கொள்ளலாமே' என்றெல்லாம் எண்ணத்தின் மேல் எண்ணம் வந்து மனத்தில் மோதியது. ரகு ஒருவித கவலையுமின்றிக் குளித்து வேற்றுடை தரித்துக் கொண்டு உற்சாகமாகத் தன் தாயிடம் வந்து உட்கார்ந்தான்.

பவானி அவனை ஏறெடுத்துப் பார்க்காமலேயே, "ரகு, நீ நேற்றோ அல்லது முந்திய தினமோ கோபாலன் வீட்டுக்குப் போயிருந்ததாகச் சொன்னாயே, அந்த அழுக்கு உடையிலா சென்றாய்!" என்று கேட்டாள்.

ரகுவுக்குத் தன் தாயிடம் சொல்லாமல் தான் தன் விருப்பப்படி நடந்து வருவதை எண்ணி வெட்கமுண்டாயிற்று. அச்சமயம் இவர்களது சம்பாஷணையை அடுத்த கூடத்திலிருந்து கவனித்த சாந்தமூர்த்தி, ரகுவை அந்த நெருக்கடியிலிருந்து காப்பாற்ற அங்கே வந்தார். ஒரு ருசியான மாம்பழத்தை நறுக்கி எடுத்து வந்து அதைப் பற்றிச் சிலாக்கியமாகப் பேசிப் பேசி அவர்களை அதைச் சாப்பிடச் செய்தார். அந்த நேரத்தில் ரகு தன் கட்டுக் கதைகளைத் திரட்ட முடிந்தது. பவானிக்கோ நேரம் வீணாவது போலத் தெரிந்தது. கணவரிடம் அவளுக்கு அளவிலாப் பிரேமை. ஆகவே அவர் பேசி முடியுமட்டும் சும்மா யிருந்தாள். மாம்பழம் தின்று முடிந்ததும் சாந்தமூர்த்தி வெளியே போய் விட்டார்.

பவானியின் கண்களிலிருந்து கண்ணீர் வடிவது கண்ட ரகு பயந்து போய், "அம்மா!" என்று அலறினான்.

"என் அருமைக் குழந்தாய்! நீ நேற்று எங்கு போயிருந்தாய்!" என்று மீண்டும் கேட்டாள்.

ரகு மௌனமா யிருந்தான். ரகுவுக்குப் பொய் சொல்லி வழக்கமே யில்லை.

"ரகு! எங்கு போயிருந்தாய்! என்னிடம் சொல்ல மாட்டாயா!" என்று பவானி கெஞ்சினாள்.

"ஒரு இடத்துக்குப் போயிருந்தேன்...!"

"எந்த இடம்!"—பவானிக்கு நெஞ்சம் அடித்துக் கொண்டது.

"சினிமாவுக்கு......"

"நீ கோபாலன் வீட்டுக்கு......"

"அவர் இருக்கவில்லை. பிறகு சினிமாவுக்குப் போனேன்."

"தனியாகவா!"

"இல்லை......"

பவானிக்கு முகம் குப்பெனச் சிவந்தது. அதற்கு மேல் அவன் யாருடன் சென்றிருந்தான் என்று கேட்க மனம் தைரியப் படவில்லை.

"ஐயோ, ரகு! உனக்கு ஏன் இப்படி மனம் போக வேண்டும்! தங்கப் பதுமை மாதிரி பெண் காத்திருக்க நீ காரியாலய ஊழியர்களுடன்..."—அதற்குமேல் பவானிக்குப் பேச நா வரவில்லை.

ரகு எழுந்து நின்றான். தாயை மேலே பேச விடப் பிரியப்படவில்லை.

"ரகு, இது தகாது. நீ நல்ல குடும்பத்தில் பெண் கொண்டு என்னை ஆனந்தப் படுத்து!"

ரகுவுக்கு வியர்த்துக் கொட்டியது. வெளியில் செல்லப் பிரயத்தனப் பட்டான். பவானி அவனை அமர்த்தி, "ரகு, எனக்கு ஒரு வாக்குறுதி கொடு!" என்றாள். ரகு பேசவில்லை. சோர்ந்த முகத்துடனிருந்தான். பவானிக்கும் ஒன்றும் தோன்றவில்லை. மிகவும் துன்பப்பட்டுக் கொண்டிருந்தாள்.

## 4

மறுநாள் ரகு முற்றும் மாறி யிருந்தான். மிகவும் அமைதியுடன் ஆபீசுக்குச் சென்றான். கற்பகத்தின் மேஜை அருகே அவன் தன் காகிதங்களை எடுத்துப் போகவில்லை. மணி அடித்து ஆபீஸ் பையனிடம் காகிதங்களை அனுப்புவதும் வரவழைப்பதுமாயிருந்தான். ஆனால் கற்பகம் வழக்கம் போலவே தன் வேலைகளைச் செய்து கொண்டிருந்தாள். சாந்தமூர்த்தி வாயினால்

சொல்லுவதைச் சுருக்கெழுத்தில் எடுத்துக் கொண்டு அதை டைப் அடித்தவுடன் தானே அவைகளை ரகுவிடம் எடுத்துச் சென்றாள்.

ரகுவால் தன் ஆவலை அடக்க முடியவில்லை. புன்சிரிப்பு வந்தது. "கற்பகம், என்ன சமாசாரம்!" என்றான்.

கற்பகம் காகிதங்களைக் கொடுத்து விட்டு "இன்று ஏது இவ்வளவு ஒழுங்கு!" என்றாள்.

"அம்மாவிடம் இனி அவளுக்குத் தெரியாமல் ஏதும் செய்வதில்லை என்று சொல்லி வந்திருக்கிறேன்" என்றான் ரகு.

கற்பகம் சிரித்து விட்டாள். "இன்று ஒரு நாள் அதை மறக்கப் பாருங்கள்" என்றாள்.

"தினமும் அப்படியேதான் மறந்து விடத் தோன்றும்" என்றான் ரகு.

கற்பகம் ஏனோ அன்று ரொம்பவும் உற்சாகத்துடனிருந்தாள். "இன்று கனகமும் கோபாலனும் கடற்கரைக்கு வருகிறார்கள். நீங்களும் வர வேண்டும். அம்மாவுக்குத் தெரியாமல் அப்பாவிடம் சொல்லி விட்டு வண்டியில் வாருங்கள். வீட்டுச் சாவியுடன் வாருங்கள்......"

சாந்தமூர்த்தி அங்கே வந்து விட்டார். கற்பகம் வெளியே சென்றாள். ரகுவுக்கு வேலை மீது மனம் செல்லவில்லை. அவன் நினைவையும் கற்பகம் எடுத்துச் சென்றிருந்தாள். தந்தையிடம் அவன் தயங்கி நின்றான். "என்ன சமாசாரம் ரகு, ஏதோ பெரிய திட்டம் நடக்கிறாப் போலிருக்கிறதே" என்றார்.

சாந்தமூர்த்திக்குத் தம் மகன் கற்பகத்தை மணந்து கொள்ள ஆசைப்படுகிறான் என்று தெரிந்திருந்தது. ஆனால் பவானி அதை விரும்ப மாட்டாள். ஆகையால் அதை நிறைவேற்ற முடியாமல் தவித்தார்.

"எனக்கு இன்று மாலை பின்னேரத்தில் வண்டியும் வீட்டுச் சாவியும் வேண்டும்" என்றான் ரகு.

சாந்தமூர்த்தி கண்களை மூடிக் கொண்டு சிறிது நேரம் சிந்தித்தார். பிறகு "நல்லது, அம்மாவும் நானும் நம்முடைய டாக்டர் வீட்டில் விருந்து சாப்பிடப் போகிறோம். நாங்கள் போனதும் வண்டி உனக்குத் திரும்பி வரும். நீ திரும்பி வந்த பிறகு வண்டியை எங்களுக்கு அனுப்பிவிடு. அம்மாவிடம் உனக்குத் 'தலைவலி' என்று சொல்லிக் கொள். சாவியை நீ அம்மாவிடமிருந்து பெற்றுக்கொள், நீதான் வீட்டி லிருக்கப்பட்டவன் ஆயிற்றே—சாவி கேட்பது தகராறில் முடியுமே!" என்றார். ஒரு கணம் யோசித்தார்.

"ஓ. மறந்து விட்டேன்" என்றான் ரகு. தான் போடும் வேஷத்தை மறந்து போய்த் தந்தையிடம் சாவி கேட்டு விட்டான்.

அன்றிரவு ரகு தலைவலி யென்று வீட்டிலேயே யிருந்தான். பவானி வந்த பிறகு மகன் படுக்கையிலேயே யிருந்ததைப் பற்றி வருத்தப்பட்டாள். தலைவலிக்கு வேண்டிய உபசாரங்கள் யாவும் செய்து கொண்டிருந்தாள்.

* * *

சீதையும் தன் பெற்றோர்கள் வெளியூர் செல்லும் போது நெருங்கின நண்பர்களான சாந்தமூர்த்தி வீட்டில் தங்குவது வழக்கம். ஒரு சமயம் அவள் வந்து அவர்களுடன் ஒரு வாரமிருந்தாள். பவானி ஒரு நாள், இரண்டு நாள் மகா களிப்புடன் இருந்தாள். ஆனால் மூன்றாம் நாள் ரகுவைத் திடீரெனக் காணவில்லை. பவானியை ஒருவராலும் சமாளிக்க முடியவில்லை. மகன் ஓடிவிட்டானே, மறைந்து விட்டானே என்றெல்லாம் கதற ஆரம்பித்து விட்டாள். சாந்தமூர்த்தியைப் போலீசில் தெரிவிக்கும்படியும் சொன்னாள். ஆனால் அவர் அதற்கெல்லாம் இணங்கினாரில்லை. "போலீசில் சொன்னால் நமது கௌரவம் தான் போகும். எவ்வளவு நாட்கள்தான் அவனும் பொறுப்பான்! பணமிருந்தால் போதுமா? சுதந்திரம் வேண்டாமா? வளர்ந்த பையன் இவ்வளவு கட்டுப்பாடுகளுக்கு அடங்கி யிருந்ததே அதிகம்!" என்று என்றுமில்லாத அளவு தைரியமாகப் பேசலானார். பவானி அழுத வண்ணம் படுத்த படுக்கையாகி விட்டாள்.

ஆனால் கனகமோ பவானியை வெகுவாகத் தேற்றினாள். அவளது அன்பையும் ஆதரவையும் கண்ட பவானி மேலும் துக்கத்துடன், "கனகம், உன்னை மணம் புரிந்து சுகமாய் வாழ அவன் அதிருஷ்டமில்லாதவன் பார்! என் தலை விதி!" என்று அலறினாள். கனகம் ஒன்றும் பேசவில்லை. அதற்குள் சாந்தமூர்த்தி அங்கு தோன்றினார்.

"இதோ பார் பவானி, உன் மகன் உன் ஏழைச் சகோதரன் மகளை எங்கு மணந்து கொள்வானோ என்று பயந்தாயே!..." என்று அவர் ஏதோ சொல்லுமுன் பவானி, "ஆ! என்ன சொன்னீர்கள்! அவளை மணந்து கொண்டாவது நம் கண்ணெதிரில் கௌரவமாயிருக்கலாமே! போயும் போயும் வேலைக்காரப் பெண்களுடன் தொடர்பு கொண்டு காணாமற் போவதா!" என்று கதறியழுது விட்டாள்.

சாந்தமூர்த்தி பதறாமல் "அதைத்தான் சொல்கிறேன். அதோ தன் மாமன் மகளை அவன் மணம் புரிய உன் சம்மதம் கேட்க வருகிறான், பார்!" என்றார்.

பவானி படுத்திருந்த அறைக் கதவைத் திறந்து கொண்டு ரகுவும் சீதையும் உள்ளே நுழைந்தார்கள். கனகம் தான் செய்திருந்த ஏற்பாட்டின்படி அவர்களை ஆவலோடு வரவேற்றாள். பவானி ரகுவைக் கட்டி அணைத்துக் கொண்டு, சீதாவைப் பார்த்து மலைத்து நின்றாள்.

"நீயா, காரியாலயத்தில் வேலைசெய்து வந்தாய்!" என்றாள். கற்பகம் என்ற பொய்ப் பெயரில் இதுவரை வளைய வந்த சீதை தன் அத்தைக்கு நமஸ்காரம் செய்யப் பவானி அவளை ஆசீர்வாதம் செய்வதைவிட வேறு வழி யிருக்கவில்லை. தன் மகன் தகாத வழியில் செல்லாமல் தன் சகோதரன் மகளையே தேர்ந்தெடுத்ததில் அளவற்ற திருப்தி அடைந்தாள். வெகு நாட்களுக்கு முன், தான் தன் மகனுக்கு 'ரகு' என்று பெயர் வைத்ததால் சகோதரன் தன் மகளுக்குச் 'சீதை' என்று வேண்டுமென்றே பெயர் வைத்தான் என்று பொருமினது அவளுக்கு நினைவுக்கு வந்தது. இப்பொழுது அந்தப் பெயர் எவ்வளவு திருப்திகரமா யிருக்கிறது என்று எண்ணி, பவானி சந்தோஷமடைந்தாள்.

காணாமற் போன மகன் திரும்பிவந்தால் போதுமென்றிருந்த பவானிக்கு இப்பொழுது அவன் திரும்பி வந்து தன் சகோதரனின் மகளை மணம் புரிந்து கொள்ளத் தன் சம்மதத்தை எதிர்பார்த்ததில் சொல்ல முடியாத சமாதானம் உண்டாயிற்று. சீதை அயோத்தியாபுரிக்கு வந்தது போல அவளுக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. தன் கணவரும் கனகமும் சேர்ந்து ரகுவுக்குப் 'பெண்' பார்த்துக் கொடுத்ததை அவள் வெகு நாட்கள் கழித்தே அறிந்தாள்.

மார்ச்
11 முதல்

அரவிந்த் பிக்சர்ஸ்

# முல்லைவனம்

ப்ரொட்யூசர் டைரக்டர்
V. கிருஷ்ணன்

ஸ்டூடியோ
ஸென்ட்ரல் கோவை





BHARAT
STUDIO

# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை

## 10. கொற்கைமாநகரம்

பாரத நாட்டில் உள்ள இமயமலையும் பொதியமலையும் புலவர் பாடும் புகழுடையனவாகும். சந்தனச்சோலை சூழ்ந்த பொதிய மாமலையில் செந்தமிழ் முனிவன் என்றுமிருந்து தமிழகத்தைக் காக்கின்றான் என்று பாடுவர் செஞ்சொற் புலவர்.

பொன்மலையும் வெள்ளிமலையும் விளங்கும் இந்நாட்டில் பொதியமலைக்கு ஒரு தனிப் பெருமை உண்டு. சீரிளமைத் திறம் வாய்ந்த செந்தமிழின் திருவுருவாகவே திகழ்கின்றது அம்மலை. அதனால் 'மலையம்' என்னும் பொதுப் பெயர் அதற்கே சிறப்பாக உரியதாயிற்று.

"மலயத்து ஓங்கி மதுரையில் வளர்ந்து
புலவர் நாவில் பொருந்திய தென்றல்"

என்று பொதியமலைப் பூங்காற்றைப் புகழ்ந்து பாடினார் இளங்கோவடிகள்.

இத்தகைய பெருமை சான்ற மலையில் பிறக்கும் பேறு பெற்றது பொருநை என்னும் திருநதி. தென் தமிழ் நாடாகிய நெல்லை நாட்டுக்கே உரிய அந்நதி கடலொடு கலக்குமிடத்தில் கொற்கை என்னும் துறைமுக நகரம் முன்னாளில் சிறந்து விளங்கிற்று. குமரித் துறைக்கும் கோடிக் கரைக்கும் இடையே அமைந்த கொற்கைமாநகரை நாடி வந்தனர் பிறநாட்டு வணிகர். நவமணிகளுள் ஒன்றாகிய நல்முத்து கொற்கைக் கடலில் வளமுற விளைந்தது. தென்பாண்டி நாட்டில் முத்து விளையும் துறைகளை எல்லாம் தொகுத்துப் பாடியுள்ளார் ஒரு பெருங் கவிஞர்.

"கோடும் குவடும் பொருதரங்கக்
குமரித் துறையில் படுமுத்தும்
கொற்கைத் துறையில் துறைவாணர்
குளிக்கும் சலாபக் குவாலமுத்தும்
ஆடும் பெருந்தண் துறைப்பொருநை
ஆற்றில் படுதெண் ணிலாமுத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியும் குளிர்முத்தும்"

என்பது நெல்லை நாட்டுக் கவிஞராகிய குமரகுருபர முனிவரது திருவாக்கு. கொற்கைத் துறையில் விளைந்த முத்து உருண்டு திரண்டு தெள்ளிய முத்தாகத் திகழ்ந்ததனால் அதனைக் 'குவால்முத்து' என்று சிறப்பித்தார் முனிவர். "விளைந்து முதிர்ந்த விழுமுத்து" என்று கொற்கை முத்தின் சீர்மையைப் பத்துப் பாட்டுள் ஒன்றாகிய மதுரைக் காஞ்சியும் பாடிற்று.

அயல்நாட்டு வணிகர் பொன்னையும் பொருளையும் கொடுத்து வாங்கிச் சென்ற தென்னாட்டு முத்து, கடல் கடந்து பிற நாடுகளிற் போந்து மன்னர் முடியிலும், மாதர் அணியிலும் இலங்குவதாயிற்று என்று பழங்கால யவனர் குறிப்பொன்று கூறுகின்றது.

அந்நாளில் பாண்டி மன்னர்க்கு முத்துச் சலாபமே சிறந்த செல்வம். இதனை நன்கறிந்து பாடினார் நல்லிசைப் புலவராகிய ஔவையார்.

"வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—
பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்
றொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து"

என்பது ஔவையார் வாக்கு. கொற்கையில் அமைந்த முத்துச் சலாபத்தால் சிறப்புற்ற பாண்டி மன்னன் 'கொற்கைக் கோமான்' என்றும் 'கொற்கைத் துறைவன்' என்றும் பாராட்டப் பெற்றான்.

ஒருகால் கொற்கைத் துறையின் முத்துச் சலாபத்தைக் காண்பதற்காகச் சென்றான் பாண்டி மன்னன். வேற்படை தாங்கிய வீரர் முன்னே செல்ல, வேழம்போல் நடந்து சென்ற வேந்தனைக் கண்டாள் ஒரு மங்கை. பொதிகைச் சந்தனம் பூசிய மார்பின் அழகையே பார்த்துக் கொண்டு நின்றாள். மன்னன் வீதியின் வழியே சென்று மறைந்த பின்னர், வீட்டின் உள்ளே சென்று மஞ்சத்தில் சாய்ந்தாள் மங்கை: காதலாகிக் கசிந்து கண்ணீர் உகுத்தாள். முத்து முத்தாகக் கன்னத்தில் உருண்டு ஓடிய கண்ணீரைக் கண்டாள் அவள் தோழி. "ஐயோ! கொற்கைக் கடலில் விளையும் முத்தைக் காண வந்த எம் காவலன், இக் கன்னியின் கண்ணீர்க் கடலினின்று எழுகின்ற முத்தைக் கண்டானில்லையே!" என்று வருந்தினாள்.

"இப்பிஈன் றிட்ட எறிகதிர் நித்திலம்
கொற்கையே அல்ல படுவது—கொற்கைக்
குருதிவேல் மாறன் குளிர்சாந் தகலம்
கருதியார் கண்ணும் படும்"

என்ற அழகிய பாட்டில் பாண்டியனுக்குரிய கொற்கைக் கடலின் முத்து குறிக்கப்படுகின்றது.

பாண்டி நாட்டின் பெருமையைப் பாரெங்கும் பரப்பிய கொற்கைமாநகரில் வாணி

பத்துக் கேற்ற பல சாதனங்களை அமைத்திருந்தான் பாண்டியன். அரசாங்க நாணயம் அடிப்பதற்காக அந்நகரின் அருகே அக்கசாலை ஒன்று நிறுவப் பெற்றிருந்தது. பிற்காலத்தில் சென்னையில் அமைந்த 'தங்கசாலை' போன்று முற்காலத்தில் கொற்கையம்பதியில் அமைந்தது அக்கசாலை. அச் சாலையைத் தன்னகத்தே உடைய ஊரும் 'அக்கசாலை' என்று பெயர் பெற்றது.

நாளடைவில் கொற்கைத் துறைமுகத்தை விட்டுக் கடல் விலகிப் போயிற்று. பொருநையாற்று நீரில் கலந்து வந்த மண்ணும் மணலும் துறைமுகத்தைத் தூர்த்து விட்டது. அந்நிலையில் கொற்கையில் வாழ்ந்த மக்கள் பிற ஊர்களிற் சென்று குடியேறுவாராயினர். 'கெட்டால் பட்டணம் செல்க' என்னும் பழமொழிக்கு ஏற்ப, அக்கசாலையில் வாழ்ந்த தட்டார்கள் திருநெல்வேலி நகரில் சென்று தொழில் புரிந்து வாழத் தொடங்கினர். அன்னார் அக்கசாலையை விட்டுப் பெயரும்போது அங்கு நெடுங்காலமாக வழிபட்ட பிள்ளையாரையும் உடன் கொண்டு சென்றார்கள். நெல்லைமாநகரில் அப் பிள்ளையாருக்கு ஒரு கோவில் அமைத்து அதனருகே குடியிருந்தார்கள். அன்று அவர்கள் வகுத்த "அக்கசாலைப் பிள்ளையார் தெரு" இன்றும் நெல்லையம்பதியிலே காணப்படுகின்றது.

நெல்லை நாட்டின் பழைய வரலாற்றை ஆராய்ந்து எழுத ஆசைப்பட்டார், மேலை நாட்டு அறிஞராகிய கால்டுவெல் ஐயர். நெல்லை நாட்டையே தம் தாயகமாகக் கொண்டு ஐம்பதாண்டுகள் 'இடையன்குடி' என்னும் சிற்றூரில் வாழ்ந்து, மெய்வருத்தம் பாராது உழைத்துத் தமிழ் மொழியின் தொன்மையையும் செம்மையையும் ஆராய்ந்து வெளிப்படுத்தினார் இவ்வறிஞர். தமிழகத்தில் பாண்டிநாடே பழம்பதி என்றும், பசுந்தமிழை வளர்த்த பெருமை பாண்டியர்க்கே சிறப்பாக உரியதென்றும் நன்கு உணர்ந்த கால்டுவெல் ஐயர் மேலை நாட்டு நல்லறிஞர் நூல்களில் குறிக்கப் பெற்ற கொற்கைத் துறைமுகத்தைத் துருவி அறியத் தொடங்கினார். கடற் கரையை விட்டு ஐந்து மைல் தூரம் விலகிச் சீரும் சிறப்பும் இழந்து நின்ற சிற்றூராகிய கொற்கை முற்காலத்தில் துறைமுக நகரமாக இருந்திருத்தல் கூடுமோ என்று ஐயுற்றார். அவ் ஊரிலே சென்று ஆராய்தல் இன்றியமையாதது என்று எண்ணினார். சில கூலியாட்களை அமர்த்திக் கொண்டு கொற்கையூருக்குச் சென்றார்.

வெள்ளையர் ஒருவர் விறுவிறுப்புடன் வருவதையும் அவர் பின்னே வேலையாட்கள் கடப்பாரை முதலிய கருவிகளைத் தாங்கி நடப்பதையும் கண்ட கொற்கை வாசிகள் மனம் பதைத்தார்கள். தம் முன்னோர் பாடுபட்டுத் தேடிக் கொற்கையம்பதியில் புதைத்து வைத்திருந்த பொன்னையும் பொருளையும் பெயர்த்து எடுத்துச் செல்லும் கருத்தோடு வெள்ளையரொருவர் புறப்பட்டு வந்தாரென்று எண்ணினார்கள்; கூட்டங் கூட்டமாக நின்று எட்டியும் கட்டியும் பேசினார்கள். பின்னர் அவர்களுள் ஒருவர், துணிந்து முன்வந்தார். கால்டுவெல் ஐயரை நோக்கிப் பேசலுற்றார்:—

"கொற்கையை நாடி வந்த பெரியவரே! உம்மைக் கண்டு எங்கள் உள்ளம் நடுங்குகின்றது. இவ்வூரிலே பழம் புதையல்கள்



பல உண்டு. அவற்றைப் பெயர்த்தெடுக்கும் கருத்தோடு நீங்கள் இங்கு வந்திருப்பதாகத் தெரிகின்றது. இந்த ஊர் முன்னொரு காலத்தில் சிறந்த நகரமாக இருந்தது. அப்போது மன்னரும் செல்வரும் இங்கு வாழ்ந்தார்கள். உழைப்பாளராகிய ஏழை மக்கள் கடலுள் மூழ்கி முத்தெடுத்துக் கூலி பெற்றனர்கள். அவர்கள் பாடுபட்டுத் தேடிய பணம் இந்த மண்ணிலே புதைத்து வைக்கப்பட்டுள்ளது. அப் புதையல்களைப் பெரும் பூதம் ஒன்று காத்து வருகின்றது. நீங்கள் அவற்றைப் பெயர்த்தெடுக்க முற்பட்டால் பூதம் சும்மா பார்த்துக் கொண்டு இருக்குமா? சீற்றம் கொண்டு இவ்வூரையே அடியோடு அழித்து விடாதா?

இங்கு நிகழ்ந்த ஒரு செய்தியைச் சொல்கின்றேன், கேளும்! சில ஆண்டுகளுக்கு முன்பு நெல்லை நாட்டில் ஆட்சி புரிந்த வெள்ளையர் ஒருவர் புதையல் எடுப்பதற்காக இவ்வூருக்கு வந்தார். அவர் கருத்தை அறிந்த கொற்கைக் குடிகளாகிய நாங்கள் கலக்க முற்றோம். பூதம் காக்கும் புதையலின் அருகே போக வேண்டாம் என்று அவரைப் பணிந்து வேண்டினோம். அவர் எங்களை ஏளனம் செய்வார் போல் ஒரு புன்னகை புரிந்தார். அப்பொழுது அவருடன் இருந்தவருள் ஒருவர் இவ்வூர்வாசிகளுக்கு ஒரு பாடம் கற்பிக்கத் தொடங்கினர்.

"பாடுபட்டுத் தேடிப் பணத்தைப்
புதைத்து வைத்துக்
கேடுகெட்ட மானிடர்காள்!
கேளுங்கள்-கூடுவிட்டிங்கு
ஆவிதான் போயின பின்பு
ஆரே அனுபவிப்பார்
பாவிகாள்! இந்தப் பணம்."

என்ற பாட்டைச் சொல்லி விட்டு, மண்ணுள் மூழ்கி மறைந்து கிடக்கும் புதையல்களெல்லாம் அரசாங்கத்துக்கே உரியன என்று அழுத்தமாகப் பேசினர். நாங்கள் அஞ்சி விலகினோம்.

வெள்ளை அதிகாரிக்கு ஒரு கூடாரம் அமைக்கப்பட்டது. அங்கிருந்து கொண்டு சில இடங்களைத் தோண்டிப் பார்க்கும்படி அவர் வேலையாட்களை ஏவினர்; நெற்றி வேர்வை நிலத்தில் விழ அவர்கள் பகல் முழுவதும் பாடுபட்டார்கள். கறுகறுக்கும் வேளையில் புதையல் இருக்குமிடம் ஒன்று தெரிந்தது. அதைத் தொட்டவுடன் வேலையாட்கள் கை சோர்ந்து, மெய் சோர்ந்து மயக்கமுற்று விழுந்தார்கள். அவர்களை மருத்துவச் சாலைக்கு அனுப்பி விட்டுத் தமது கூடாரத்தில் உறங்கினர். காலையில் கண் விழித்தார். சுற்றும் முற்றும் பார்த்தார். புதையல் இருந்த இடம் புலப்படவில்லை. நன்றாகக் கண்களைத் துடைத்துப் பார்த்தார். பாளையங் கோட்டையில் தம் வீட்டின் அருகே அக் கூடாரம் நிற்கக் கண்டார். அச்சம் அவருள்ளத்தைப் பற்றிக் கொண்டது. வெளியே சொன்னால் வெட்கம் என்றெண்ணி அன்று முதல் அவர் இவ்வூரருகே வருவதுமில்லை; புதையலைப் பற்றி நினைப்பதுமில்லை. இவையெல்லாம் பொய்யன்று; புனைந்துரையன்று; முற்றும் உண்மை. "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை" என்று இந்நாட்டுப் பெரியார் ஒருவர் பாடியுள்ளார். ஆதலால் பூதங் காக்கும் புதையல் அருகே போகாமல் வந்த வழியே நீங்கள் செல்லுவது நல்லது" என்று கூறி முடித்தார் கொற்கைப் பெரியார்.

அவர் சொல்லிய கதையைக் கவனமாய்க் கேட்டார் கால்டுவெல் ஐயர். "ஐயோ! நான் புதையல் எடுக்க வரவில்லை. பொருளாசையும் எனக்கு இல்லை. முன்னொரு காலத்தில் கொற்கை கடற்கரையில் இருந்ததாகச் சில குறிப்புக்களால் அறிந்தேன். அது உண்மைதானா என்று ஆராய்ந்து அறியும் ஆசையால் இங்கு வந்தேன். காசைக் கவர வந்த மோசக்காரனென்று இகழாது ஆராய்ச்சியில் ஆசையுற்ற ஒரு மாணவன் என்று நம்பி ஒல்லும் வகையில் எனக்கு உதவி செய்தல் வேண்டும்" என்று நயந்து வேண்டினர்.

அவர் உருக்கமாகச் சொல்லிய சொல்லை நம்பினர் கொற்கைவாசிகள்; வேலை செய்ய விடையளித்தனர். அப்போது அவர் செய்த ஆராய்ச்சியின் பயனாகக் கொற்கையின் பழம் பெருமை விளங்கிற்று. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பாண்டி நாட்டுச் சிறந்த துறைமுகம் கொற்கையே என்பது ஐயந்திரிபறத் துலங்கிற்று.

## நாகபுரியில் ஐயரவர்களின் நூற்றாண்டு விழா

"அமிழ்தில் இனியதடி பாப்பா" என்றார் பாரதியார்.

அந்த அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் ஆன்றோர்கள் பொழிந்து வைத்திருந்த நிதிகளை நூல்களையெல்லாம் தந்தவர் தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதய்யர் அவர்கள். அவர்களுடைய நூற்றாண்டு விழா சென்ற மாதம் 19-ந் தேதி நாகபுரி தென்னிந்திய கழகத்தின் ஆதரவில் நடைபெற்றது. திரு முத்துசுப்பிரமணியம் அவர்கள் தலைமை வகித்தார்கள். அவ்வமயம் மதுரை திரு மணி ஐயர் அவர்கள் டாக்டர் ஐயர் அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்துப் பெரியாரின் தமிழ்த் தொண்டைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். மற்றும் பல அன்பர்கள் மகா மகோபாத்தியாயரின் சேவையைப் பற்றித் திறம்படப் பேசினர்கள்.

மறுநாள் 20-ம் தேதி தென்னிந்தியக் கழகம் கலாகேந்திரத்தின் சார்பில், ஸ்ரீ மதுரை மணி அவர்களின் இன்னிசைக் கச்சேரி, லால்குடி திரு ஜயராமன் – வயலின், ஸ்ரீ முருக பூபதி – மிருதங்கம் ஆகிய பக்கவாத்தியங்களுடன் இனிது நடந்தது.

மோட்டார் எண்ணெகளுக்கு உலகிலேயே முதன்மையாக விளங்குவோர்
இதோ அறிமுகம் செய்கின்றனர் :

# உங்கள் என்ஜினுக்கு

# இரட்டை பாதுகாப்பு !



1

**இருமடங்கு சுத்திகரிப்புத் திறன்!**

- [illegible]
- [illegible]
- [illegible]

2

**தேய்மானத்திலிருந்தும் இரட்டிப்பு பாதுகாப்பு!**

- [illegible]
- [illegible]
- [illegible]




## புதிய இரட்டை பாதுகாப்பு அளிக்கும் மோபிலாயில்

பறக்கும் செங்குதிரை அடையாளமுள்ள இடத்திலிருந்து இப்பொழுதே
இப்புதிய மோட்டார் எண்ணெயை வாங்கி உபயோகிக்கத் தொடங்குங்கள் !

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)




V. 1039

# டி.கே.சி.யின் கடிதங்கள்



திருக்குற்றாலம்

நமஸ்காரம், 10—11—43

தாங்கள் மிக்க அருமையோடு எழுதிய கடிதம் (5-11-43) கிடைத்தது. எத்தனையோ ரஸமான விஷயங்கள் அதில் கிடக்கின்றன.

* "அச்சமில்லை" புத்தகம் வெகு அழகாய் அமைந்திருக்கிறது. அமைப்பு யாரையுமே கையில் எடுத்துப் படிக்கத் தூண்டும்.

கொஞ்ச நாளாகப் பாரதியார் பாடலைப் பார்த்து அனுபவித்துக் கொண்டு வருகிறேன். அவருடைய தெளிந்த பாட்டுக்களில் "அச்சம் இல்லை" என்பதும் ஒன்று. துள்ளலும் மடக்கும், உண்மைக்கு வேகம் கொடுத்து விடுகின்றன. கடைசிச் செய்யுளில் எளிமையும் ஆத்திரமும் சேர்ந்து விடுகின்றன. கவிக்கு அபார சக்தி உண்டாய் விடுகிறது.

> உச்சிமீது வான்இடிந்து
> வீழுகின்ற போதிலும்
> அச்சமில்லை அச்சமில்லை
> அச்சம் என்ப(து) இல்லையே!

இந்த உண்மையை எவ்வளவு லகுவாய் மனதில் புகுத்த முடியும் என்று புத்தகத்தைப் படித்தால் தெரிய வரும்.

"ஆத்மா என்பது உடலில் ஓர் அவயவத்தைப் போன்றதல்ல. அதற்குத் தனி இடமில்லை. உன் எத்தையும் ஊடுருவிக் கலந்து நிற்கிறது" என்று சொல்லியதை உணர்ந்து கொண்டால் எல்லாம் எளிதில் புலனாய் விடும். சரீரத்துக்குள் உயிர் நிலவி நிற்கிறது. அதேபோல அந்த உயிருக்குள் பரம்பொருள் நிலவி நிற்கிறது என்பது உறுதியான சூத்திரம். இதை விடத் தெளிவாய் எப்படி உண்மையைச் சொல்ல முடியும்.

ஏதோ இதெல்லாம் F. A. Class-ல் Trignometry படித்த காரியம் அல்ல. பரீக்ஷைக்காகப் பாடம்; பாடத்துக்காகப் படிப்பு. அவ்வளவுதான். வேறு காரியம் இதில் இல்லை—என்று மாணவர்கள் எண்ணுகிறார்கள். சமய உண்மைகளையும் அப்படியே பார்க்க வேண்டும், கற்றுவிட வேண்டும் என்றுதான் எண்ணி விடுகிறார்கள். தாங்களோ, சமயக் கல்வி வாழ்க்கைக்கு உதவுவதுதான்; அச்சம் என்பது இருக்காதல்லவா என்கிறீர்கள். ஆனால் யாரால் இத்தக் காரியத்தைச் சாதிக்க முடியும் என்று கைவிட்டு விடவே தோன்றும், முதலில். அதற்கு நல்ல ஒரு கைத்தாங்கல் கொடுக்கிறீர்கள். உண்மையான கைத்தாங்கல்தான்.

"இந்த முறையில் எடுத்த சிறு முயற்சிக்கும் நல்ல பலன் உண்டாகும். நஷ்டம் கிடையாது......குற்றம் குறைகள் ஏற்பட்டதனால் அபாயம் ஏதும் இல்லை" என்று எழுதுகிறீர்கள்.

இது என்னுடைய சொந்த அநுபவம் என்று சொன்னால் அதிகப் பிரசங்கித்தனம் அல்ல. ஏதோ காலையில் நண்பர்களோடு பேசிக்கொண்டிருக்கும் போது பாடல்களை எடுத்துச் சொல்லிப் பொழுது போக்குவது வழக்கந்தானே. ஒரு நாள் திருக்கருவை வெண்பா ஒன்று தானாக வந்தது.

> உடலில் உயிர்போல்
> உயிர்க்குயிர் ஆனானைக்
> கடல் உலகெல்லாம் தேடிக்
> காணேன் ;— கொடியதொரு
> வன்கருவை மாற்றிப்
> புரந்தவனைப் புண்ணியனைத்
> தென்கருவையிற் கண்டேன்
> நான்.

இதை மற்றவர்களுக்கு எடுத்துத் தெளிவுபடுத்துவதன் காரணமாக எனக்கும் தெளிவு கிடைத்து விட்டது. அர்த்தத் தெளிவு அன்று முழுதும் நினைவில் நிற்க நேர்ந்தது. பிறகு தூக்கத்தோடு தூக்கமாய் மறந்து போய் விட்டது. போனால் என்ன? அடி உள்ளத்தில் ஒரு மூலையில் கொஞ்சம் பதிந்து கிடக்கத்தான் செய்யும். மின்மினியின் வெளிச்சம் போலாவது கொஞ்சம் ஒளிவரத்தான் செய்யும், சமயம் நேரும்போது.

* ராஜாஜி எழுதிய புத்தகம்.

புஸ்தகத்தில் தங்கள் அநுபவமும் ஆர்வமும் நன்றாய் வெளியாகின்றன. கருத்துடன் வாசிப்பவர்களைத் தங்களோடு ஓட்டச் செய்கின்றன அவை. 'நிச்சயமில்லாதிருக்கும் பிரதேசம் என்று இருக்கிறது. அது இதோ இருக்கிறது' என்று சுட்டிக் காட்டுகிறீர்கள். தமிழருக்குப் பெரிய உபகாரம்.

வைஷ்ணவ பரிபாஷையில் தனியான பண்பாடு சுகம் எல்லாம் இருக்கிறது. அந்தப் பாஷைக்குச் செவியைச் சாய்த்தால் போதாது. இதயத்தையே சாய்க்க வேணும்.

சாதாரண வழக்கோடொட்டிய பிரயோகம் "நான் சாப்பிட்டாயிற்று" என்பதை எடுத்துக் காட்டி விட்டு, "தேவரீர் எப்பொழுது எழுந்தருளிற்று?" என்பதைச் சொன்னபோது அதன் பண்பாடும் சுகமும் எளிதில் விளங்கி விடுகிறது.

அதற்குச் சமானமான வரவேற்பு தமிழிலும் இல்லை, வேறு எந்தப் பாஷையிலும் இருக்காதோ என்று சொல்லத் தோன்றுகிறது. நண்பர்கள் காலைந்து தடவை "தேவரீர் எப்பொழுது எழுந்தருளிற்று?" என்று சொல்லிப் பார்ப்பார்களானால் நாவில் ரஸம் ஊறப் பார்ப்பார்கள். "Hallo! How this way?" என்று சொல்லிப் பார்த்தால் ரஸம் ஊறவா செய்யும்!

* * *

ஆழ்வார் திருநகரியைப் பற்றிய பாடல் மிக உயர்ந்த பாடல் என்று தாங்கள் அநுபவிக்கிறீர்கள். அந்த அநுபவத்தை வெளியிடுவதற்காகவே ஒருவன் ஸ்ரீ வைஷ்ணவனாகப் பிறக்கலாம் என்று அழகாகச் சொல்லியிருக்கிறீர்கள்.

முதல் அடியில் ஒரு சிறு திருத்தம். புஸ்தகங்களில்—ஸ்ரீ வைஷ்ணவர்கள் பதித்த புத்தகங்களில்தான்—பொரு நல், பொரு நல் என்றே எழுதியிருக்கிறது. பொருநை என்று திருத்தி, தாம்பிரவர்ணியைக் கெடுத்து விட்டேன். இது சிறு பாதகந்தான். பிறகு தான் மகா பாதகம் செய்ய நேர்ந்தது!

இதுவோ திருநகரி
  ஈதோ பொரு(நை)
இதுவோ பரமபதத்து
  எல்லை—இதுவோதான்
வேதம் (பகர்ந்திட்ட)
  (மெய்ப்பொருளின்) உட்பொருளை
ஓதும் சடகோபன்
  ஊர்.

மூன்றாவது அடி, புஸ்தகத்தில்

"வேதம் தமிழ் செய்த
  மெய்ப் பொருட்கும் உட்பொருளை"

என்பதாக இருக்கிறது. எனக்குப் பொருள் விளங்கவில்லை. ஆனால் நம்முடைய வித்வத் கோஷ்டிகள் "வேதம் தமிழ் செய்த" என்ற சொல்லைச் சொல்லிச் சொல்லி ஆனந்த பரவசத்தராய் ஆய்க் கொண்டே இருப்பார்கள். இன்னும் அந்தப் பரவசம் அவர்களை விட்டபாடாக இல்லை. பொதுவாகப் பொருள் இல்லாவிட்டால் தானே (சங்கீதத்தில் உள்ளதுபோல்) பரவசத்துக்கு உள்ளாகலாம். மேலும் மெய்ப் பொருட்கும் உட்பொருளை என்று சொல்வதில் வேண்டாத படி நெருக்கடி உண்டாகிறது. அதை இளக்குவதற்காக,

"மெய்ப்பொருளின் உட்பொருளை" என்று மாற்றினேன். பாடலைத் தாங்கள் அநுபவித்ததின் காரணமாகத்தான் இத்தனை நீண்ட குறிப்பெல்லாம் எழுதுகிறேன்.

10-11-43ல் எழுத ஆரம்பித்த கடிதம் இன்று 15-11-43ல் ஒருவாறு முடிகிறது. எத்தனையோ விஷயங்கள் குதித்துக்கொண்டு வருகின்றன. ஆனால் அஹிம்சைத் தத்துவத்தை அநுசரிக்க வேண்டாமா என்று தான் நிறுத்திக் கொள்கிறேன்.

இங்ஙனம்,
டி. கே. சிதம்பரநாதன்

# ஹாஸ்யக் களஞ்சியம்



" உன் கணவர் உன்னுடன் சண்டை போட்டதை மாத்திரம் வந்து கதை கதையாகச் சொன்னாய்! அப்புறம் நீங்க இரண்டு பேரும் சினிமாவுக்குப் போனதை மட்டும் என்னிடம் வந்து சொல்லவில்லையே!"




" காக்கா கத்துகிறது! ஊரிலிருந்து யாரோ வரப் போகிறார்கள்!"





" அட்டா! ஆபீஸிலிருந்து வந்தவுடன் உமக்கு என்ன வரவேற்பு!"

" தெரியாதா, உங்களுக்கு? இன்னைக்குச் சம்பளத் தேதியோன்னோ?"












## இட நெருக்கடி


௧


௨


௩


" சம்பள உயர்வா ? உமக்கு மட்டும் சம்பள
உயர்வு கொடுத்தால் உங்கள் பின்னாலேயே மற்ற
வர்களெல்லாம் வந்து நிற்பார்கள் !"


" என் இருதயத்தையே உன்னிடம் வைத்
இருக்கிறேன்! நம்பா விட்டால்,-இதோ பரிசோ
தனை பண்ணிப் பார் !"
டாக்டர்

சாமா


" நான் உங்களோடு பம்பரம் ஆடினேன்
என்று தெருவில் இருக்கிற மாமாவினிடமெல்
லாம் சொல்லி விடாதிங்கோ !"
" ஏன், தாத்தா சொன்னால் அவர்களும்
விளையாட வந்து விடுவார்களா ?"


பாங்கி
" நாற்காலிக்கு ஒரு கால் உடைந்து
போச்சுன்னு அதற்காக ரூபாய் நோட்டுக்
கட்டையா காலுக்கு முட்டுக் கொடுக்கிறது?"

பிரயாணத்தில் குறைந்ததொரு நேரந்தான் . . . அதிக நேரம் உங்கள் குடும்பத்துடன் கழிக்கலாம்.

ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக

ஏழே மணி நேரத்தில்

# சிங்கப்பூர்



பறந்து செல்லலாம்

## சென்னையிலிருந்து வெள்ளிக்கிழமைதோறும் ஸெர்விஸ்

- நான்கு எஞ்ஜின்களுள்ள கான்ஸ்டலேஷனில் மிக சௌகரியமாகவும் பாதுகாப்புடனும் பிரயாணம் செய்யலாம்.
- எவ்வித அசௌகரியமோ தொந்தரவோ இல்லாமல் சிறிது மணிநேரப் பிரயாணம் தான்.
- உங்கள் தேவையில் கவனிக்க ஹோஸ்டெஸ் மற்றும் பர்ஸர்கள் எப்பொழுதும் ஆஜருண்டு.
- இரவு எங்கும் தங்காது.
- நல்ல ருசியான சைவ போஜனம் அல்லது மாமிச போஜனம்—இலவசம்.
- 12 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு விசேஷ ஏற்பாடுகள், பாதிக் கட்டணம்.
- சிங்கப்பூரிலிருந்து மலாய் நாடுகளுக்கு சௌகரியமான ரயில், விமானத் தொடர்பு வசதிகள்.

புறப்பாடு மதராஸ் வெள்ளிக்கிழமை இரவு 10-45 மணி
வருகை சிங்கப்பூர் சனிக்கிழமை காலை 7-45 மணி
(லோக்கல் டைம்)

### கட்டணம்

| | முதல் வகுப்பு | டூரிஸ்ட் வகுப்பு |
|---|---|---|
| மதராஸ்-சிங்கப்பூர் (ஒற்றைப் பிரயாணம்) | ரூ. 854/- | ரூ. 680/- |

- திரும்பும் பிரயாணத்திற்கு ஒற்றைப் பிரயாண கட்டணத்தின்பேரில் 20% தள்ளுபடியுண்டு; ரிட்டர்ன் டிக்கட் ஒரு வருஷகாலத்திற்கு செல்லுபடியாகும்.
- கூட எடுத்துச் செல்லாத சாமான்களுக்கு விசேஷச் சலுகைக் கட்டணங்கள்.

ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் மார்க்கமாக சௌகரியத்துடன் பிரயாணம் செய்யுங்கள்.

புக்கிங் மற்றும் இதர பிரயாண விவரங்களுக்கு நேரிலோ கடித மூலமோ விசாரியுங்கள்:



## ஏர்-இந்தியா இன்டர்நேஷனல்

கஸினோ மான்ஷன், 35, மவுண்ட்ரோட், மதராஸ்-2
டெலிபோன்: 86194

அல்லது இந்தியன் ஏஜென்ஸ் கார்ப்பொரேஷன்
திருச்சி, திருவனந்தபுரம், கொச்சி, கோயமுத்தூர், பெங்களூர்

AIL 1195




அத்தியாயம் 46

## சேவையின் இன்பம்

ஆவலாக இருந்தது என்றா சொன்னேன்? ஆவல் மாத்திரமில்லை. கூடவே ஒரு கலக்கமும் தோன்றிற்று. "கடவுளே! இது எதில் போய் முடியப் போகிறதோ?" என்று எண்ணினேன். டென்னிஸ் விளையாடிக்கொண்டிருந்த ரமேஷின் பக்கம் என்னையறியாமல் திரும்பிப் பார்த்தேன். அந்த சமயம் அவர் ஆகாயத்தில் எழும்பிப் பந்தை ஓங்கி அடித்தார். பந்து பறந்தது.

சுலோசனா என்னைக் கவனித்துக்கொண்டே, "அதற்குள் ரமேஷைப் பார்க்கிறாயே!" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தாள்.

எனக்குக் கோபம் வந்தது. "விளையாடாதே, சுலோசனா. சொல்வதாக இருந்தால் சொல்லு. இல்லாவிட்டால் உள்ளே போகிறேன்" என்றேன்.

"கோபித்துக் கொள்ளாதே, இந்து! அம்மா உன் அப்பாவைப் பற்றியும் அவருக்குள்ள நிலபுலங்களைப் பற்றியும் கேட்டுக் கொண்டிருந்தாள். 'நல்ல பணக்காரர் போலிருக்கிறது. இந்தக் கிராமாந்தரத்து ஆசாமிகள் பசையுள்ளவர்களாக இருந்தாலும், இல்லாத மாதிரியேதான் இருப்பார்கள்' என்றாள்.

"அதற்கு அப்பா 'உனக்கு எதற்கு இந்தக் கவலையெல்லாம்?' என்றார். 'இல்லேன்னா! அந்தப் பெண் ரொம்ப சமர்த்தாகவும், சுட்டிகையாகவும், நல்ல லக்ஷணமாகவும் இருக்கிறாள். சுமாராகப் படித்திருக்கிறாள். தேனாகப் பாடுகிறாள். இதை விட நம்ப ரமேஷுக்கு நல்ல பெண்ணாகக் கிடைத்துவிடப் போகிறாளா? கொஞ்சம் சுமாராகப் பணம் இருந்தால் போதும், ரமேஷுக்குப் பண்ணி விடலாம் என்று நினைத்தேன்' என்றாள். 'ஆமாம்! சுலோவுக்கு அவசரமில்லை. ரமேஷுக்குத்தான் அவசரம் வந்து விட்டதாக்கும். மேலும் இவர்கள் நம்ம இஷ்டப்படி கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறார்களாக்கும்?' என்று அப்பா தட்டிக்கழித்து விட்டார்" என்று சொன்னாள் சுலோசனா.

"அப்படியானால் நான் சீக்கிரம் ஊருக்குப் போய்விட வேண்டும், சுலோ."

"போறுமே? நான் உன்னிடம் இதைப் பற்றிச் சொல்லவே கூடாது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். உனக்குத்தான் தெரியுமே? நான் எதைச் சொல்லக் கூடாது என்று தீர்மானிக்கிறேனோ அதைத்தான் முதலில் சொல்லுவேன்!"

"என்னிடம் சொன்னதுதான் சரி. இந்த மாதிரி எண்ணத்துக்கு இடம் கொடுக்க நான் விரும்பவில்லை."

"என்னுடைய மன்னியாவதற்கு உனக்கு இஷ்டமில்லையா? நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தேனே!"

"இல்லை, சுலோசனா! இது மாத்திரம் நடக்காத காரியம்."

"இதில் உனக்கு என்ன குறை இருக்கிறது?"

"ஏன் என்று கேட்கிறாய்? உன்னிடம் தான் நான் என் மன நிலையைச் சொல்லியிருக்கிறேனே! என் உள்ளத்தில் அவரைத்தவிர வேறு யாருக்கும் இடம் கிடையாது. இது நிச்சயம்."




"என்ன இந்துமதி, நீ இன்னும் அதை நினைத்துக் கொண்டிருக்கிறாயா? நீதான்

அவன் கடிதம் எழுதவில்லை, இருக்கு மிடம் தெரியவில்லை என்றெல்லாம் புகார் சொன்னுயே? இன்னும் அதை நினைத்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்?'' என்று கேட்டாள் சுலோசனு.

"அவர் எழுதவில்லை என்று வருத்தப் பட்டேனே தவிர, நான் ஒன்றும் உன் னிடம் புகார் சொல்லவில்லையே?''

"இதுதான் எனக்குப் பிடிப்பதே யில்லை. நம் தேசத்துப் பெண்களுக்கு அடிமை மனப்பான்மை ரொம்ப அதிகம். கல்யாணமாவதற்கு முன்பே நீ இப்படி இருக்கிருயே? ஆகி விட்டால் இந்து என்ற பெண் மறைந்தே போய் விடுவாள் அப்படித்தானே?''

"அதில் என்ன சந்தேகம்? அதை நான் பெரிய பாக்கியமாகக் கருதுவேன்.



தன்னலமில்லாமல் ஒருவருக்குச் சேவை செய்வதைப் போல் இன்பம் வேறெதுவும் இல்லை.''

சுலோவுக்குக் கோபம் வந்துவிட்டது. ''உன்னைப் போலப் பெண்கள் இன்னும் இருப்பதனால்தான் நம் தேசம் முன்னுக்கு வரவே மாட்டேனென்கிறது. நான் 'பெண்களும், அடிமை மனப்பான்மையும்' என்று ஒரு கட்டுரை எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்பப் போகிறேன். இந்த அடிமை மனப்பான்மையைப் போக்குவதற்காக ஒரு கிளர்ச்சி இயக்கமே நடத்தப் போகிறேன், பார்.''

''நீ என்ன செய்தாலும் நம் நாட்டுப் பெண்கள் என்னைப் போலத்தான் இருப்பார்கள். நீ மாத்திரம் என்ன செய்யப் போகிறாய்? ஒரு நாள் என் மாதிரியே இன்னொருவருக்குத் தொண்டு செய்வதைப் பாக்கியமாகக் கருதுவாய். உனக்கு அந்த அனுபவம் ஏற்படாததால் இப்படியெல்லாம் பேசுகிறாய். அவ்வளவுதான்.''

''சரி. அதைப் பற்றியெல்லாம் இப்போது தர்க்கம் செய்வானேன்? இப்போது ஒன்றும் நிச்சயமாகி விடவில்லையே? ஏதோ அம்மா சொன்னதைச் சொன்னேன், அவ்வளவுதான். நீ இந்த வீட்டில் இருந்து விட்டால் நன்றாக இருக்கும் என்பது என் ஆசை. உன் கல்யாணத்தைப் பற்றி நான் ஒன்றும் அவசரப்படவில்லை'' என்றாள் சுலோசனா.



''நீ ஏன் இப்படி அல்லி ராணிமாதிரிப் பேசுகிறாய் என்று எனக்கு வியப்பாக இருக்கிறது.''

''நான் ஒன்றும் அல்லி இல்லை. அவள் வீரம் பேசினாள். என்ன பயன்? கடைசியில் ஒரு திருடனை மணந்து கொண்டாள். அவனுக்கு அடிமையாக இருந்தாள். நான் மணந்து கொண்டாலும் அடிமையாக இருக்க மாட்டேன். எனக்குச் சுதந்திரமளித்து, தன் வீட்டு ராணியாக நடத்துகிறவனைப் பார்த்துத்தான் நான் மணந்து கொள்வேன். இந்தக் கதையெல்லாம் உனக்கு எதற்கு? அது கிடக்கட்டும். உன் உள்ளத்தை இவ்வளவு தூரம் கவர்ந்த அந்த பாக்கியசாலி யார் என்று இன்னும் சொல்லவில்லையே!'' என்று கேட்டாள்.

''என் கனவு நினைவாகும் போது தானாகத் தெரிகிறது'' என்றேன்.

அந்தச் சமயத்தில்தான் காதைத் துளைத்துக் கொண்டு மோட்டார் கார் ஊதுகுழலின் சத்தம் கேட்டது. இதற்குள் இலேசாக இருட்டி இருந்தது. கண்களைக் கூசச் செய்து கொண்டு ஒளி வெள்ளம் முன்னே வரப் பின்னால் ஒரு அழகிய நீல நிறக் கார் வந்தது. போர்டிகோவில் கார் நின்றதும் அதிலிருந்து ஒரு பெரிய மனிதர் இறங்கினார். ஒரு நாகரிக நங்கையும் இறங்கினாள்.

அவரைக் கண்டதும் சுலோசனா துள்ளி எழுந்தாள். ''இவர்தான் இந்த 'தீபஜோதி 'டிஸ்ட்ரிப்யூடர்ஸ்' கம்பெனி முதலாளி ஜோதிலால். வா, போய்ப் பார்க்கலாம்'' என்று ஓடினாள். நான் தயங்கி நின்றேன்.

அவருடைய கனத்த குரல் கேட்டது. ''ஹலோ! ஷீலா, அப்பா இருக்காரா?'' என்று கேட்டார்.

''ஓ யெஸ்! வாங்கோ! வாருங்கள் சோபனா!'' என்று சொல்லிக் கொண்டே அந்தப் பெண்ணுடைய கைகளைப் பிடித்து அழைத்துக் கொண்டு உள்ளே சென்றாள் ஷீலா.

அந்த சோபனா என்னும் பெண்மணி வடநாட்டுப் பாணியில் புடவை உடுத்திக் கொண்டிருந்தார். ஹிந்தியும், ஆங்கிலமும் கலந்த பாஷையில் பேசினார். என்னைச் சுலோசனா மறுபடியும் கூப்பிடவில்லை. ஆகவே, நான் பின் பக்கமாகச் சென்று மாடிக்குப் போய் விட்டேன். கீழே ஒரே கோலாகலமாக இருந்தது. கலகலவென்று அவர்கள் சிரித்த சிரிப்புச் சத்தத்தில் வீடே அதிர்ந்தது.

ஆனால் என் மனம் எதிலும் ஈடுபடவில்லை. சுலோசனா கேட்ட கேள்வியில் லயித்திருந்தது. அவரை நினைத்துக் கொண்டிருப்பதில் 'என்ன பயன்?' என்றல்லவா கேட்டாள்? என்ன பயன் வேண்டும்? ஒருவரிடம் அன்பு செலுத்துவதற்குப் பலன் எதிர்பார்க்க வேண்டுமா? அப்படி நினைப்பது என்ன மதியீனம்? அன்பு செலுத்துவதே ஒரு பலன்தான். அதிலேயே ஒரு இன்பம்

இருக்கிறது. பலனை எதிர்பார்த்தால் அதன் அழகு குறைந்து போய் விடுகிறது. பலனை எதிர்பார்த்து நேசித்தால் அது கீழ்த்தரமான அன்பாக அல்லவா ஆகி விடும்? அன்பு செலுத்துவதற்குப் பலன் அன்புதான். ரங்கதுரை என்னை மறந்து விட்டால் கூட, என்னுடைய அன்பை அவரால் ஒன்றும் செய்துவிட முடியாதே. அது எனக்குப் போதுமானது என்று எண்ணினேன்.

## அத்தியாயம் 47

# ஜோதி ஸ்டூடியோ

சற்றைக்கெல்லாம் என்னைத் தேடிக் கொண்டு வந்தாள் சுலோசனா. "என்ன இந்து! திடீரென்று எங்கேயோ மறைந்து விட்டாயே! உன்னை ஜோதிலாலுக்கும், அவர் மனைவி சோபனாவுக்கும் அறிமுகப்படுத்தி வைக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தேன். அது சரி, இப்போது வந்திருந்தாரே அவர் பிரபல பட முதலாளி. நம்மையெல்லாம் ஜோதி ஸ்டூடியோவில் ஷூட்டிங் பார்க்கக் கூப்பிட்டிருக்கிறார். நாளை இரவு ஒன்பது மணிக்கு ஆரம்பமாகுமாம்."

"இரவு ஒன்பது மணிக்கா? அதற்குமேல் வேலை ஆரம்பித்தால் எப்போது முடியும்?" என்று கேட்டேன்.

"இது தெரியாதா உனக்கு? சினிமா எடுப்பதில் பாதிக்கு மேல் இரவில்தான் எடுப்பார்கள். வெளிக் காட்சிகளைத் தான் பகலில் எடுப்பார்கள். வீட்டினுள்ளே நடப்பதாக வரும் காட்சிகள் அநேகமாக இரவு நேரங்களில் எடுப்பார்கள். விடிய விடிய சிவராத்திரி மாதிரிதான். சில சமயம் விடியற்காலம் ஐந்து கூட ஆகி விடும்."

"அப்படியா? நாளை இரவு போனால் கூட அவ்வளவு நேரம் ஆகுமா?"

"அது என்னவோ தெரியாது. போய்ப் பார்த்தால்தான் தெரியும். சோபனாவிடம் என்ன காட்சி எடுக்கப் போகிறார்கள் என்று விசாரித்தேன். கதாநாயகனும், கதாநாயகியும் சந்திக்கும் காட்சியாம். மேலும் நடிப்பது அழகி அருணாதேவியாம். ஆகவே கட்டாயம் பிரமாதமாக இருக்கும்."

அருணாதேவி நடிக்கும் காட்சியை நேரில் பார்க்கப் போகிறோம் என்றதும் எனக்கு உற்சாகமாக இருந்தது. சினிமாவைப் பார்த்ததிலிருந்து அவரை நேரில் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தேன். அது இவ்வளவு சுலபமாக நிறைவேறப் போவதைக் குறித்து எனக்கு சந்தோஷம் தாங்கவில்லை.

அருணாதேவியின் அழகிய முகத்தைப் படங்களில் நான் பார்த்த போதெல்லாம் என்னைவிட ஒன்றும் அவள் பிரமாதமான அழகி இல்லை என்று தோன்றிக் கொண்டே இருந்தது. 'இவளுடைய இடத்தில் நான் இருந்தால்' என்ற எண்ணம் கூடத் தோன்றியது என்பதை நான் மறைக்க விரும்பவில்லை. எளிமையான சூழ்நிலையில், ஒன்றும் தெரியாது வளர்ந்து வந்த என்னை, இந்த விஷயங்களெல்லாம் வெகு சீக்கிரம் கவர்ந்தன.

சுலோசனா ஏதோ துப்பறியும் நாவல் படித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கட்டிலின் தலைப் பக்கத்தில் விளக்கு இருந்தது. எனக்கும் தூக்கம் வரவில்லை. சுலோசனாவின் அறையில் தான் நானும் இருந்தேன். அந்த வீட்டில் விருந்தினருக்காக ஒரு தனி அறை இருந்த போதிலும் சுலோசனா என்னைத் தன் அறையிலேயே இருக்கச் சொன்னது, எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது.

சுலோசனாவின் அறை மிகவும் அழகாக இருக்கும். அறையின் ஜன்னல்களுக்கு நீல நிறப் படுதாக்கள் போட்டிருக்கும். ஒரு பக்கத்தில் சிறிய கண்ணாடியுடன் கூடிய அலங்கார மேஜை. அதன் அறையைத் திறந்து பார்த்து விட்டு ஒரு நாள் அதிசயித்துப் போனேன். நாலைந்துவிதப்பௌடர்கள், விதவிதமான பாட்டில்கள், வாசனைப் பொருள்கள், லிப்ஸ்டிக் போன்ற சாமான்கள் இவை நிறைந்திருந்தன. இப்போது எனக்கே அதையெல்லாம் பற்றித் தண்ணீர் பட்டபாடாகத் தெரியும், ஆனால் நான் அப்போது வியந்து போனேன். அவற்றையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக உபயோகித்துப் பார்க்கவும் தொடங்கினேன்.

இத்தகைய அலங்காரங்கள் நிறைந்த சுலோசனாவின் அறையில் பூப்போன்ற மெத்தையில் படுத்துக் கொண்டிருந்த போதிலும் கூட ரங்கதுரையின் நினைவு என் மனத்திலிருந்து நீங்கவில்லை. அவர் பாடியது, பேசியது, விடைபெற்றுக் கொண்டது முதலியவற்றை எண்ணிப்

பார்த்துக்கொண்டே இருந்தேன். வெகு நேரம் இப்படி மனோராஜ்யங்களில் ஆழ்ந் திருந்தபிறகு சுலோசனா என்ன செய்கிறா ளென்று நிமிர்ந்து பார்த்தேன். புஸ்தகம் கட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தது. அவ ளும் தூங்கி விட்டிருக்கிறாள். ஆகவே மெதுவாகச் சென்று அவள் கட்டிலின் பின்னால் எரிந்துகொண்டிருந்த விளக்கை அணைத்துவிட்டுப் படுத்துக்கொண்டேன்.

மறுபடியும் ரங்கதுரையைப் பற்றிய எண்ணங்களோடேயே தூங்கிவிட்டேன்.

**ம**று நாள் பொழுது விடியும்போதே எனக்குப் புதிய உற்சாகம் ஏற்பட்டது.

சுலோசனா சாப்பாடானதும், துணி மணிகள் வாங்குவதற்குக் கடைக்குப் போகலாமென்று கூறினாள். ஏகப்பட்ட துணிமணிகள் வாங்கிய பிறகு வீட்டுக் குப் புறப்பட்டோம். சுலோ சனா மிக உற்சாகமாக என் னிடம் ஏதோ பேசிக் கொண்டே காரைக் கிளப்பி னாள். கார் கிளம்பிற்று. வாஸ்தவம் தான். ஆனால் வேகமாகப் பின்னால் சென்று அங்கிருந்த ஒரு மரத்தில் மூட்டிக் கொண்டு நின்றது. நல்ல வேளையாக அதிகமாக ஒன்றும் பழுது ஏற்பட வில்லை. ஒரு பக்கத்தில் நன் றாக நசுங்கி விட்டது. நல்ல வேளை அதோடு போயிற்றே என்று நான் நினைத்தேன்.



வீட்டுக்குத் திரும்பியதும் ரமேஷ் காரைப் பார்த்து விட்டு, "ஏன் ஷீலா! இந்துமதிக்குக் கார் ஓட்டக் கற்றுக் கொடுத்தாயா?" என்றார்.

"இல்லவே இல்லை. ஷீலா சொன்னா லும் நான் காரை ஓட்ட மாட்டேன்" என்றேன் நான்.

அதற்குள் மீரா "இல்லே, அண்ணா! இந்து அக்கா ஓட்டவில்லே. ஷீலாதான் சளசளன்னு பேசிண்டே காரை ஸ்டார்ட் பண்ணினா. 'ரிவர்ஸ் கீர்' விழுந்ததைக் கவனிக்காமே ஓட்டினாள். அதனால்தான் பின்னாலே இருந்த மரத்திலே போய் டபார்னு இடிச்சுடுத்து" என்றாள்.

"அதான் கேட்டேன். ஆக்ஸிடென்ட் ஏதாவது ஆகியிருந்தால் மூன் பக்க மல்லவா 'டாமேஜ்' ஆகும்? அதனால் தான் ஷீலா இந்துவுக்கு ஓட்டக் கற்றுக் கொடுத்தாளா என்று கேட்டேன். அப்பா! ஷீலாவுக்குக் கார் ஓட்டவே தெரியவில்லை. வம்பளந்து கொண்டே கார் ஓட்டலாமா? இனிமேல் காரை ஓட்டக் கூடாது என்று சொல்லுங்கள். அதிலும் இந்துமதி இருந்தால் ஓட்டவே கூடாது என்று சொல்லுங்கள், அப்பா!"

"எல்லாம் நான் சரியாகத்தான் ஸ்டார்ட் பண்ணினேன். எவ்வளவு நாசுக்காக கீர் போட்டு அக்ஸிலிரேட்டரை அழுத்தினேன், தெரியுமா?"

"ஆமாம்! இவள் ரொம்ப சரியாகத் தான் எல்லாம் செய்தாள். ஆனால் பின் னாடி மரம் இருந்ததுதான் தவறு. தன்னை இவள் திரும்பிப் பார்க்க மாட்டா ளென்று தெரிந்து, மரம் நகர்ந்து கொண் டிருந்திருக்க வேண்டும். அப்போது டாமேஜ் ஏற்படாமல் இருந்திருக்கும்."

"போறும். 'ஷட் அப்!'"

"அப்பா! நான் இவள் பேரில் உங்கள் காரை டாமேஜ் பண்ணியதாகக் கேஸ் போடுகிறேன்."

"அதுதான் சரி, ரமேஷ் என்னையே வக்கீலாக வைத் துக் கொள். எனக்கு பீஸ் கொடுக்கலாம். நஷ்ட ஈடு கொடுக்கலாம். என்ன அரு மையான யோசனை!" என் றார் பத்மநாபன்.

இதை யெல்லாம் கேட் டுக் கொண்டிருந்த கோமள வல்லி அம்மாள், "நீங்கள் செய்தாலும் செய்வீர்கள். ஈசுவரா! இவர்களுக்கெல்லாம் நல்ல புத்தியைத் தாலாகாதா?" என்று கொஞ்சம் நாடகப் பாணியில் கூறினார்.

**மா**லை வந்தது. என் பரபரப்பு உச்ச நிலை யடைந்தது. நின்ற இடத்தில் நிற்க முடியவில்லை. சீக்கிரம் அலங்காரங்களை முடித்துக் கொண்டு தோட்டத்துக்குப் போய் நின்று கொண்டிருந்தேன். சுலோ சனா மெதுவாகத் தன் அலங்காரங்களை யெல்லாம் முடித்துக்கொண்டு அறையி லிருந்து வெளியில் வந்தாள். வெண்பனி போன்ற தூய வெண்மை நிறச் சேலை யும், கரும் பச்சை நிற ரவிக்கையும் அணிந்திருந்தாள். அவளையே ஒரு சினிமா நடிகை என்று கூறலாமென்று எனக்குத் தோன்றியது.

என்னைக் கண்டதும் கரகர வென் இழுத்துக் கொண்டு தன் அறைக்குப் போனாள். தன் அலமாரியைத் திறந்

ஒரு அழகிய வில்க் சேலையைக் கொடுத்து உடுத்திக் கொள்ளச் செய்தாள். நானும் சந்தோஷமாக உடுத்திக் கொண்டேன். பிறகு என் தலைப் பின்னலை அவிழ்த்து வட்டமாகக் கட்டி, ஒரு பட்டு ரோஜாவை நடுவில் வைத்து விட்டாள். எனக்கே என்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டபோது வியப்பாக இருந்தது. நானும் ஒரு புதிய நாகரிகப் பெண்ணாக மாறியிருந்தேன்.

ரங்கதுரையின் நினைவு வந்தது. நினைவு வந்ததென்று சொல்வது தவறு. ஒரு கணமாவது மறந்திருந்தால்தானே நினைவு வந்தது என்று கூறலாம்? ஆகவே என் அலங்காரம் அவருக்குப் பிடித்திருக்கும் என்று நினைத்துக் கொண்டேன். என் உள்ளம் மலர்ந்தது. உடனேயே இனந் தெரியாத ஒரு சோர்வு உண்டாயிற்று. 'இதெல்லாம் எதற்காக? அவர் இங்கில்லாமலிருக்கும்போது எதற்காக இத்தனை அழகிய புடவையை அணிந்து கொள்ள வேண்டும்? யாருக்காக அலங்கரித்துக் கொள்ள வேண்டும்? ஒன்றும் வேண்டியதில்லை' என்று எண்ணிக் கொண்டே தலைக் கட்டை இழுக்கப் போனேன். சுலோசனா என் கையைப் பிடித்துக் கொண்டாள்.

"என்ன செய்ய வேண்டும், இந்துமதி. நான் சரி செய்கிறேன். கலைத்து விடாதே" என்றாள் சுலோசனா.

அந்த சமயத்தில் ரமேஷ் லீலாவைக் கூப்பிட்டு நேரமாகி விட்டதென்று அறிவித்தார். மீராவைத் தவிர அனைவரும் புறப்பட்டுச் சென்றோம். மீரா எட்டு மணிக்குத் தூங்கி விட வேண்டும். காலையில் ஐந்தரை மணிக்கு எழுந்து விட வேண்டும். பத்மநாபன் அதில் மிகவும் கண்டிப்பானவர்.

விஜயராமபட்டினத்தில் நான் பார்த்த பத்மநாபனுக்கும், சென்னையில் பார்த்த அட்வொகேட்டுக்கும் மிகவும் வித்தியாசம் இருந்தது. விஜயராமபட்டினத்தில் வேஷ்டிதான் உடுத்திக் கொண்டிருந்தார். சிறிய ருத்ராட்சம் ஒன்று கழுத்தில் இருந்தது. அதை அவர் மறைத்ததில்லை. சென்னையிலோ தினமும் ஐரோப்பிய உடையிலேயேதான் காட்சியளித்தார். விடியற்காலையில் எழுந்து ஸ்நானம் செய்துவிட்டு ஏழு மணிக்கு முன்பாகவே பூஜை செய்து விட்டு வந்து விடுவார். அவருடைய பூஜை அறை மிக சுத்தமாக இருக்கும். அதில் ஒருவரையும் அவர் அனுமதிக்க மாட்டார். ஆனால் அரை மணி கழித்துப் பார்த்தால் இவரா பூஜை செய்தார் என்று தோன்றும். 'ஸூட்' போட்டுக் கொண்டு, 'டை' கட்டிக் கொண்டு அடையாளமே தெரியாதபடி மாறி விடுவார்.

அவர் பூஜை புனஸ்காரங்களைச் சீக்கிரம் முடித்து விட்டு, உடை மாற்றிக் கொள்ளப் போவதைப் பார்த்தால் தாம் பூஜை செய்தது வெளியில் தெரிந்து விட்டால் அவமானமென்று கருதுவதுபோல் தோன்றும். எனக்கு இது வேடிக்கையாக இருந்தது. ஆனால் சுலோசனாவோ அவர் பூஜை செய்வதைக் கேலி செய்வாள். அவளுக்குப் பூஜை, சிராத்தம் இதெல்லாம் மூடப் பழக்க வழக்கங்கள். நானோ அவைதான் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை என்று எண்ணுபவள். இருவரும் எப்படித்தான் அவ்வளவு சிநேகமாக இருந்தோமோ! ஈசன்தான் அறிவார். சுலோசனாவிடம் எனக்குப் புரியாத, பிடிக்காத பல விஷயங்கள் இருந்த போதிலும் அவளுடைய கபடமற்ற பேச்சும், செய்கைகளும் என்னை மிகவும் கவர்ந்திருந்தன.

எல்லோரும் புறப்பட்டு ஸ்டுடியோவுக்குச் சென்றோம்.

ஜோதிலாலும் சோபனாவும் வாசலில் நின்று கொண்டு வரவேற்றார்கள். சோபனா கலகல வென்று எல்லோருடனும் பேசிக்கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தாள். முதலில் ஜோதிலாலுடைய ஆபீஸ் அறைக்குச் சென்று உட்கார்ந்தோம். காப்பி கொண்டு வரச் சொல்லி உபசரித்தாள் சோபனா. என்னை அவளுக்கு அறிமுகம் செய்து வைத்தாள் சுலோசனா. சோபனா என்னுடன் தமிழில் பேச முயற்சித்தாள்.

"நீங்கள் ஊர் எங்கே?" என்றாள்.

"தெற்கே ரொம்ப தூரத்தில் இருக்கிறது. குங்குமத்துறை என்று பெயர்."

"தெற்கு என்றால் தெரியுமா சோபனா?" என்று கேட்டாள் சுலோசனா.

"ஓ! தெரியும். ஸௌத்!"

"ஷூட்டிங் எப்போது ஆரம்பிக்கும்?" என்று கேட்டாள் சுலோசனா.

"ரொம்ப சீக்கிரம். அருணா தேவி 'மேக் அப்' இன்னும் முடியல்லே. முடிந்தவுடனே நம்மைக் கூப்பிடுவார்கள்."

ஜோதிலால் பத்மநாபனைப் பார்த்து, "ரொம்பப் பெரிய ஸெட்டிங் போட்டிருக்கோம். இந்தக் கட்டம் தான் ரொம்ப நன்றாக இருக்க வேண்டுமென்று

என் ஆசை. ஹீரோவும் ஹீரோயினும் சந்தித்துக் கொள்ளும் கட்டம் இன்று எடுக்கப் போகிறோம். இதில் ராஜகுமாரனுடைய தோழனாகச் சந்துரு என்று ஒருவன் நடிக்கப் போகிறான். ரொம்ப 'ஜாலி பெல்லோ!' ரொம்ப நன்றாகச் செய்கிறான். நீங்கள் பார்த்தால் பிரமித்துப் போய் விடுவீர்கள்."

"அப்படியா? ஹீரோவாக நடிப்பது யார்?"

"சம்பத் குமார் என்பவரைத்தான் போட்டிருக்கிறோம்."

"அவர் நடித்த படங்கள் எதையும் நான் பார்த்ததில்லையே?" என்றார் பத்மநாபன்.

"அவர் ரொம்ப நல்ல நடிகர் ஆயிற்றே? எனக்கு ரொம்பப் பிடிக்கும் அவருடைய நடிப்பு. மிகச் சிறந்த குணசித்திர நடிகர்" என்றாள் சுலோசனா.

சற்றைக்கெல்லாம் ஒரு பையன் வந்து 'வரலாம்' என்று சொல்லி விட்டுப் போனான். ஒரு பெரிய தகரக் கொட்டகைக்குள் நுழைந்தோம். உள்ளே சென்றதும் பிரமித்துப் போனேன்.

மலைகள் வரையப்பட்டிருந்த திரைகள் மூன்று பக்கங்களிலும் தொங்கின. ஒரு உண்மையான காட்டையே சிருஷ்டித்திருந்தார்கள் அந்தப் பெரிய கொட்டகையில் என்றுதான் சொல்ல வேண்டும். நடுவில் ஒரு குளம். அதில் புஷ்பங்கள் மிதந்தன. காகிதப் புஷ்பங்கள் பூத்துக் குலுங்கும் மரங்கள் சுற்றிலும் இருந்தன. என் கண்களை அந்தக் காட்சியிலிருந்து திருப்பவே முடியவில்லை. நான் வியந்து கொண்டே இருக்கையில் சுலோசனா என் கையைத் தொட்டு, "அருணாதேவி" என்று கூறினாள். நான் ஆவலுடன் திரும்பிப் பார்த்தேன்.

ஜரிகை மயமான உடை அணிந்து கொண்டு, கிரீடம், குண்டலம், பெரிய பதக்கங்கள் முதலிய ஆபரணங்களுடன் அழகுநடை நடந்துவந்தாள் அருணாதேவி.

கதாநாயக வேஷதாரி ஒரு பக்கத்தில் நாற்காலியில் உட்கார்ந்து சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தார். ஏகப்பட்ட பேர் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தனர். எனக்கு ஒரு 'ஸ்வப்பன உலகத்தில்' சஞ்சரிப்பதாகவேதான் தோன்றியது. ஏகப்பட்ட பிரகாசமான விளக்குகளும், நூதனமான காட்சியும், காமிராவும், ஒலிப்பதிவுக் கருவியும் என்னைப் பிரமிக்கச் செய்தன.

"சினிமா பிடிப்பது இவ்வளவு சிரமமானது என்று எனக்குத் தெரியவே தெரியாது" என்றேன் சுலோசனாவிடம்.

"ஆமாம்! என்ன சிரமம்? உற்சாகமாக ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் காலம் கழிக்கிறார்கள். எனக்குக்கூட ஒரு நாள் சினிமா ஸ்டார் ஆகிவிட வேண்டும் போலத் தோன்றுகிறது" என்றாள் சுலோசனா.

அப்போது பத்துப் பெண்கள் வந்தார்கள். "இவர்கள் அரசிளங் குமரியின் தோழிகள்" என்று சோபனா கூறினார். அருணாதேவி சோபனாவை நோக்கி வந்தார். சோபனா அவரைச் சுலோசனாவுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

அருகில் பார்த்தபோது அப்படி ஒன்றும் அழகாக இல்லை என்று தோன்றிற்று. மேலும் ஏகப்பட்ட சாயம் பூசிக் கொண்டு பார்க்க நன்றாகவே இல்லை. படத்தில் அவ்வளவு அழகாக இருந்தவர் நேரில் இப்படி இருக்கிறாரே என்று எனக்கு ஏமாற்றமாக இருந்தது.

அப்போது 'ரெடி' என்று யாரோ கூறினார்கள். அருணா விரைந்து சென்றார். கதாநாயக வேஷதாரியும் மெதுவாக எழுந்து நின்றார். அந்த சமயத்தில் ஒரு இளைஞர் வந்து, "என்னப்பா இது? உன்னைப் பார்த்தால் சோம்பேறிமாதிரி இருக்கே! கதாநாயகன் என்றால் கொஞ்சம் சுறுசுறுப்பாக இருக்க வேண்டாமோ? நீ இப்படி இருந்தால் உனக்குப் பதில் நான் ஹீரோவாக நடிக்க ஆரம்பித்து விடுவேன். வா, வா, அதோ குதிரை வருகிறது. ஒரு 'ஜம்ப்' பண்ணி ஏறு, பார்க்கலாம்" என்றார்.

நிஜமாகவே ஒரு அழகிய வெள்ளைக் குதிரை வந்து நின்றது. அதற்கு அழகான ஆபரணங்கள் போடப்பட்டிருந்தன. "ஏன் சுலோ! குதிரைக்குக்கூட 'மேக் அப்' போடுவார்களா?" என்று கேட்டேன்.

சுலோ சிரித்துக் கொண்டே, "குதிரைக்கு 'மேக் அப்'தான் பாக்கி. அதற்கு மற்ற அலங்காரமெல்லாம் பண்ணியிருக்கிறார்கள். லிப்ஸ்டிக் போட்டிருந்தால் அப்படியே கதாநாயகி வேஷமே கொடுத்து விடலாம்" என்றாள். நான் கேட்டதையும் அவள் பதில் சொன்னதையும் ஆங்கிலத்தில் எல்லோரிடமும் கூறினாள். அனைவரும் கை தட்டிச் சிரித்து ஆரவாரம் செய்தார்கள். எனக்குக் கொஞ்சம் அவமானமாக இருந்தது. படப்பிடிப்பு ஆரம்பமாகியது. (தொடரும்)

# இப்பொழுது!

காண்டாக்ட் பிரிண்ட்களும்
என்லார்ஜ்மெண்ட்களும் கலர்களில் கிடைக்கும்

# COLOUR!!




பகல் வெளிச்சத்திற்கும் செயற்கை வெளிச்சத்திற்கும் ஒரே சக பிலிம்

வெளியிலும், வீட்டிற்குள்ளேயும், இரவுபோதிலும், சாதாரண டங்ஸ்டன் லைட் (3200°K) அல்லது வெள்ளை நிற பிளாஷ் பல்புகளால், கரெக்டிங் பில்டர்கள் இல்லாமலேயே இயற்கையான கலர்களுடன் கூடிய எல்லாவித போட்டோக்களையும் இப்போது எடுக்கலாம்.

**உபயோகிப்பது மிக எளிது**

விசேஷ திறமை அவசியமில்லை. கேவா கலர் நெகடிவ் N5 பிலிமை உங்களது காமிராவில் போட்டு, சாதாரண படங்களை எடுப்பதுபோலவே எடுக்கலாம்.

**ப்ரோஸெஸிங்**

படம் எடுத்த பின்பு நெகடிவ் பிலிமை உங்களது டீலரிடம் கொடுத்து உங்களுக்குத் தேவையான கலர் பிரிண்ட்களையும், என்லார்ஜ்மெண்ட்களையும் சொல்லுங்கள். அதே கலர் நெகடிவிலிருந்து தேவையான சாதாரண பிரிண்ட்களையும் எடுக்கலாம்.

கேவா கலர் N5 நெகடிவ் பிலிம்கள் நெ. 120 மற்றும் நெ. 620 ரோல்களிலும் (ரூ. 8/-) நெ. 35 mm மினியேச்சர் பிலிம் (ரூ. 11-4-0)களில் கிடைக்கும்.

*அகில உலகப் புகழ் பெற்ற கேவாகலர் பிலிம்களில் போட்டோக்களை எடுக்க ஆரம்பியுங்கள்.*

**GEVACOLOR**

**Allied Photographics Limited**

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

---

*பிரதி வெள்ளிக்கிழமை இரவு 8 மணிக்கு ரேடியோ சிலோனில் (31-49 மீட்டரில்) "போட்டோ-பேண்டஸி" (PHOTO-FANTASY) என்ற நிகழ்ச்சியை கேளுங்கள். அது ஏ.பி.எல். ஸ்தாபனத்தால் வெளியிடப்படுகிறது*

---

# தளதளக்கும் பானம் வயிற்றுக் கோளாறுகளை நிறுத்துகிறது



## ... அது உங்களுக்கு குணம் செய்வதுடன் புத்துணர்ச்சியும் தருகிறது!

ஈனோ சௌமியமானது எனினும் வயிற்றுப் புளிப்பை நீக்குவதில் அற்புத சக்தி வாய்ந்தது. எவ்வித கெடுதியும் செய்யாமல் அது புளிப்பு மிகுதியாலுள்ள அஜீர்ணம், வாயுப்பொருமல், நெஞ்செரிச்சல் முதலிய உபாதைகளை துரிதமாயும் நிச்சயமாகவும் நிவர்த்திக்கிறது.

இதற்குக் காரணம், ஈனோஸ் வயிற்றிலுள்ள அமிலமிகுதியை வென்று சமனமூட்டும் விசேஷ குணம் உடையதாயிருப்பதுதான். மிதமீறி புசிப்பதாலோ அல்லது உண்பது எளிதில் ஜீரணமாகாமலோ வயிற்றில் ஏற்படக்கூடிய கோளாறுகளை நீக்கி, ஜீரண உறுப்புகளை மீண்டும் ஒழுங்குபடுத்த அது உதவுகிறது.

ஈனோ புத்துணர்ச்சியும் உற்சாகமும் ஊட்டுவது . . . எட்டே விநாடிகளில் நீங்கள் சுகம் பெறுகிறீர்கள்— வயிற்றுக்கு மட்டுமல்ல வாய்க்குக்கூட! எப்பொழுதும் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' ஒரு புட்டி கையோடு காவலாய் வைத்திருங்கள்.

# ஈனோஸ்

## 'ப்ரூட் ஸால்ட்'




பெரிய புட்டி ரூ. 3/12
சிறிய புட்டி 2/6
உள்ளூர் வரிகள் பிரத்யேகம்

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்றவார்த்தைகள் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகளாகும்.

ENO. 1096 (Tam.)



# புன்னகை பூத்தாள்

சரவணன்

நல்ல வேளையாக என் மனைவி ஊரில் இல்லையோ, நான் பிழைத்தேனோ! இல்லையேல், விஷயம் மிகவும் விபரீதமாயிருக்கும்?

என் வீட்டுக்கு எதிர் வீட்டில் ஓர் புதுத் தம்பதிகள் குடியேறிச் சுமார் பதினைந்து தினங்கள் ஆகின்றன. அதாவது என் மனைவி தன் பிறந்த வீட்டுக்குச் சென்ற மறு தினம் அத் தம்பதிகள் அங்கு குடி புகுந்தார்கள். குடிவந்துள்ள தம்பதிகளை ஒரே சமயம் தான் பார்க்க நேரிட்டது. குடிவந்த அன்று மாலை அவர் ஒரு நோயாளியைப் போல் காணப்பட்டார் என்பதைத் தவிர வேறொன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. அதன் பின்பு அவரைக் காணவே முடியவில்லை.

ஆனால் அவருடைய மனைவி என்று கருதப் பட்ட அந்தப் பெண்ணை நான் அடிக்கடி காண்பதுண்டு. அவளுக்குச் சுமார் இருபத்திரண்டு வயதிருக்கும். குழந்தைகள் இருப்ப தாய்க் காணோம். நல்ல இளமை ததும்பும் உடற் கட்டுடன் தோன்றினாள் அவள். என்றாலும், முகத்திலே ஓர் விசாரக் களை லேசாகத் தென்பட்டது.

** ** **

அன்று காலை நான் எனது ஆஸ்பத்திரிக்குக் கிளம்பிக் கொண்டிருந்தேன், என் சைக்கிளில். அப்போது அந்தப் பெண் வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். என்னைக் கவனித்ததாய்த் தெரியவில்லை. என் தோல் பையைச் சைக்கிளில் மாட்டி விட்டு, ஏறும் சமயம், என் நண்பர் முத்து கிருஷ்ணன் என்னை அழைக்கும் குரல் பின்னாலிருந்து கேட்கவே, நின்று திரும்பினேன்.

"ஏன், ஸார்! உங்களுக்கு ஒரு கம்பௌண்டர் வேண்டுமென்று சொன்னீர்களே! கிடைத்தாரா?" என்றார்.

"யார் யாரோ வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். ஒருவரும் திருப்தியாயில்லை."

"எனக்குத் தெரிந்த ஒருவர் இருக்கிறார். அவரை அனுப்பட்டுமா?"

"சரி! அனுப்புங்கள். திருப்தியாய் இருந்தால் வைத்துக் கொள்கிறேன்" என்றேன்.

அன்று பகல் பதினொரு மணிக்கு வீடு திரும்பினேன். சைக்கிளை உள்ளே தூக்கி வைக்கும் சமயம், எதிர் வீட்டு ஜன்னல்களைத் திறக்கும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். அவள் ஜன்னலின் சமீபம் நின்று கொண்டு, என்னை உற்று நோக்கினாள். அது மட்டுமா? மெல்லப் புன்னகை பூத்தாள்.

ஒரு கணம் என் உடல் வியர்த்து விட்டது. என்ன விபரீதம்! சட்டென்று திரும்பி, உள்ளே சென்று விட்டேன்.

நான் டாக்டர். தொழில் முறையில் தினந்தோறும் பல பெண்களுடன் பழக நேரிடுவதுண்டு. பல பெண்கள் என்னைக் காணும் போது இளநகை புரிவதுண்டு. ஏன் சில முற்போக்குக் கொள்கையுள்ள பெண்கள் என்னுடன் கை குலுக்குவது கூட உண்டு. ஆனால் அதற்கு வேறு விதமாக அர்த்தம் கற்பிக்க முடியுமா?

ஆனால், இந்தப் பெண் என் மீது வீசிய புன்முறுவல் அம்மாதிரி நான் கொள்ளக் கூடியதாய் இல்லையே!

விஷயம் எப்படியாயிற்றென்றால், என்னைக் காணும்போதெல்லாம் அவள் நகை முகத்துடன் தோற்றமளித்தாள். என் நேரம் தெரிந்துதான் இவள் இம்மாதிரி வாசலிலும் ஜன்னலின் சமீபமும் நிற்கிறாளோ என்று கூட நான் சம்சயிக்கும்படி இருந்தது.

அன்று காலை என்னுடைய ஆஸ்பத்திரியில் நோயாளிகளைப் பரிசோதித்து விட்டு, எல்லோருக்கும் மருந்தை நானே கலந்து கொடுத்து அனுப்பி விட்டு, மேஜையண்டை வந்தேன். எனக்கு ரொம்பவும் அலுப்பாயிருந்தது. நானே கம்பௌண்டர் வேலையும் பார்த்துக் கொள்வதென்றால்? முத்து கிருஷ்ணன் அனுப்புவதாய்ச் சொன்ன மனிதர் வரவே யில்லை. மணி பதினொன்று ஆவதற்கு இன்னும் ஐந்து நிமிஷங்களே இருந்தன.

அப்போது யாரோ ஆள் வந்து நிற்கும் சத்தம் கேட்கவே, வெளியே எட்டிப் பார்த்தேன். அவள்தான்! அதே புன்முறுவல்! கைகூப்பி வணக்கம் தெரிவித்தாள்.

மெல்ல என்னைச் சமாளித்துக் கொண்டு, பதில் வணக்கம் செய்து, "எங்கே வந்தீர்கள்? உடம்பு சரியில்லையா?" என்று அவளைப் பார்த்ததும் பாராததுமாய்க் கேட்டேன்.



''உள்ளே கால்பந்துப் போட்டி நடக்கிறதாமே? நான் போகப் போகிறேன்......நீ எப்படிடா மணி போகப் போறே?''

''நான் இந்த வழியாகப் போகப் போகிறேன், ஸார்!''

---

''என் உடம்புக்கு ஒன்றுமில்லை. உங்களிடம் தனிமையில் பேச வேண்டும் என்றுதான் வந்தேன்.''

எனக்கு ஆத்திரமாய் வந்தது. ''விஷயம் என்ன என்று சீக்கிரம் சொல்லுங்கள்! எனக்குப் பசிக்கிறது'' என்றேன், வெறுப்புடன்.

''ஏன்? என் வீட்டுக்கு வாருங்களேன். சமையல் தயாராயிருக்கிறது. சாப்பிடலாம். உங்கள் வீட்டிலும் யாரும் இல்லை போலிருக்கிறதே!''—மீண்டும் அதே நகைப்பு.

''போதும். உங்கள் உபசாரம்; வந்த காரியம் என்னவென்று சீக்கிரம் சொல்லுங்கள்!'' என்று சற்று அதட்டினேன்.

அவள் முகம் சட்டென்று மாறியது. மிகுந்த கனிவுடன் பேசலானாள்.

''டாக்டர்! இந்த ஏழையின் மீது ஏன் இம்மாதிரி எரிந்து விழுகிறீர்கள் என்று தெரியவில்லை! நான் உங்களிடம் வந்த காரணம் ஒரு தயவை நாடித்தான். தங்களுக்கு ஒரு கம்பௌண்டர் தேவை என்னும் விஷயம் அன்றொரு நாள் தெரிந்தது. யாரோ ஒருவர் தங்களிடம், தனக்குத் தெரிந்த ஒருவரை அனுப்பட்டுமா என்று கேட்டாரல்லவா? அது விஷயமாய்த்தான் தங்களிடம் வந்தேன். என் கணவர் கம்பௌண்டர் உத்தியோகம் பார்த்தவர். அடுத்த ஊரில் உள்ள ஒரு டாக்டரிடம் இருந்தார். அந்த டாக்டர் திடீரென்று இறந்து விட்டார். ஆஸ்பத்திரியை மூடி விட்டார்கள். என் கணவரின் வேலையும் போய் விட்டது. இந்த ஊருக்கு வந்தோம். தயவு செய்து என் கணவரை அந்த வேலைக்கு ஏற்றுக் கொண்டு, எங்கள் குடும்பத்தைக் காக்க வேண்டும். என் கணவரே தங்களைக் கேட்டிருப்பார். சில தினங்களாக, அவர் உடல் நலமில்லாமல் இருப்பதால், வீட்டை விட்டு வெளியே போவதில்லை. எனவே நான் வரவேண்டியதாயிற்று!''

இதைக் கேட்டதும், ஒரு பெருஞ்சுமை மனத்தை விட்டு நீங்கியது போல் உணர்ந்தேன். இதற்குத்தானா இத்தனை புன்னகை!

''அம்மா! நான் வேறொருவரை வரச் சொல்லியிருக்கிறேன். அவர் வராவிட்டால், கட்டாயம் உங்கள் கணவரை ஏற்றுக் கொள்கிறேன்'' என்று கூறிய சமயம், முத்துகிருஷ்ணன் உள்ளே நுழைந்தார். அவருடன் இன்னொரு மனிதரும் வந்து கொண்டிருந்தார். அந்த மனிதர் யார் என்கிறீர்கள்? அந்தப் பெண்ணின் கணவர்தான்.

''டாக்டர்! நான் கம்பௌண்டர் வேலைக்கு ஒருவரைச் சொன்னேனே, அவர் இவர்தான். எனக்கு ரொம்ப வேண்டியவர். நன்றாய் உழைக்கக் கூடியவர்'' என்றார். பிறகு தம்முடன் வந்திருக்கும் நண்பரைப் பார்த்து. ''ஏன் ராமு! உன் மனைவி டாக்டரிடம் பேசப் போயிருப்பதாய்ச் சொன்னாயே! இவள்தானா?'' என்று அந்தப் பெண்ணைச் சுட்டிக் காட்டினார் முத்துகிருஷ்ணன்.

எனக்கு எல்லாம் ஒரே ஆச்சரியமாக இருந்தது. இதென்ன வேடிக்கை! முத்துகிருஷ்ணன் வேலை கேட்டதும், இந்தப் பெண் வேலை கேட்டதும் ஒரே மனிதருக்காகத்தான் என்று அறியும்போது, ஆச்சரியப்படாமலிருக்க முடியுமா? நான் மட்டுமென்ன? எல்லோருமே ஆச்சரியப் பட்டோம்.

எனக்கு மட்டும் ஒரு ஐயப்பாடு மனத்தினின்று நீங்காமல் இருந்தது. 'அந்தப் பெண் என்னைப் பார்த்து அம்மாதிரி புன்னகை புரியக் காரணம் என்ன?' என்றுதான்.

அதற்கும் விடை கிடைத்தது. அவளுடைய கணவன் ராமுவே கூறினார்.

''டாக்டர் ஸார்! என் மனைவியின் குணத்தினால்தான் நாங்கள் இம்மட்டுமாவது ஜீவனம் செய்து வருகிறோம். நான் எவ்வளவோ சொன்னேன், என் உடம்பு குணமானதும் ஏதாவது வேலை தேடிக் கொள்கிறேன் என்று. இவள்தான் தங்களைத் தானே நேரில் பார்த்து வருவதாக மூன்று நாட்களாக முயன்று கொண்டிருந்தாள். இன்று நான் எத்தனை முறை சொல்லியும் பிடிவாதமாகத் தங்களைக் காண வந்து விட்டாள். அதற்குள் என் நண்பர் முத்துகிருஷ்ணன் என்னைத் தேடி வரவும் நானும் கிளம்பி வந்து விட்டேன். தங்கள் மனைவி ஊரில் இருந்திருந்தால் மூன்று நாளைக்கு முன்பே தங்களைத் தங்கள் வீட்டிலேயே அவள் சந்தித்திருப்பாள்'' என்றார்.

அந்தப் பெண்ணைத் திரும்பிப் பார்த்தேன் அவள் மீண்டும் புன்னகை பூத்தாள்! அவள் புன்னகையின் பொருளை விபரீதமாகக் கற்பனை செய்து கொண்டதை நினைக்கும்போது எனக்கு மிகவும் வெட்கமாக இருந்தது!



# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 10. விபரீதகரணியும், ஆஸ்துமாவும்

விபரீத கரணியின் பலன்களைத் தெரிந்து கொள்வதற்கு முன் அந்த ஆசனங்களைச் செய்யும் விதங்களை மீண்டும் தெரிந்து கொள்வது நல்லது.

முதல் படத்தில் உள்ளபடி நாலைந்து தலையணைகளை ஒன்றாகக் கட்டி வைத்துக் கொள்ள வேண்டும். இந்தத் தலையணைக் கட்டின் முனையில் காலை நீட்டிக் கொண்டு உட்காரவும்.

பின்பு மெதுவாய்ப் பின்புறம் சாய்ந்து, கைகளைப் பின்புறம் ஊன்றிக் கொண்டு தலையை மெதுவாகக் கீழே வைக்கவும். பிறகு இரண்டாவது படத்தில் உள்ளது போல முதுகையும் இடுப்பையும் தலையணைக் கட்டுடன் சேர்த்து இருக்கும்படி செய்து கொண்டு கைகளைத் தலையணைக் கட்டின் மீது வைத்துக் கொள்ளவும்.

பிறகு இரண்டு கால்களையும் சேர்த்தாற்போல் தூக்கி மூன்றாவது படத்திலுள்ள நிலைக்கு வரவும்.

இவ்வாறு செய்து வருவதால், கழுத்தில் இருக்கும் தைராய்ட் கோளத்துக்கும் நிறைய இரத்தம் பாய்கிறது. அதன் ஹார்மோன் ரசமும் நிறைய இரத்தத்தில் சேருகிறது. இந்த ஹார்மோனைப் பற்றி முன்பே நேயர்கள் அறிந்திருப்பார்கள். இந்த ஹார்மோன் இல்லாமல் எந்த வேலையுமே உடலில் சமாதானமாய் நடைபெறாது. எனவே, ஆஸ்துமாக்காரர்களுக்கும் இதன் ஹார்மோன் வேண்டாமென்று தடுப்பதற்கில்லை. எனவே, இதன் உதவியும் பெற முடிகிறது. பெரிய அதிகாரியின் தயவுதான் அவசியமெனினும், அவர் காரியதரிசியின் உதவியும், சிநேகமும் இருந்தால் நல்லதல்லவா ! அம் முறையில் தைராய்டின் உதவியும் விபரீதகரணியில் கிடைக்கிறது. எனவே, நாம் எடுத்த காரியம் அதாவது ஆஸ்துமாக்காரர்களின் மூச்சுப் பிரச்னை தீர, இந்த ஹார்மோனும் மூச்சுக் குழாய்களின் அணுக்களை ஊக்குவிக்க உதவுகிறது.

விபரீத கரணியில் தலை கீழே இருப்பதால் அங்கும் பூமியின் ஆகர்ஷண சக்தியால் இரத்தம் நிறையப் பாய்கிறது. எனவே, தலையில் இருக்கக் கூடிய அவயவங்களெல்லாம் அதிக ரத்தப் பாய்ச்சலினால் சுறுசுறுப்படைகின்றன. அவ்வகையில் மூளையின் அடியில் இருக்கும் பிட்யூடரியும் சுறுசுறுப்படைந்து அதன் ஹார்மோனும் நிறைய அங்கு சென்று வரும் இரத்தத்துடன் கலக்கப்படுகிறது. எனவே, பிட்யூடரின் என்னும் மருந்து என்ன வேலை செய்யுமோ அதை இந்த ஆசனம் செய்து விடுகிறது.

இதைத் தவிர, மற்றொரு மிக முக்கியமான காரியம் நடைபெறுகிறது. முதுகுத் தண்டின் மையத்திலுள்ள சந்தில் இருக்கும் ஒரு விதத் திரவம் இந்த விபரீத கரணியில் அதிக வேகம் அடைகிறது. அது மூளையின் மையத்தில் வேகமடைந்து செல்லும்போது அதனாலும் பிட்யூடரி ஊக்கமடைந்து இரத்தத்துடன் அதிக ஹார்மோன் கலக்கிறது.

அதே சமயம் அட்ரினல் கோளமும், தலை கீழாக்கப்படும்போது அதற்கு ஒரு புது நிலை உண்டாவதாலும், வயிற்றில் அழுத்தம் ஏற்படுவதாலும், அதன் ஹார்மோனும் அதிகமாய் இரத்தத்தில் கலக்கிறது. எனவே, அட்ரினல் மருந்தின் வேலை இயற்கையாகவே நடைபெறுகிறது.

மேற்படி இரண்டு ஹார்மோன்களின் ரசமும் சேரும்போது இரத்தாசயம் சீக்கிரம் சீக்கிரமாக இரத்தத்தை அடித்து அனுப்புகிறது. நாம் சாதாரணமாய் இருக்கும்போது அடிப்பதைவிட வேகமாய் அடிக்கிறது. எனவே, அவ் வேகத்தினால் காற்றுப் பொடிக் குழாய்களில் இரத்த வேகமும் அதிகமாகிறது. வேகமாய் அடித்து அனுப்புவதனால் பிராணவாயுவின் போஷணை, சூடு நுரையீரல்களுக்கு ஏற்பட்டுக் காற்றுக் குழாயின் இறுக்கம் தளர்த்தப்படுகிறது.

தவிர, இக் காற்றுக் குழாய்களைக் கட்டி ஆளும் வேகஸ் நரம்பும் தூண்டப்படுகிறது. மூளையின் மையத்தில் முடியும் இதன் ஆரம்ப ஸ்தானத்துக்கே இரத்தம் அதிகம் பாய்ந்து அதனை ஊக்குவிப்பதால் அதுவும் தன் வேலைகளைச் சரிவரச் செய்கிறது. அத்துடன் கூட இந்த மார்பு பாகங்

களுக்கு முக்கியமான 'சிம்பதெடிக்' நரம்புக் கூட்டங்களும் விழிப்படைந்து அதன் வேலைகளும் ஒழுங்குக்குக் கொண்டுவரப் படுகின்றன.

எனவே, கட்டுக்கடங்காது என்று சொல்லப் படும் வேகமும் ஒரு சிறிது கட்டுப்படுகிறது. இதைச் சரியானபடி நம் வசப்படுத்தப் பிராணுயாமத்தினுல்தான் முடியும். அதைப் பற்றிப் பின்னுல் கவனிப்போம்.

ஆஸ்துமா நோய் உள்ளவர்களுக்கு வேண்டிய பரிகாரம் இதில் ஓரளவு கிடைக்கிறது. இதை விட சர்வாங்காசனத்தில் மேற்சொன்ன பலன்களெல்லாம் பல மடங்கு அதிகமாய்க் கிடைக்கின்றன. சிரசாசனத்தில் இன்னமும் அபரிமிதமாய்க் கிடைக்கிறது. படிப்படியாய்ச் சாதகர்கள் பயில வேண்டும். அதிக பலன் தருவதைத் தான் முதலில் செய்து சீக்கிரம் ஆஸ்துமாவிலிருந்து விடுபட்டு விடுவோம் என்று முதலிலேயே சர்வாங்காசனம், சிரசாசனம் செய்யக் கூடாது. அவரவர் உடல் நிலைக்குத் தகுந்தபடிதான் மேற்படி ஆசனம் செய்ய வேண்டும். சிலருக்கு மூச்சுத் திணறல் அதிகம் ஏற்படும். எனவே, ஆசனம் செய்து மூச்சுத் திணறல் அதிகமாய் விட்டதென்று விட்டு விடுவார்கள். செய்யும் முறைப் படி அளவுடன் யோகாசன நிபுணர்களைக் கலந்து செய்தால் ஒன்றும் வராது.

ஆனுல், இந்த விபரீத கரணிக்கு அந்தக் கட்டுத் திட்டம் கிடையாது. எந்த வயதானுலும் செய்யக் கூடியது. இதற்கு நிபுணர்களின் ஆலோசனையும் தேவையில்லை. சிறு குழந்தைகள் ஒரு வயதானவர்களுக்கும் இதைச் செய்விக்கலாம். அதிகம் வயதான 70, 80 வயதுக்காரர்களும் செய்யலாம். இந்த ஆசனத்தில் பயமென்பதே கிடையாது. பயப்படுவதற்குண்டான அதிக மாறுதல் ஒன்றும் ஏற்பட்டு விடாது. ஆனுல் முதலில் ஒன்று அல்லது அரை நிமிஷத்திலிருந்து துவக்க வேண்டும். சற்று பலசாலிகள் இரண்டு மூன்று நிமிஷங்கள்கூட ஆரம்பத்தில் செய்யலாம். ஆனுல் அதிக நேரம் முதலிலேயே செய்யக்கூடாது. முதுகுத் தண்டின் நீர் அதிக வேகமாகச் செல்வதால் சிலருக்கு மூச்சு முட்டும். இருமல் அதிகமாகும். அப்படியிருந்தால் உடனே இறங்கிச் சற்று சமானித்துக் கொண்டு மறுபடி செய்யலாம். மறு நாளும் இப்படியே சிலருக்குத் தொந்தரவு கொடுக்கும். ஆனுல் சாதகர்கள் விடாமல் ஒரு வாரம் முயற்சி செய்வார்களானுல், இழுப்பு, மூச்சு முட்டுதல் சிறிது தணிந்து வருவதை அறிவார்கள். நல்ல அமைதியாகத் தூங்கி நெடுநாளானவர்கள் இந்த ஆசனத்தைச் செய்த ஓரிரண்டு நாட்களில் தன்னை மறந்து நல்ல தூக்க சுகத்தை அனுபவிப்பார்கள். அத்துடன் கூட மூச்சுப் பயிற்சிகளும் செய்து வந்தால் சில நாட்களிலேயே சிரமமில்லாமல் விபரீதகரணி செய்ய வரும்.

❖ ❖ ❖

சாதாரணமாகக் கூன் போடாமல் முதுகெலும்பை நிமிர்த்தி, மார்பை விரித்திருந்தாலே நுரை ஈரலுக்குத் தன் தொழிலைச் சுலபமாய்ச் செய்யச் சௌகரிய மேற்படுகிறது. ஆஸ்துமா நோயாளி இந்தச் சௌகரியத்துக்காகத்தானே இண்டாட வேண்டியிருக்கிறது.

இதற்குப் போட வேண்டிய ஆசனம் மத்ஸ்யாசனம். மத்ஸ்யாசனம் போடவேண்டிய விதங்கள் அநேகமாக எல்லா நேயர்களுக்கும் தெரிந்திருக்கும். இருந்தாலும் பின்னுல் மத்ஸ்யாசனப் படங்களும், அதைப் போட வேண்டிய விதங்களைப் பற்றியும் சொல்கிறேன்.

மத்ஸ்யாசனத்தில் நுரையீரலானது தாமரை மலர்போல் நன்கு விரிவடைகிறது. மார்புக் கூடு மேல் நோக்கி எழும்பி விரிய நுரை ஈரலும் அதனைச் சார்ந்த பாகங்களும் இன்னமும் தாராளமாய் விரிய முடிகிறது.

ஆஸ்துமாக்காரர்கள் மூச்சு வாங்குவதை விட மூச்சுவிடத் தான் சிரமப்படுவார்கள். சாதாரணமாய் நம்மைப் போல மூச்சைப் பூரணமாய் விட முடியாது. கரியமில வாயுவை இரத்தத்திலிருந்து பிரித்தெடுத்து வெளியேற்றும் பொடி காற்றுக் குழாய்கள் பல காரணங்களால் ஆஸ்துமாக்காரர்களுக்குச் சுருங்கி விடுவதால், காற்று அக் குழாய்களின் வழியே அடைத்துக் கொண்டு சிரமப்பட்டு வெளி வரவேண்டியிருக்கிறது. அதனுல்தான் ஆஸ்துமாக்காரர்களுக்கு மூச்சை விடும்போது 'விஸ், விஸ்' என்று ஒருவித சத்தம் கேட்கிறது. சிலருக்கு மார்பின் சமீபம் காது வைத்துக் கேட்டால் நன்கு கேட்கும். சிலருக்குத் தூரத்திலிருந்தாலும் 'விஸ், விஸ்' என்ற சத்தம் நன்கு கேட்கும். இந் நிலைமையில் ரத்தத்திலுள்ள கரியமலவாயு சரிவர வெளியேற முடியாமல், அசுத்த ரத்தமே சரீரம் முழுதும் பாய வேண்டியதாய் இருக்கிறது. பிராண வாயுவும் அதற்கு ஏற்றாற் போல குறைந்து கொண்டே இருக்கும். எனவே, ஆஸ்துமாக்காரர்களுக்கு இருவித கஷ்டம் ஏற்படுகிறது. ஒன்று இரத்தம் நன்கு சுத்தமாகாமல் கரியமில வாயு வெளியேறுமல் தங்குவது. மற்றென்று பிராண வாயுவின் குறைவு. இவை இரண்டும் பல மணி நேரம், ஏன் சில நாட்கள் கூட ஆஸ்துமாக்காரர்களுக்கு இருப்பதுண்டு. அப்பொழுது முகம் வெளுத்து, புஜம் தூக்கிக் கொண்டு, நரம்பு தளர்ந்து பார்க்கப் பரிதாபமாய் இருக்கும். ஒன்றும் சாப்பிடப் பிடிக்காது; சாப்பிட்டாலும் ஜீரணமாகாது; படுக்கையில் படுக்க முடியாது. மற்றும் பல சொல்லிக் கொண்டே போகலாம். ஒரு வீட்டில் நல்ல காற்று சரிவரப் புகாமலும், கெட்ட காற்று வெளியேறுமலும் இருந்தால் அவ் வீட்டிலுள்ளவர்கள் என்ன பாடு படுவார்களோ, அக்கதிதான் ஆஸ்துமாக்காரர்களின் உள் அவயவங்களுக்கெல்லாம் ஏற்படும்.

இந்த மத்ஸ்யாசனத்தில் மார்பு விரிந்து நுரைஈரல்கள் விரிவதால் பெரிய காற்றுக் குழாய் சிறிய காற்றுக் குழாய்கள், பொடி காற்றுக் குழாய்கள் முதல் எல்லாமுமே சற்று தாராளமாய் விரிய முடிகிறது, அதாவது அடைத்திருந்த அறையின் ஜன்னல்கள் திறந்து நல்ல சுத்த காற்றை உள்ளுக்கு விடுவதுபோல.

ஆனுல் ஆஸ்துமாக்காரர்களுக்குச் சுத்த காற்று மட்டும் கிடைத்தால் போதாது. கெட்ட காற்றையும் வெளியில் விரட்ட வேண்டும். அதற்குப் பல விதத்தில் உள் சுரப்பிகளின் உதவி வேண்டியதாய் இருக்கிறது. அதற்கு இந்த மத்ஸ்யாசனமும் சிறிது உதவியாய் இருக்கிறது. முதுகைப் பின்னுக்கு வளைத்துத் தூக்கியிருக்கிற நிலைமையில் இடுப்பில் பின்பக்கம் முதுகெலும்புக்குப் பக்கங்களில் ஒவ்வொன்றாக இருக்கும் குண்டிக் காய்களுக்கும் பயிற்சி ஏற்படுகிறது. அப்பொழுது அதன்மேல் அமர்ந்துள்ள அட்ரினல் சுரப்பிகளும் சுறுசுறுப்படைந்து அட்ரினல் இரசத்தை அதிகமாக்குகின்றன. அதே சமயம் இருதயத்திலிருந்து அதிக இரத்தம் கழுத்துப் பாகத்துக்குச் சிரசுக்கும் அதிகம் போவதால், தைராய்ட் சுரப்பியும் தட்டி எழுப்பப்படுகிறது. அதன் ஹார்மோனும் இரத்தத்தில் சாதாரண நிலைமையிலும் சற்று அதிகமாகக் கலக்கிறது. (தொடரும்)

# பிரஷால் தேய்ப்பதால்
# கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஈறுகளைப் பலப்படுத்துகிறது




## இதோ! குளோரோபில்* டூத் பேஸ்டின் பூரண நன்மைகள் அடங்கிய புதிய, விசேஷ கால்கேட் சூத்திரம்!

குளோரோபிலின் நன்மைகளை பத்திரமான, ரஞ்சிதமான உருவில் தருகிறது கால்கேட் சூத்திரம்....கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் துரிதமாக, திருத்தமாகச் செயலாற்றுகிறது...அது தரும் சுத்தம் மணிக்கணக்காக நீடிக்கும்!

...பலமான ஈறுகள் புதிய, இனிய சுவாசம் பெற...சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை உபயோகிக்கவும். சிறந்த பற்பசைகளைத், தயாரிக்கும் உலகிலேயே மிகப் பெரிய ஸ்தாபனத்தின் உன்னத குளோரோபில் டூத் பேஸ்ட்.

**பாக்டீரியாவை ஒழிக்கிறது!**

எனுமலை அரிக்கும் தீய அமிலங்களையும் ... அவற்றைத் தோற்றுவிக்கும் பாக்டீரியாவையும் குறைக்கிறது.

**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

குளோரோபிலின் நன்மைகளைப் பயன்படுத்தி, ஈறுகளைப் பலப்படுத்த கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் உதவுகிறது.




* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது

**புதிய பச்சை டூத்பேஸ்ட் பரீட்சித்து உத்தரவாதம் அளிப்பது கால்கேட்**

# துறவியின் பாசம்



ரா. பாலகிருஷ்ணன்

"சார்! பாலசுந்தரம் என்பவர் நீங்கள் தானே!" என்றான் ஒரு சிறுவன்.

"ஆமாம்; என்ன விசேஷம்!" என்று கேட்டு விட்டு அவன் முகத்தை நோக்கினேன்.

"தெருக் கோடியிலே ஒரு பிள்ளையார் கோயில் இருக்கு பாருங்க—அங்கே ஒரு சாமியார் இருக்காரு. உங்களைப் பார்க்கணுமாம், அவருக்கு. உடனே வரச் சொன்னாரு" என்று சொல்லி விட்டு என் பதிலைக் கூட எதிர்பாராமல் ஓடி விட்டான் பையன்.

உள்ளே போய் அவசரமாக ஒரு சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு பிள்ளையார் கோயிலை நோக்கி நடந்தேன்.

கோயில் பிராகாரத்தில் வால் ஒடிந்து கிடந்த கன்பெலி வாகனத்து அருகில் உட்கார்ந்திருந்தார், ஒரு துறவி. பார்ப்பதற்கு அவர் பால்யமாகத் தோன்றினார். அவருக்கு முப்பது வயதுக்கு மேலிராது. கரு கரு வென்று வளர்ந்திருந்த தாடியும் மீசையும் வெண்மைக் கலப்பே இல்லாமலிருந்தது. என்னை ஒரு புன் சிரிப்புடன் வரவேற்ற அவர், "வாருங்கள், பாலசுந்தரம்! உங்களுடன் தனிமையில் ஒரு முக்கிய விஷயம் பேசவேண்டியிருப்பதால், வீட்டுக்கு வந்தால் சௌகரியப்படாதென்று கருதித் தங்களை இங்கே வரவழைத்துச் சிரமம் கொடுக்கிறேன்" என்று மன்னிப்புக் கேட்கும் பாவனையில், மிகவும் பரிச்சயமான குரலில் பேசத் தொடங்கினார்.

அந்தக் குரலை எப்போதோ கேட்டது போன்ற ஒரு பிரமை! "தங்களுக்கு என்னைத் தெரிந்திருக்கிறது; ஆனால் சுவாமியை யார் என்று என்னால் தெரிந்து கொள்ள முடியவில்லையே!" என்றேன்.

"லோகநாதனை உங்களுக்கு நினைவிருக்கிறதா!" என்று கேட்டார், அவர்.

"எந்த லோகநாதன்! ஏதோ கேட்ட பெயராகத்தான் காதில் ஒலிக்கிறது. சரியாக ஞாபகமில்லை" என்று கூறி ஒரு கணம் சிந்தித்தேன்.

"பரவாயில்லை. நீர் அவனை மறந்து விட்டது தவறல்ல. அவன் உம்மை மறந்தால் அதுதான் பெரும் பிசகு; பாவம் கூட! சுபாவமாகவே தயாள குணமுள்ளவர்கள் பிறருக்குச் செய்யும் உதவியைப் பெரிதாகப் பொருட்படுத்தமாட்டார்கள். ஐந்து, ஆறு வருடங்களுக்கு முன்பு ஒருநாள் உங்களிடம் உத்தியோகத்துக்காக மன்றாடினானே, ஒரு வாலிபன்—அவனை ஞாபகமில்லை! சொந்தப் பணத்திலிருந்து அவனுக்காக மூந்நூறு ரூபாய் ஜாமீன் தொகை கட்டி அவனுக்குக் குமாஸ்தா வேலை கிடைக்கும்படி செய்தீர்களே!" என்று விளக்கமாக அவர் கூறியதும் எனக்கு அந்தச் சம்பவம் முழுவதும் சிறிது சிறிதாக நினைவுக்கு வந்தது.

★

நான் டைரக்டராக இருந்த கம்பெனியில் ஒரு குமாஸ்தா உத்தியோகம் காலியிருந்தது. அதைக் கேள்விப்பட்டு நேரில் என்னிடம் வந்து விண்ணப்பித்துக் கொண்டான், லோகநாதன்.

அவன் பத்தாம் வகுப்பு வரை படித்திருந்தான். நான்கு வருடங்களுக்கு மேலாக ஒரு பிரபல மோட்டார் கம்பெனியில் நாற்றைம்பது ரூபாய் சம்பளத்தில் நாணயமாகக் குமாஸ்தா உத்தியோகம் வகித்து வந்ததாயும். அவனே வலுவில் அந்த உத்தியோகத்தை ராஜிநாமா செய்ததாகவும் அந்தக் கம்பெனியார் வழங்கிய நற்சாட்சிப் பத்திரத்தைக் காண்பித்தான்.

"மாதம் ரூபாய் நாற்றைம்பது சம்பாதித்துக் கொண்டிருந்தவன் அந்த வேலையை உதறிவிட்டு

இப்போது எண்பது ரூபாய் சம்பளத்தில் உத்தியோகம் பார்க்கத் தயாராயிருக்கிறாயே! இது விசித்திரமாயிருக்கிறதே!" என்றேன். அதற்கு அவன் தன் வாழ்க்கையையே ஒரு கதையாக வெளியிட்டான். அவன் கூறியது:

பால்யத்திலேயே தாய் தந்தையரை இழந்தவன், நான். எனக்கு இரண்டு சகோதரர்களும் ஒரு தமக்கையும் இருக்கிறார்கள். நான்தான் கடைக்குட்டி. செல்வம் கொழிக்கும் குடும்பத்தில் பிறக்காத போதிலும் வறுமையின் கொடுமையை நான் அறியவில்லை. மூத்த அண்ணாவுக்கு பஸ் கண்டக்டர் உத்தியோகம். என்னிடம் எல்லையற்ற பிரியம் அவருக்கு. அடுத்தவர் ரெயில்வே தொழிற்சாலையில் சாதாரண தொழிலாளியாக இருந்தார். பெரியவருக்குக் கல்யாணமாகி இரண்டு குழந்தைகள் இருந்தனர்.

என் அண்ணன்மார்கள் இருவரும் அதிகம் படிக்காதவர்கள். என்னை எப்படியாவது பத்தாம் படிவத்துக்குக் குறையாமல் படிக்க வைத்து விட வேண்டும் என்று பெரிய அண்ணாவுக்கு ரொம்ப ஆசை. தாம் படிக்க முடியவில்லையே என்ற குறையை, எனக்குக் கல்வியறிவு புகட்டுவதன்மூலம் பூர்த்தி செய்து கொள்ள விரும்பியது அண்ணாவின் உள்ளம். அந்த ஆவலைப் பூர்த்தி செய்வதில் நானும் வெகுவாகச் சிரத்தை காண்பித்தேன். என் படிப்பு முடிந்து இரு வருடங்களுக்குப் பின் எங்கெல்லாமோ சிபாரிசு பிடித்து எனக்கு அந்த மோட்டார் கம்பெனியில் குமாஸ்தா உத்தியோகம் தேடிக் கொடுத்தார், அண்ணா.

முதல் மாதம் என் சம்பளத்தை வாங்கிக் கொண்டுபோய் அண்ணாவிடம் கொடுத்து அவரை வணங்கியபோது அவர் கண்களில் நீர் துளித்தது.

"உன் செலவுக்கு வைத்துக் கொள்ளேன், இதை. நல்லதாக நாலு சொக்காய், துணிமணிகள் வாங்கிக் கொள். குடும்பச் செலவுதான் இருக்கவே இருக்கிறது. முதல் சம்பளத்தை நீயே உன் இஷ்டப்படி சந்தோஷமாகச் செலவு செய்து கொள்!" என்று அன்போடு கூறினார், அண்ணா.

அடுத்த மாதம் முதல், சம்பளம் வாங்கியதும் என் செலவுக்குப் பத்து ரூபாய் மட்டும் வைத்துக் கொண்டு பாக்கியை அண்ணாவிடம் கொடுத்து விடுவேன். அந்தத் தொகையை அப்படியே அவர் சீட்டுக் கட்டி விடுவார். சின்ன அண்ணாவின் கல்யாணச் செலவுக்காகப் பணம் சேர்க்க வேண்டியதும் அவர் பொறுப்புத்தானே! இரண்டு வருடங்களில் ஆயிரம் ரூபாய்க்கு மேல் சேர்ந்து விட்டது. சின்ன அண்ணாவுக்கும் கல்யாணம் நடந்து விட்டது. ஒரே குடும்பமாக இருந்தாலும், அண்ணிகள் இருவருக்குள்ளும் நிலவிய ஒற்றுமை காரணமாகவும், குடும்பக் காலட்சேபம் மிகவும் கண்ணியமாகவே நடந்து வந்தது.

இயற்கையின் போக்கில் எப்போதுமே இளந்தென்றல் வீசிக் கொண்டிராதல்லவா! என் வாழ்க்கையிலும் புயல் வீசத் தொடங்கியது.

எனக்காக எவ்வளவோ நல்ல இடங்களில் பெண் தேடினார் அண்ணா. அவர்களில் யாரையுமே பிடிக்கவில்லை, எனக்கு. கடைசியாகத் தண்டையார்ப் பேட்டையில் ஒரு இடம் நிச்சயமாயிற்று. பெண் பத்மா மிகவும் லட்சணமாயிருந்தாள். தாழம் பூ மேனி. களையான முகம். துறுதுறுவென்ற கண்கள். நான்காவது படிவம் வரையில் படித்திருந்தாள். காது குளிரக் கேட்கும்படியான இனிமையான குரல். இவை யாவும் சேர்ந்து என்னுடைய உள்ளத்தை அவளுக்கு அடிமையாக்கி விட்டன.

பத்மாவின் தகப்பனார் இறந்து நான்கு வருடங்களுக்கு மேலாகி விட்டன. அவள் தாயாருக்குத் தண்டையார்ப் பேட்டையில் ஒரு வீடு சொந்தமாக இருந்தது. தாயாரும் பெண்ணும் குடியிருந்தது போக, பாக்கியிருந்த பகுதிக்கு அறுபது ரூபாய் வாடகை வந்து கொண்டிருந்தது. பாங்கியில் கொஞ்சம் ரொக்கமும் இருந்தது. பெற்றோருக்கு ஒரே பெண்ணாகையால், கண்டிப்பு இல்லாமல் தாயாரின் போஷணையில் செல்லமாக வளர்ந்திருந்தாள். அவளுக்குச் சற்று வாய்த்துடுக்கு. இந்த ஒரு அம்சம் மட்டும் என் அண்ணாவுக்கும் அண்ணிக்கும் பிடிக்கவில்லை. ஆயினும், என் உறுதியை அறிந்து, அண்ணா அவளையே எனக்கு நிச்சயம் செய்து விட்டார்.

தமக்குத் தெரிந்த ஒரு மளிகைக் கடைக்காரரிடமிருந்து கல்யாணச் செலவுக்காக ஆயிரம் ரூபாய் கடன் வாங்கிக் கல்யாணத்தை விமரிசையாக நடத்தி விட்டார். பத்மா குடித்தனம் செய்ய வந்து விட்டாள். இரண்டு மாதங்கள் வரை எல்லாம் ஒழுங்காகத்தான் நடந்து வந்தது. பிறகுதான் காற்றின் வேகம் அதிகரித்து அது சூறாவளியாக மாறியது.

பத்மாவுடன் நான் அடிக்கடி சினிமா, நாடகம் என்று வெளியே கிளம்பிப் போவதெல்லாம் அண்ணிகள் இருவருக்கும் பிடிக்கவில்லை. அவர்கள் வீட்டோடு அடைபட்டுக் கிடந்தபடியால் என் செய்கை அவர்களுக்குப் பொறுக்கவில்லை போலும்! 'கசூசா' வென்று என் தலை மறைவில் பேசிக் கொள்ளவும் தலைப்பட்டனர். நாளடைவில், நான் வீட்டிலிருக்கும் போதே இதைப் பற்றிக் கடுமையாகப் பேசுவதையும் உணர்ந்தேன். 'பெண்டாட்டியின் நாகரிக அலங்காரத்துக்கே மாசம் ஐம்பது ரூபாய் போதாது போலிருக்கே!' என்றாள் அண்ணி ஒரு நாள்.



"இந்தப் பிரசங்கம் எதற்காக நடக்கிறது?"
"உமக்கா தெரியாது? தெரிந்து கொண்டே கேட்கிறீரே!"
"நிஜமாகவே தெரியாது."
"பத்திரிகையில் வருவதற்காகத்தான் பிரசங்கம் நடக்கிறது!"



பிப்ரவரி 28உ. சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் டாக்டர் எஸ். சோமசுந்தர பாரதியாருக்கும் பொன்னாடை போர்த்திப் பாராட்டு விழா நடத்தினார்கள். இந்த விழாவை அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் மன்றம், கலைக் கழகம் இரண்டும் சேர்ந்து நடத்தின. சென்ற மாதம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் வெள்ளி விழா நடந்ததல்லவா? அப்பொழுது தமிழுக்குத் தொண்டாற்றிய பேராசிரியர் திரு எஸ். சோமசுந்தர பாரதியாருக்கு அண்ணாமலை சர்வகலாசாலை "டாக்டர்" பட்டம் வழங்கிக் கௌரவித்தது. அந்த கௌரவப் பட்டம் பெற்ற பேராசிரியர் டாக்டர் எஸ். சோமசுந்தர பாரதியாரைப் பாராட்டத்தான் மேற்படி விழா கொண்டாடப் பட்டது. விழாவுக்கு ராஜா சர் முத்தையா செட்டியார் தலைமை தாங்கினார். தமிழ் நாட்டின் எல்லாப் பகுதிகளில் இருந்தும் தமிழ் அன்பர்கள் வந்து கலந்து கொண்டு விழாவைச் சிறப்பித்தார்கள். விழாவின் முக்கியஸ்தர்களான மன்ற அங்கத்தினர்களையும், தமிழ் ஆசிரியர்களையும், திரு சோமசுந்தர பாரதியார் அவர்களையும், அவர் மனைவியாரையும் படத்தில் காணலாம்.

"புது மோகம் அப்படித்தானிருக்கும். கொஞ்சம் விட்டுத்தான் பிடிக்க வேண்டும்" என்றார் என்னுடைய அண்ணா.

"கல்லாத்தான் இருக்கு, நீங்க விட்டுப் பிடிக்கிற அழகும் அவரு செலவு பண்ணற அழகும்! எதுக்கும் ஒரு எல்லை வேணும்! மாசத்துக்கு நாலு தடவையா சினிமா பார்க்கிறது! குடும்பம் உருப்படுமா!" என்று கடிந்து பேசினாள் அண்ணி.

தனிமையில் என்னிடம் இதைப் பிரஸ்தாபித்தார் அண்ணா. "எனக்காகவா நான் சினிமாவுக்குப் போகிறேன்! அவள் ஆசைப்பட்டாளே என்று அழைத்துக் கொண்டு போனேன். குறைந்து விட்டால் போகிறது!" என்றேன்.

"அதற்காகச் சொல்லவில்லை, லோகு! ஆயிரம் ரூபாய் கடன் நிற்கிறது. வாங்கின சமர்த்துப் போசுத் திருப்பிக் கொடுக்க வேண்டாமா!" என்றார் அண்ணா. நான் பதில் பேசவில்லை.

இதையெல்லாம் பத்மாவும் கேட்டுக் கொண்டிருந்திருக்க வேண்டும். அன்றிரவு அவள், "ஏன் இப்படி அண்ணனுக்குப் பயந்து ஊமை போல் இருக்கீங்க! நாம் ஒரு சினிமா, நாடகத்துக்குப் போனால் அதற்காக இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்யணுமா! என் இஷ்டம்; போனேன்னு அடிச்சுப் பேச வாயில்லையா உங்களுக்கு! கடனை அடைக்க உங்களுக்கு இல்லாத அக்கறை அவங்களுக்கு மட்டும் என்ன வந்துட்டுது!" என்று பொரிந்து தள்ளினாள் பத்மா.

அப்போதைக்கு அவளுக்கு ஏதோ சமாதானம் கூறினேன். அவள் அடங்கினால்தானே! அவளாகவே அடங்கிப் போனாலும் தண்டையார்ப் பேட்டையிலிருந்து அவள் அம்மா வரும் சமயம் எல்லாம் உபதேச மொழிகளை மூட்டை கட்டி வந்து மகளுக்குப் போதனை செய்து விட்டுப் போகும்போது பத்மாவின் வாய் பெருகி விடும்.

நாளுக்கு நாள் வீட்டில் ரகளை அதிகமாகிக் கொண்டே வந்தது. அண்ணிகள் இருவரும் ஒரு கட்சி. பத்மா எதிர்க்கட்சி. வீட்டுக்கு வரவே பிடிக்காத நிலைமை ஏற்பட்டு விட்டது. விரைவில் அதுவரை அமைதியாக நடந்து வந்த குடும்பத்தில் அன்றாடம் சண்டையும் சச்சரவும் வலுத்தன.

கடைசியில் ஒரு நாள் குடும்பம் பிரிந்து விட்டது. ஆம்; எதைச் செய்யக் கூடாது என்று வெகுவாகப் பிரயாசைப் பட்டேனோ அது நடந்தே விட்டது. பத்மாவை அடக்கிக் கொண்டு வந்த நான், அன்று அண்ணாவிடமே கோபமாகப் பேசி விட்டேன். அவரும் தாறுமாறாகத்தான் பேசி விட்டார். அண்ணியின் போதனை அவர் உள்ளத்திலும் விஷ வித்தை ஊன்றியிருந்தது! இனி, அந்தக் குடும்பத்தில் நான் நிலைக்க வேண்டுமானால், பத்மாவை மறந்து விட்டாலொழிய அதற்கு வழியில்லை என்ற நிலைமை ஏற்பட்ட பிறகு, நான் வேறு என்ன செய்வது! பத்மாவை உதறித் தள்ளவும் மனம் இடம் தரவில்லை.

சிந்தாதிரிப்பேட்டையில் முப்பது ரூபாய் வாடகையில் ஒரு வீட்டுக்குள் ஒண்டுக் குடித்தனமாகப் பத்மாவுடன் தனிக் குடித்தனம் தொடங்கி விட்டேன். புயலுக்கு முன்பு நிலவும் அமைதிபோல, சிலநாட்கள் வரை தனிக் குடித்தனம் சந்தோஷமாக நடந்தது. அதாவது மளிகைக் கடைக்காரர் என் கல்யாணத்துக்காகக் கொடுத்திருந்த கடனைத் திருப்பிக் கேட்கும் வரையில்!

"எனக்கு அவசரமாகப் பணம் தேவையாயிருக்கிறது, தம்பி! இன்னும் ஒரு மாசத்துக்குள் எப்படியாவது கொடுத்து விடு!" என்று கெடு வைத்து விட்டார், அவர். 'ஆகட்டும்' என்று அப்போதைக்குத் தலையசைத்து விட்டேனே யொழிய, சற்று நிதானமாக யோசிக்கையில் எனக்குத் தலை சுற்றியது. வட்டியும் முதலுமாகச் சேர்த்து சுமார் ஆயிரத்து இருநூறு ரூபாய் ஒரு மாதத்துக்குள் எப்படியாவது தேவை! அவ்வளவு பெரிய தொகைக்கு நான் எங்கே போவது!

கடைசியாக வெட்கத்தை விட்டுப் பத்மாவின் உதவியை நாடினேன். அவள் தாயாரிடமிருந்து ஆயிரம் ரூபாய் கடனாக வாங்கிக் கொடுக்கும்படி கேட்டேன். மாப்பிள்ளைக்குக் கொடுத்த கடன் திரும்பி வராது என்ற எண்ணம் போலும், அவள் தாயாருக்கு! இல்லையென்று நிர்தாட்சண்யமாய்க் கூறிவிட்டாள், அவள்!

வேறு யாரையும் கேட்கும் உத்தேசமில்லை, எனக்கு. தீவிர சிந்தனையின் பயனாய், ஒரு முடிவுக்கு வந்தேன். என் காரியாலயத்தில் ஆயிரத்து நானூறு ரூபாய் 'பிராவிடண்ட் பண்டு' தொகை என் கணக்கில் சேர்ந்திருந்தது. அதில் ஆயிரம் ரூபாய் கடன் கேட்டு ஒரு மனு எழுதினேன். அதிகபட்சம், மொத்தம் சேர்ந்துள்ள தொகையில்

மூன்றில் ஒரு பங்குதான் கொடுக்க முடியும் என்று தெரிவித்து விட்டார்கள்.

இந்தப் பதில் எனக்குச் சோரேலென்றது. மனைவியின் கடைக்காரர் பணத்துக்கு நெருக்குகிறார். அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமானால், உடனடியாக நான் வேலையை ராஜினாமா செய்ய வேண்டும். அப்போதுதான் என் பணம் கைக்கு வரும். கடனை அடைத்து விடலாம். மனத்தை இசம்பாக்கிக் கொண்டேன். காரியாலயத்துக்குச் சென்று என் வேலைக்கு ராஜினாமாக் கடிதம் கொடுத்து விட்டேன். என் மேலதிகாரி எனக்கு எவ்வளவோ புத்திமதி கூறினார்.

நான் பிடிவாதமாக என் உறுதியை அறிவிக்கவே, என் ராஜினாமா ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆயிரத்து நானூறு ரூபாய் பணம் பத்து நாட்களுக்குள் என் கைக்கு வந்தது. கடனைக் கொடுத்தது போக எஞ்சியுள்ள தொகையுடன் வீடு திரும்பும்போது மனத்திலிருந்து ஒரு பெரும் சுமை நீங்கியது போலிருந்தது. இந்த விவரம் எதையும் நான் என் மனைவியிடம் சொல்லவே யில்லை. மூன்று மாதங்கள் ரஜாவிலிருப்பதாக மட்டும் அவளிடம் ஒரு பொய் சொல்லி வைத்தேன். கையிலுள்ள ரொக்கம் கரைந்து போவதற்குள் ஒரு வேலை தேடிக் கொண்டு விடலாம் என்ற நம்பிக்கையிருந்தது. அது எவ்வளவு அபத்தமான — வீணான — நம்பிக்கை என்பது போகப் போகத் தெரிந்தது.

அடுத்த மாதம் வாடகை கொடுக்க என்ன செய்வது என்ற நிலைமை ஏற்பட்டவுடன் பத்மாவிடம் உண்மையைக் கூறி விட்டேன். அவள் திடுக்கிட்டாள். அதற்காக நான் சற்றும் கவலைப்படவில்லை.

"உங்களுக்கு ஒரு வேலை கிடைக்கும் வரையில் நான் வேண்டுமானால் அம்மாவிடம் போயிருக்கட்டுமா! உங்களுக்கும் கொஞ்சம் சௌகரியமாயிருக்கும்" என்றாள் அவள்.

அப்படி வலுவில் அவளே என்னைக் கேட்டது பற்றி எனக்குச் சந்தோஷமே. அப்போது அவள் மூன்று மாத கர்ப்பிணி. அடிக்கடி தலைவலியும் வாந்தியும் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. கையிலும் பணமில்லாமல், அவளையும் என்னுடன் வைத்துக் கொண்டிருப்பது சாத்தியமில்லை என்பது நிதர்சனமாகத் தெரிந்து விடவே அவள் யோசனைக்குச் சம்மதித்தேன். அவள் தாயார் மறுவாரமே வந்து அவளை அழைத்துக் கொண்டு போய் விட்டாள்.

எவ்வளவு மாடிப்படிகள் ஏறி இறங்கினேன், எவ்வளவு பேரிடம் பல்லைக் காட்டிக் கெஞ்சினேன் என்பது என்னாலிடங்காது. உள்ளங்கால் எலும்பு தேயும் வரையில் அலைந்தேன், வேலைக்காக. பயனில்லை. மனம் சோர்ந்து விட்டது.

என் தமக்கை வீட்டிலிருந்து கொண்டு எத்தனை நாளைக்குக் காலம் தள்ளுவது!

அடிக்கடி பத்மாவைப் பார்க்கச் செல்லுவதையும் நிறுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று. அங்கு, உத்தியோகமற்ற எனக்குக் கிடைத்த வரவேற்புதான் காரணம்.

கல்யாணமான புதிதில் நான் அவர்கள் வீட்டுக்குச் செல்லும்போதெல்லாம் நடந்த உபசாரனையையும் இப்போது நடப்பதையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது என் நெஞ்சு வேதனையால் குமையும்.

நீண்ட நாட்களாக நான் அவர்கள் வீட்டுப் பக்கமே தலைகாட்டவில்லை. "பத்மாவுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது; ராஜாவாட்டமா இருக்கான். உன்னைப் போலவே நல்ல சிவப்பு. போய்ப் பார்த்துவிட்டு வாயேன்!" என்றாள் என் அக்கா, ஒரு நாள். எனக்கும் குழந்தையைப் பார்க்க வேண்டுமென்று தானிருந்தது. அக்கா போய்ப்



“மஹா ஜனங்களே, அடுத்தாற்போல் நான் பாடுகிறேன் ஆகையால், எல்லோரும் சீக்கிரம் சுண்டல் வாங்கிக் கொண்டு போய் விடுங்கள்.”

பார்த்துவிட்டு வந்தான். அவனுக்கு இருந்த ஆவல் எனக்கில்லையா, என்ன! ஆனால் நான் இந்த நிலைமையில் அங்கு போவது அறிவீனம் என்று ஆவலை அடக்கிக் கொண்டு விட்டேன். ஒரு வேலை கிடைத்துப் பத்மாவை அழைத்துக் கொள்ளும் வரை, அவர்கள் வீட்டுப் பக்கமே தலை காட்டக் கூடாது என்று உறுதி கொண்டேன்.

“உன்னைப் போலவே நல்ல சிவப்பு” என்று அக்கா கூறிய வார்த்தைகள் என் வேதனையை அதிகமாக்கின. எங்கள் குடும்பத்திலேயே நான் ஒருவன்தான் நல்ல சிவப்பு. அந்தச் சிவப்பே எனக்குச் சத்துருவாகியது! தன் காரியாலயத்தில் ஒரு ‘அட்டெண்டர்’ வேலை காலி யிருப்பதாக என்னைச் சிபாரிசு செய்தார், என் நண்பர் ஒருவர். நான் நேரில் சென்று அந்தக் காரியாலய அதிகாரியிடம் மனுச் செய்து கொண்டேன். என்னை ஒரு தடவை அவர் ஏற இறங்கப் பார்த்துவிட்டு என் நண்பரிடம், “நல்ல ஆசாமியைப் பிடித்து வந்தீர்! ஆசாமி மைனர் போல இருக்கிறார். இவர்களெல்லாம் ‘அட்டெண்டர்’ வேலைக்கு லாயக்கா! நகத்தில் அழுக்குப் படாமல் வேலை செய்ய ஆசைப்படுவார்கள், இந்த மாதிரிப் பேர்வழிகள்! ஒரு மாதம் கூட இந்த உத்தியோகத்தில் நிலைத்து இருக்க மாட்டார்கள், ஐயா!” என்று கூறி என்னை நிராகரித்து விட்டார்.

சிவந்த மேனி; களையான முகம்; கொஞ்சம் படிப்பு வாசனை. இந்த மூன்றும் என்னிடம் குடிகொண்டிருந்ததால் எனக்கு அந்த வேலை கிடைக்கவில்லை! நான் ஏன் சிவப்பாகப் பிறந்தேன் என்று என்னையே நொந்து கொண்டேன், அப்போது.

நாட்கள் வாரங்களாக நகர்ந்தன. வேலையில்லாமல் சும்மா இருப்பது என் தமக்கையின் கணவருக்குப் பிடிக்கவில்லை. அவர் என் தமக்கையிடம் கூறி என்னை அவர் வீட்டிலிருந்து போகும்படி வற்புறுத்தி வந்ததை ஒருநாள் கேட்டு விட்டேன். அதோடு அவர்கள் உறவும் அறுந்தது.

இந்த நிலைமையில்தான் நான் உங்களிடம் உத்தியோகத்துக்கு வந்து சேர்ந்தேன். அந்த வேலைக்கு மூந்நூறு ரூபாய் ஜாமீன் கட்ட வேண்டுமென்று நீங்கள் சொன்னபோது எனக்குக் கொஞ்ச நஞ்ச மிருந்த நம்பிக்கையும் தளர்ந்து விட்டது. இதோ உங்கள் முன்னால் அநாதைபோல் நிற்கிறேன்!” என்று தன் சரிதையைக் கூறிக் கலங்கிய கண்களுடன் நின்றான், லோகநாதன்.

என் உள்ளம் நெகிழ்ந்தது. நானே அவனுக்காக மூந்நூறு ரூபாய் ரொக்க ஜாமீன் கட்டி அவனை வேலையில் அமர்த்தினேன். இது நடந்து சில மாதங்களில் கல்கத்தாவிலுள்ள எங்கள் கிளைக் காரியாலயத்தில் ஒரு பதவி காலியாயிற்று. அந்த ஸ்தானத்துக்குத் தன்னை நியமித்து விடும்படி லோகநாதனே வலுவில் கேட்டு மாற்றிக் கொண்டு போனான். அதற்குப் பிறகு காஷாயதாரியாக இப்போதுதான் அவனைக் காண்கிறேன்.

* * *

இந்தச் சம்பவங்கள் எல்லாம் நினைவுக்கு வந்ததும் என் சந்தேகத்தை வெளியிட்டேன்.

“ஆமாம், கல்கத்தாவில் நீ,–மன்னிக்கவும், – நீங்கள் இவ்வளவு நாட்களும் தனியாக இருந்தீர்களா, அல்லது குடும்பத்துடன் வசித்தீர்களா! துறவறம் பூண்டு எவ்வளவு நாளாயிற்று! இதற்குக்காரணம்!” என்று கேட்டேன்.

துறவி கூறினார்: “என் மனைவியிடத்தில் ஏற்பட்டிருந்த மனக் கசப்பைப் பற்றித் தங்களுக்கு முன்பே கூறியிருக்கிறேன். அவளுக்கு ஆடம்பரத்திலும் நாகரிக வாழ்க்கையிலும்தான் மோகம் அதிகமாயிருந்தது. பண்பற்ற அவள் உள்ளத்தை மேலும் பாழ்படுத்தி விட்டாள், அவள் தாயார். என்னைவிட, என் உத்தியோகத்தின் மீதுதான் அவளுக்கு அதிக மோகம்! கௌரவத்துக்கும் அந்தஸ்துக்கும் ஆசைப்பட்ட அவள் என்னை எவ்வளவு தூரம் மதிக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். தங்கள் தயவில் எனக்கு வேலை கிடைத்தவுடன் அவளுக்கு ஒரு கடிதம் எழுதினேன். எனக்கு ஒரு காரியாலயத்தில் ஐம்பது ரூபாய் சம்பளத்தில் ஒரு பியூன்வேலை கிடைத்திருப்பதாயும், குழந்தையுடன் ஒரு வாரத்துக்குள் குடித்தனம் செய்ய என் ஜாகைக்கு வந்து விடும்படியும் எழுதிப் பரீட்சை செய்து பார்த்தேன், அவள் மன நிலையை.

“இரண்டு நாட்களில் பதில் வந்தது. தனக்கு ஒரு மாதமாக உடம்பு சரியில்லையென்றும், மருந்து சாப்பிட்டு வருவதாகவும், எழுந்து நடமாட இன்னும் இரு மாதங்களுக்கு மேல் ஆகுமென்றும் எழுதியிருந்தாள். நான் எழுதியது பொய்! அவள் எழுதியது!

“அதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளத்தான் அன்று தண்டையார்ப் பேட்டைக்குக் கிளம்பினேன். பஸ் நிலையத்தில் காத்திருக்கையில் எதிரிலிருந்த சினிமாக் கொட்டகையில் பகல் காட்சி முடிந்து கும்பல் கும்பலாக ஜனங்கள் வெளியே வந்து கொண்டிருந்தனர். அந்தக் கும்பலை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்த நான் திடீரென்று தேள் கொட்டியவன் போல நின்ற இடத்திலேயே துள்ளினேன்! ஆம்; தோளில் குழந்தையைச் சாத்திய வண்ணம், சினிமாக் கொட்டகையிலிருந்து பத்மா வெளியே வந்து கொண்டிருந்தாள்—அவள் தாயார் பின்தொடர! எழுந்து நடமாட இன்னும் இரண்டு மாதங்கள் ஆகுமென்றாளே! பாவம்! வேலைக்கார லோகநாதனின் மனைவி என்று சொல்லிக் கொள்ள அவளுக்கு வெட்கம் போலும்! இவளைத்தான் கல்

யாணம் செய்து கொள்வேன், என்று அண்ணு
விடம் ஒரு காலத்தில் பிடிவாதமாய்க் கூறியதை
நினைத்தால் எனக்கே வெட்கமும் அருவருப்புந்
தான் உண்டாகிறது, இன்று.

"நான் நின்ற இடத்துக்கு வந்துதான் அவர்கள்
தண்டையார்ப் பேட்டைக்கு பஸ் ஏற வேண்டும்.
அவர்கள் முகத்தில் விழிக்காமல் அங்கிருந்து
கிளம்பிவிட நினைத்தேன். அந்தி மங்கும் வேளை.
தெரு விளக்குகள் எரியத் தொடங்கவில்லை.
ஒதுப்புறமாக ஓரிடத்தில் நின்று கொண்டு
குழந்தையை ஒரு தடவை பார்த்துவிட விரும்பி
னேன். ஆனல், அவர்கள் அந்தப் பக்கம் திரும்பா
மல் நேரே நடை பாதையோடு போய்க் கொண்
டிருந்தார்கள். வேகமாக நடந்து எதிர்ப்புறத்
திலிருந்த நடை பாதையை யணுகி, சுமார் பத்து
கஜ தூரம் இடைவெளி விட்டு அவர்களைப் பின்
தொடர்ந்தேன். இடைவெளி குறுகிக் குறுகிக்
குழந்தையின் முகம் நிழல் படம் போலத் தெரிய
ஆரம்பித்தது. நடையின் வேகத்தைத் துரிதப்
படுத்தி அவர்களை அணுகும் தறுவாயில் அவர்கள்
அருகிலிருந்த ஹோட்டலுக்குள் நுழைந்து விட்ட
னர்! என் துரதிர்ஷ்டம், பெற்ற பிள்ளையைக்
கூடக் கண்குளிரப் பார்க்க முடியாமல் போய்
விட்டது. நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது.
அப்போதைய என் மனநிலையை இன்று கற்பனை
செய்யக்கூட முடியாது என்னல். அவ்வளவு
வேதனை! நான் அநுபவித்த துன்பங்களை யெல்
லாம் கூறி உங்களையும் சிரமப் படுத்தி விட்டேன்,
வினுக" என்று கூறி நிறுத்திச் சற்று ஆசுவாசப்
படுத்திக் கொண்டார், துறவி லோகநாதன்.

"எனக்கு ஒரு சிரமமுமில்லை. தங்கள் சோகக்
கதைதான் வேதனையளிக்கிறது. அதன் பிறகு நீங்
கள் உங்கள் பிள்ளையைப் பார்க்கவே யில்லையா!"
என்றேன். அதற்கு அவர், "இல்லை. ஒரு தடவை
கூடச்சரியாகப் பார்த்தறியாத என் குழந்தையிடம்
எனக்குள்ள பாசத்தை மட்டும் என்னல் துறக்
கவே முடியவில்லை. பால் குடிக்கிற பாலகனிடத்
துள்ள பாசத்துக்காக, அறுந்து போன தாம்பத்ய
உறவை மீண்டும் நிலைநிறுத்திக் கொள்ள விரும்ப
வில்லை நான். கல்கத்தாவுக்குப் போக ஒரு சந்தர்ப்
பம் வாய்த்ததும் அதைப் பயன்படுத்திக் கொண்டு
விட்டேன். உலகத்தில் கௌரவம், பணம் இவை
களுக்குத்தான் முதலிடம்! இன்றைய உலகம்
அப்படி! என் பிள்ளையும் என்னைப் பற்றித் தாழ்
வான அபிப்பிராயம் கொள்ளக் கூடாது என்பதற்
காகத்தான் இவ்வளவு காலமும் உழைத்தேன்.
அந்த உழைப்பின் பலன் இதோ, இதில் மூவாயிரம்
ரூபாய் இருக்கிறது. என் பிள்ளை 'மேஜர்' ஆன
பிறகு இதை அவனிடம் ஒப்படைத்து விட வேண்
டியது தங்கள் பொறுப்பு. இந்த உதவிக்கு நான்
ரொம்பவும் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று
காகித உறையை என்னிடம் நீட்டினர்.

"முன்பின் அதிகப் பழக்கமில்லாத என்னிடம்
இவ்வளவு பெரிய தொகையை நம்பிக் கொடுக்
கிறீர்களே!" என்றேன்.

"உலகில் தங்களைப் போன்ற சில நல்லவர்களும்
இல்லாமலில்லை. முன்பின் தெரியாத என்னிடம்
இரக்கம் காட்டி மூந்நூறு ரூபாய் அன்று எனக்
காக ரொக்க ஜாமீன் கட்டினீர்களே — அந்த
உத்தமனிடத்தில் மூவாயிரம் என்ன, மூன்று
உலகங்களையுமே பத்திரமாக ஒப்படைக்கலாமே!"
என்று சொல்லி விட்டு என் பதிலைக்கூட எதிர்
பாராமல் வேகமாக நடந்து சென்று இருளில்
மறைந்து விட்டார், அந்தத் துறவி.

# வட்டமேஜை

## தமிழின் நிலை

இலங்கையிலுள்ள நமது பாரத ஸ்தானீகர் அலுவலகத்தார் கொழும்பில் ஒரு இந்தியக் கண்காட்சிச் சாலையும், நூல் நிலையமும் நிறுவி நடத்துகிறார்கள். காட்சி அறையில் வைக்கப்பட்டுள்ள சித்திர, சிற்பங்களைப் பார்ப்பதற்கும் விலை கொடுத்து வாங்குவதற்கும் வெள்ளையர் வருகின்றனர். நூல் நிலையத்தில் வைக்கப்பட்டுள்ள ஆங்கிலச் சஞ்சிகைகளையும் புத்தகங்களையும் படிப்பதற்கு ஏராளமான கொழும்பு நகரவாசிகள் வருகின்றனர். ஆனால் ஆங்கிலம் தெரியாத தமிழ் அன்பர்கள் படித்துப் பயனடைவதற்கு அங்கே தமிழ்ச் சஞ்சிகைகளோ, புத்தகங்களோ எதுவும் (தமிழ்—கலைக் களஞ்சியம்—முதல் புத்தகத்தைத் தவிர) இல்லாதது கண்டு நான் மட்டுமல்ல, இன்னும் எத்தனை எத்தனையோ தமிழ் அன்பர்கள் ஏமாற்றம் அடைந்திருக்கிறார்கள்.

அதில் வைக்கப்பட்டிருக்கும் பார்வையாளர்களின் குறிப்புப் புத்தகத்தின் ஒவ்வொரு இதழையும் புரட்டிப் பார்த்தேன். அநேகர் ஆங்கிலத்தில் புகழுரைகள் அளித்திருந்தார்கள். ஆனால் தமிழர்கள், "தமிழ்ப் பத்திரிகைகள் வேண்டும், புத்தகங்கள் வேண்டும்" என்று கேட்டு எழுதியிருக்கிறார்கள். முன்னதை வாசித்து அகமகிழ்ந்தவர்கள், இதைக் கண்டு இரங்கத்தான் செய்வார்கள். தமிழனுடைய குரல் 'அடித்தளத்'திலிருந்து கிளம்புவதாலோ என்னவோ, அதிகாரிகள் அதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. ஹிந்தியில் கூட ஒன்றிரண்டு சஞ்சிகைகளைப் பார்த்தேன். ஏராளமான தமிழ் மக்கள் வாழும் இந் நகரத்தில் தமிழில் அது போன்ற சஞ்சிகைகூட இல்லையென்றால் நமது துர்ப்பாக்கியமே!

கொழும்பு
28—1—55

அ. தங்கசாமி

●

## எல்லாருக்கும் வேலை!

இன்னும் பத்து வருஷங்களில் எல்லோருக்கும் ஏதாவது ஒரு தொழில் கிடைக்கும் என்று மத்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீமான் தேஷ்முக் தெரிவித்தார். இதைத் தொடர்ந்து, மத்திய சர்க்காரும், மாகாண சர்க்காரும், ஏன், காங்கிரஸ் மகாசபையும் கர்ஜிதம் செய்தன.

அநேகமாய் எல்லா வேலைகளுக்கும் சர்க்காரிலும் சரி, தனிப்பட்ட ஸ்தாபனங்களிலும் சரி, வயது 18 முதல் 25 என நிர்ணயித்திருக்கிறது. ஆனால் வேலையிலிருந்து ஓய்வு பெறும் வயதைச் சர்க்கார் வேலையைத் தவிர வேறு எந்த ஸ்தாபனத்திலும் அமுலில் இல்லை. பெரிய தொழிற்சாலைகளிலும், வியாபார ஸ்தாபனங்களிலும், தொழிலாளர்கள், குமாஸ்தாக்கள் ஐம்பது ஆண்டுகள் பதவியிலிருந்து ஓய்வு பெறாமல், வேலைசெய்யும் காரியாலயங்களிலேயே சாக வேண்டும் என்ற நோக்கத்தோடு வேலை செய்கிறார்கள். ஆனால் 18 முதல் 25 வயதுள்ள நம் வாலிபர்கள் வேலை கிடைக்காமல் அலைந்து, அலைந்து வேலை செய்யக் கூடிய வயதையும் வீணாக்கி, கிழவர்களாகி விடுகிறார்கள். சர்க்காருக்கு உண்மையாகவே அக்கறை இருக்குமானால் மூப்பது வருஷம் சர்வீஸ் அல்லது ஐம்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டவர்களைக் கட்டாயம் ஓய்வு எடுக்கும்படி தொழிற்சாலை சட்டத்தைத் திருத்தியோ அல்லது வேறு ஏதாவது வழி செய்தோ ஒரு சட்டம் கொண்டு வரலாம். மேலும் இப்போது படித்து வேலையில்லாத வாலிபர்களை வேலைக்குத் தேர்ந்தெடுக்கும் போது அவர்கள் வயது விஷயத்தில் பத்து வருஷம் தளர்த்தியும் உதவ வேண்டும்.

தூத்துக்குடி
26—1—55

எம். துரைசாமி

●

## கலை அரங்கு மலர்

பிப்ரவரி 27-ம் தேதி வந்த 'கல்கி' "கலை அரங்கு மலர்" கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். கலை புணர்ச்சி உண்மையிலேயே எல்லா உணர்ச்சிகளையும் விட ஓர் மேலான உணர்ச்சி என்பதை 'கல்கி' கலை அரங்கு மலர் மூலம் உணர முடிகிறது. அந்த மலரில் வெளியான கட்டுரைகளும், கதைகளும் கலையின் உயர்வையும் கலைஞனின் பண்பையும் பற்றி மிகச் சிறந்த முறையில் உரைத்துக் கொண்டே இருந்தன.

கலையின் உயர்வையும் கலைஞனின் உள்ளத்தையும் உள்ளூற ஆராய்ந்து திரு ப. ராமமூர்த்தி அவர்கள் எழுதிப் பரிசுபெற்ற "ஆதார சக்தியை"க் கலை அரங்கு மலரில் பிரசுரித்தது கலையின் விளக்க உரைகளுக்கு ஓர் அறிவுரை கூட்டியதுபோல் இருந்தது. "ஆதார சக்தி" கலையின் எல்லை மீறிய சக்தியை விவரிக்கிறது. கலைஞனின் இலட்சிய உயர்வையும் எடுத்துரைக்கிறது.

யாழ்ப்பாணம்
26—2—55

க. கணேசலிங்கம்

●

## கள் இறக்குகிறார்கள்!

செங்கல்பட்டு ஜில்லா பொன்னேரித் தாலூக்காவில் நம் சென்னை அரசாங்கத்தார் பதனீர் இறக்க உத்தரவு கொடுத்தார்கள். ஆனால் மரம் ஏறும் தொழிலாளிகளுக்குப் பதனீர் இறக்கத் தெரியுமா! அப்படித் தெரிந்தாலும் அதைக் காய்ச்சிக் கருப்புக் கட்டி செய்யத் தெரியுமா! என்று கவனித்து அதிகாரிகள் பதனீர் இறக்க உத்தரவு கொடுத்தார்களில்லை. அதனால் இப்பொழுது பதனீர் தனிக் கள்ளாக இறக்கி விற்கப்படுகிறது. மாஜி கள்ளுக்கடை வியாபாரிகள் இதை முன்னின்று நடத்துகிறார்கள்.

ஏதும் அறியாத மரமேறும் தொழிலாளிகள் பெயரில் பதனீர் லைசென்ஸ் வாங்கி அவர்களுக்கு ஒரு ரூபாய் அல்லது ஒன்றேகால் ரூபாய் கூலி கொடுத்துக் கள் இறக்கி விற்பனையாகிறது. மேல் அதிகாரிகள் வந்து பார்த்தால் அவர்கள் பார்வைக்கு ஒரு அடுப்பும் பதனீர் காய்ச்சும் பாத்திரமும் வைக்கப்பட்டிருக்கின்றன. கருப்புக் கட்டியைக் கடையிலிருந்து வாங்கி எப்பொழுதும் பார்வைக்குத் தயாராக வைத்திருக்கிறார்கள். பார்வையிட வரும் ஆபீஸர் கடமை உணர்ச்சி உள்ளவராக இருந்து அதைக் கவனித்துப் பார்த்தால் உண்மை தெரியும்.

கும்மிடிபூண்டி
23—2—55

என். பரமசிவன்

# பார்க்கர்

நீலநிற

வாஷபிள் ராயல் ப்ளூ

# க்வின்க்



## மசியை சுத்தமாக கழுவி அழித்து விடலாம்!

எதிர்பாராதபடி உம் உடையிலோ விரல்களிலோ பார்க்கரின் நீலநிற (வாஷபிள் ராயல் ப்ளூ) க்வின்க் மசி கொட்டிவிட்டால் சாதாரண சோப்பும் நீரும் உபயோகித்து மசி விழுந்த இடமே தெரியாமல் கழுவி சுத்தமாக்கி விடலாம்.

உங்கள் பாதுகாப்பை முன்னிட்டு.

நீலநிற வாஷபிள் க்வின்கை உபயோகியுங்கள். எழுதியது அழியாமல் நிலைத்திருக்க வேண்டுமானால், நிறம் கெடாத பெர்மனென்ட் க்வின்க் மசியை உபயோகிக்கவும். எல்லா க்வின்க் மசிகளிலும்—வாஷபிள் ஆனாலும் சரி, பெர்மனென்ட் ஆனாலும் சரி பேனாவை சுத்தமாக்கி பாதுகாக்கும் ஸால்வ்-X அடங்கியுள்ளது.




**பார்க்கர்**
**க்வின்க்**

ஸால்வ்-X அடங்கிய
மசி இது ஒன்றே

**விலை ரூ. 1/-**

பார்க்கர் பேனா கம்பெனி (இந்தியா) லிட்.,
த. பெ. 51, மதராஸ் 1

ஏக விநியோகஸ்தர்கள்: பாரி & கம்பெனி லிமிடெட்,
டேர் ஹவுஸ், மதராஸ் 1

PKQ. 988

# உங்கள் பற்களை சுத்தம் செய்ய இதோ ஒரு புதிய சிறப்பான முறை!

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை நிற 'கோலினாஸ்' உங்கள் பற்களை வெண்மையாக்குவதுடன், பல் சிதைவிற்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாக வைத்திருக்கவும் உதவுகிறது. உங்கள் சுவாசம் மணிக்கணக்கில் புதுமணம் கமழ விளங்குகிறது. இதன் ரகசியம் செழிப்பான 'கோலினாஸ்' நுரையில்தான அடங்கியுள்ளது. அது ஆக்டிவ் க்ளோரோபில்லை வாயில் பிரஷ் நுழைய முடியாத ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும் எடுத்துச் செல்கிறது.

**எவ்வளவோ சிக்கனமானது**

'கோலினாஸ்' நுரை மூலம் நீங்கள் அதிக பயனும் அடைகிறீர்கள். ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது. இப்பொழுதே ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினாஸ்' டூத்பேஸ்டை உபயோகிக்கத் தொடங்குங்கள்.






GK. 1170

# சக்கரவர்த்தித் திருமகன்

## 57. சுக்ரீவன் சந்தேகம்

மனைவியையும் ராஜ்ய பதவியையும் மறுபடியும் அடைய வேண்டும் என்கிற ஆசை சுக்ரீவனை விட்டுப் போகவில்லை. ஆனால் அதற்கு அவன் ஒரு வழியும் காணவில்லை. வாலியின் பராக்கிரமம் தாண்டக்கூடாத ஒரு மலையாக நின்றது.

ராமனுடைய சகாயத்தைக் கொண்டு காரியம் சாதிக்கலாம் என்று மந்திரி ஹனுமான் தைரியம் சொல்லி வந்த போதிலும் சுக்ரீவன் மனத்தில் சந்தேகம் இருந்து கொண்டேயிருந்தது. இந்த ராமனுடைய பராக்கிரமத்தைக் கொண்டு வாலியை வெல்ல முடியுமா? இது ஆகாத காரியமாகத் தோன்றுகிறது என்று ஐயப்பட்டுக் கொண்டேயிருந்தான். வாலியினுடைய தேகம் இரும்பைப் போன்றது, அவனை எப்படி ராமன் கொல்லப் போகிறான் என்பது சுக்ரீவனுடைய சந்தேகம்.

ஆயினும் இதைவிட்டால் வேறு வழி ஒன்றுமே இல்லை. நிராசையாகப் போவதற்கும் மனம் இணங்கவில்லை. ராமனுடைய பலத்தைப் பரீக்ஷை செய்ய வேண்டும் என்று தீர்மானித்தான்.

நண்பனுடைய பலத்தை எவ்வாறு சந்தேகித்துப் பரீக்ஷை செய்வது? நான் செய்து முடிக்கிறேன் என்று ராமன் பிரதிக்ஞை செய்து விட்டதற்கும் எப்படி அவனுடைய பராக்கிரமத்தைச் சோதித்துப் பார்க்கும் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொள்ளுவது என்றெல்லாம் சுக்ரீவன் யோசித்தான். சுக்ரீவன் மிக்க சமத்காரம் பெற்றவன். மெள்ளப் பேசலானான்:

"ராமசந்திர பிரபுவே! நீ சொன்ன சொல் இதுவரையில் என் உள்ளத்தில் இருந்து வந்த துக்கத்தைப் போக்கி விட்டது. உன்னுடைய பராக்கிரமத்தை அறிவேன். உன்னால் விடப்படும் சரம் மூன்று லோகங்களையும் அழிக்கும். அப்படியிருக்க வாலியின் தேகக்கட்டு அதைத் தாங்குமா? ஆயினும் இந்த வாலியின் பராக்கிரமத்தைப் பற்றி உனக்குத் தெரிவிக்க வேண்டியது என் கடமை. வாலியானவன் அதிகாலையில் எழுந்து ஒரே முகூர்த்தத்தில் நான்கு சமுத்திரங்களுக்கும் போய்ச் சந்தியாவந்தனம் செய்து முடிப்பான். மலைப் பாறைகளைப் பந்துபோல் மேலே எறிந்து விளையாடுவான். காட்டிலுள்ள பெரிய பெரிய மரங்களைப் புல்லைப் பிடுங்குவது போல வேரோடு விளையாட்டாகப் பிடுங்கித் தள்ளுவான்.

"ஒரு காலத்தில் துந்துபி என்கிற எருமை வடிவம் பெற்ற அசுரன் தான் பெற்ற வரத்தினால் ஆயிரம் யானையின் பலம் அடைந்து, அந்த பலத்தை இன்ன விதத்தில் உபயோகிப்பது

ராஜாஜி

என்று தெரியாமல் சமுத்திர ராஜனைச் சண்டைக்கு இழுத்தான். சமுத்திர ராஜன், 'உனக்குச் சமானமான எதிரியோடு அல்லவோ நீ யுத்தம் செய்யவேண்டும்? வடக்கே ஹிமவான் இருக்கிறான். அவனண்டை போய் யுத்தம் கேள். நான் உனக்குச் சமான எதிரியல்ல' என்றான். இது நியாயமே என்று துந்துபி ஒப்புக்கொண்டு மிக வேகமாக வடக்கே சென்றான். போய் ஹிமவானை 'வா! என்னோடு யுத்தம் செய். நீ மகா பலவான் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாயாம். உன் பலத்தை, பரீட்சை செய்ய வந்திருக்கிறேன்!' என்று இமயமலையிலுள்ள பாறைகளைக் கொம்பால் இடித்துத் தள்ளி அட்டகாசம் செய்து கர்ஜித்தான். ஹிமவான் தனக்குண்டான கோபத்தை அடக்கிக் கொண்டு 'அப்பா, நீ என்மேல் ஏன் பாய்கிறாய்? எனக்கு யுத்தப் பயிற்சியே கிடையாது. நான் சாதுக்களாகிய முனிவர்களுக்கு இருக்க இடம் தந்து அவர்களோடு காலம் கழித்து வருகிறேன்' என்றான். அப்படியானால், எனக்குச் சமானமான ஒரு பலவானைச் சொல்லு. அவனோடு இன்றே நான் யுத்தம் செய்ய வேண்டும்' என்று மஹிஷாசுரன் மூர்க்கமாகச் சொன்னான்.

"இதைக் கேட்ட ஹிமவான், 'தெற்கே உனக்குச் சமமானவன் ஒரு பலவான் இருக்கிறான். வாலி என்ற வானர ராஜன் இந்திரனைப் போன்ற பராக்கிரமசாலி. அவன்தான் நீ யுத்தத்துக்கு அழைக்கத் தக்க சமான வீரன். உனக்கு இஷ்டமிருப்பின் உடனே அவனிடம் போய் யுத்தம் கேள்' என்றான்.

இதைக் கேட்டதும் துந்துபி வாலியின் நகரத்துக்குச் சென்றான். கிஷ்கிந்தை வாயிலில் பெரிய அட்டகாசம் செய்தான். மரங்களைத் தள்ளிக் கோட்டை வாயிலைத் தன் கொம்புகளால் இடித்துப் பெருங் கர்ஜனை செய்து வாலியை 'வா, வெளியே! உனக்கு பலம் இருப்பது உண்மையானால் என்னுடன் போர் செய்' என்றான்.

"அந்தப்புரத்தில் சுகமாகப் படுத்திருந்த வாலி இந்தச் சப்தத்தைக் கேட்டான். உடனே எழுந்து வந்தான். அவனுடன் ஸ்திரீகளும் அச்சமயம் சென்றார்கள். வெளியே வந்து, 'துந்துபீ, ஏன் இம்மாதிரி என் நகரத்து வாயிலில் கோஷமிடுகிறாய்? உயிரோடு இருக்க உனக்கு ஆசை இருந்தால் இவ்விடத்தை விட்டுச் செல்' என்றான்.

"இப்படி வாலி தன்னை அலட்சியமாகப் பேசியதைக் கேட்ட துந்துபி மிகக் கோபங்கொண்டு 'உன்னுடைய மனைவிகளுக்கு எதிரில் ஜம்பமாகப் பேசாதே! போருக்கு வந்திருக்கிறேன். உனக்கு வீரியமிருக்குமாயின் என்னுடன் யுத்தம் செய். வீண் பேச்சு வேண்டாம். இப்போது நீ படுக்கையிலிருந்து மயக்கமாக வந்திருக்கிறாய். காலை வரையில் நான் காத்திருக்கச் சம்மதிக்கிறேன். கள்ளைக் குடித்து பலம் இழந்தவனைத் தாக்குவது பாவமாகும். இந்த ராத்திரி நீ எல்லா சுகங்களையும் அனுபவித்து விட்டு எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டு சரியான நிலையில் வா. உன்னை வதம் செய்வேன்' என்றான்.

"துந்துபியின் வார்த்தைகளைக் கேட்ட வாலி சிரித்து விட்டுச் சொன்னான் 'பெண்களே! நீங்கள் போங்கள். அசுரனே! நான் மயக்கத்தில் இல்லை. யுத்தத்துக்கு முன் அருந்தும் உற்சாக பானம்தான் குடித்து வந்திருக்கிறேன் என்று வைத்துக் கொள். போர் செய்ய விரும்புகிறாயானால் இப்போதே போர் செய்யலாம்' என்று சொல்லி மஹிஷாசுரனுடைய வாலைப் பிடித்துக் கர கர வென்று அவனைச் சுழற்றி வீசி எறிந்தான். ரத்தம் கக்கிக் கொண்டு அசுரன் விழுந்தான்.

"பிறகு சமாளித்துக் கொண்டு அசுரன் எழுந்தான். இருவருக்கும் பெரும் போர் நடந்தது. இந்திரனுடைய புத்திரனான வாலி மஹிஷாசுரனை இடித்து இடித்துக் கொன்றான். செத்து விழுந்த அசுரனை வாலி எடுத்துத் தூக்கி எறிந்தான். அது ஒரு யோசனை தூரம் போய் விழுந்தது.

"எறியப்பட்ட அசுரனுடைய தேகத்திலிருந்து ரத்தத் துளிகள் காற்றால் வீசப்பட்டு மதங்க முனிவர் ஆசிரமத்தின் மேல் விழுந்தன. முனிவர் யார் இதைச் செய்தது என்று கோபங் கொண்டு பார்த்தார். நடந்ததை உடனே அறிந்து கொண்டார்.

"கர்வம் கொண்டு இம்மாதிரி ஒரு சவத்தை விட்டெறிந்து ஆசிரமத்தின் பேரில் அசுத்தமான ரத்தத் துளிகள் விழச் செய்தானே என்று வாலியை முனிவர் சபித்து விட்டார். 'இந்த ஆசிரமத்து பூமியில் அவன் பிரவேசித்தானானால் உயிர் நீப்பான்' என்று சாபமிட்டார். இதனால்தான் ராமனே, நானும் என் மந்திரிகளும் இவ்விடம் வந்து க்ஷேமமாக இருக்கிறோம். வாலி இ



டம் வருவதற்கில்லை. மற்ற எந்த
டம் சென்றாலும் அவனுடைய தொந்
ரவு உண்டாகும்.

"ரிஷியின் சாபத்தால் இந்த எல்லைக்
ன் பிரவேசிப்பதற்குப் பயப்படுகிறான்.
ந்த ஆச்சா மரங்களைப் பார். வாலி
ந்த மரங்களில் ஒன்றைத் தன் கையால்
டுங்கி ஒரு அசைப்பு அசைத்தால் மரத்
ல் உள்ள அவ்வளவு இலைகளும்
திர்ந்து போகும். அவனுடைய பராக்
ரமம் இவ்வாறு இருக்க அவனுடைய
ரோதத்தைச் சம்பாதித்த நான் எப்
டித் தைரியமாக இருக்க முடியும்?"
ன்றான் சுக்ரீவன்.

லக்ஷ்மணன் சுக்ரீவனுடைய பயத்தை
ம் அவன் இம்மாதிரி வாலியின் பலத்
தைக் குறித்துப் பேசி வந்ததின் நோக்கத்
தையும் நன்றாக உணர்ந்து கொண்டான்.

"சுக்ரீவனே! உன் சந்தேகம் தீர
ாமனுடைய பலத்தையும் நீ பார்க்க
ாம்" என்றான்.

"சந்தேகம் எனக்கில்லை. சாம்பல்
த்த நெருப்பைப் போன்ற ராமனுடைய
லத்தை நான் அறிந்தவனே யாவேன்.
ாமனை நான் சரணமடைந்தேன். ஆனா
ம் வாலியின் பல பராக்கிரமத்தைப்
ரத்தியட்சமாகப் பார்த்த நான் அவனை
நினைக்கும்போதெல்லாம் நடுங்குகிறேன். அவ்வளவே" என்றான் சுக்ரீவன்.

இப்படிச் சுக்ரீவனுடைய பக்தியையும், சரணமடைந்து விட்ட நிலையையும், வாலியை நினைத்துப் பயப்படுவதையும் பார்த்த ராமன், அவனுடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதே சரி என்று எண்ணித் தன் கால் கட்டை விரலால் துந்துபியின் பிரேதம் ஒரு மலை போல் கிடந்ததை கெம்பி விளையாட்டாகத் தூக்கி எறிந்தான். பிரேதம் பத்து யோஜனை தூரம் போய் விழுந்தது.

பிறகு அதுவும் போதாதென்று ராமன் தன் வில்லைக் காது வரை இழுத்து வளைத்து ஒரு சரத்தை விட்டான். அது சுக்ரீவன் காட்டிய ஆச்சா மரத்தையும் அதன் பின் நின்ற ஆறு ஆச்சாமரங்களையும் சேர்த்துத் துளைத்து விட்டது. ஏழு மரங்களையும் துளைத்து அந்தத் தங்கக் கட்டுச் சரம் பூமியில் புகுந்தது. பிறகு திரும்பி ராமசந்திரனுடைய தூணியில் வந்து சேர்ந்தது.

இதையெல்லாம் கண்ட சுக்ரீவன் பரவசமாய்ப் போனான். வாலியின் வஜ்ஜிர தேகம் ராமனுடைய சரத்தால் பிளக்கப் படும் என்று நிச்சயமடைந்தான். வானர

ராஜன் அப்படியே சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து ராமனை நமஸ்கரித்து,

"உன் பராக்கிரமத்தைக் கண்ணாரக் கண்டேன். தேவகணங்கள் அவ்வளவு பேரும் இந்திரனைத் தலைமை கொண்டு வந்து நின்று உன்னை எதிர்த்தாலும் உன் வெற்றி நிச்சயம். இனி வாலியைப் பற்றி என்ன பேச்சு? உன்னுடைய நட்பை அடைந்த என் துயரம் இன்றே தீர்ந்து விட்டது. உடனே வாலியை அழித்து விட்டு என்னைக் காப்பாற்று வாய். இன்றே கிஷ்கிந்தை செல்வோம்" என்றான்.

லக்ஷ்மணனும் சம்மதித்தான். "அப்படியே ஆகட்டும்!" என்றான் ராமன். கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள். சுக்ரீவன் முந்திச் சென்றான். ராமன் பின்னால் சென்று அடர்ந்த காட்டில் ஒரு மரத்துக்குப் பின் நின்றான்.

* * *

சுக்ரீவன் ஒரு பெருங் கர்ஜனை செய்தான். அதைக் கேட்ட வாலி மகா கோபத்துடன் மலைக் கோட்டையிலிருந்து உதய சூரியனைப் போல் தேஜஸுடன் வெளியே வந்தான். இருவரும் கச்சை இழுத்துக் கட்டிக் கொண்டு கை கலந்தார்கள். உக்கிரமான முஷ்டி யுத்தம் நடந்தது.

இப்படி கோர யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் வில்லைப் பிடித்து மறைந்து நின்ற ராமன் திகைத்தான். இருவரும் ஒருவரோடு ஒருவர் கலந்து யுத்தம் செய்ய ஆரம்பித்ததும் யார் சுக்ரீவன், யார் வாலி என்று ராமனால் உணர முடியவில்லை. இருவரும் ஒரே வடிவம், ஒரே விதமான ஆபரணங்கள் பூண்டு ஒரே விதமான பராக்கிரமத்துடன் மல்யுத்தம் நடத்திக் கொண்டிருந்தார்கள். ஆனபடியால் யார் வாலி என்று தெரிந்து கொள்ள முடியாமல் போயிற்று. கொல்லும் சரத்தைப் பிரயோகிக்க இடமில்லாமல் போயிற்று.

இதற்கிடையில் சுக்ரீவன் மிக அடிபட்டு, ராமன் ஒன்றும் செய்யவில்லையே என்று ஏமாற்றமடைந்து, தன் உயிர் போகும் என்று பயந்து ரிஷ்யமூக வனத்துக்கு ஒரே ஓட்டமாக ஓடினான்.

"இன்று பிழைத்தாய், போ" என்று வாலி தம்பி சுக்ரீவனை நோக்கிச் சொல்லி விட்டுத் தன் கோட்டைக்குள் சென்றான்.

ராமலக்ஷ்மணர்கள் அடிபட்டும் துக்கப்பட்டும் நின்ற சுக்ரீவனிடம் வந்து சேர்ந்தார்கள். வானர ராஜன் ராமனை நேரில் பார்க்காமல் தரையைப் பார்த்துப் பேசினான். சொன்ன சொல்லைத் தவறினான் என்பது சுக்ரீவனுடைய கோபம்.

"வாலியைக் கொல்ல நான் பிரியப்படவில்லை என்று முந்தியே என்னிடம் சொல்லி விட்டிருந்தாயானால் நன்றாக இருந்திருக்கும் அல்லவா? என்னை ஏன் வாலியைப் போருக்கு அழைக்கச் சொன்னாய்?" என்றான் சுக்ரீவன்.

"சுக்ரீவனே! கோபிக்க வேண்டாம். நான் சொல்லுவதைச் சாவதானமாகக் கேட்க வேண்டும்" என்றான் ராமன். "நான் பாணம் விடாததற்குக் காரணம் சொல்லுகிறேன். நீயும் வாலியும் அலங்காரம், வேஷம், உயரம், பருமன், நடை எல்லாவற்றிலும் ஒரே மாதிரி இருந்தீர்கள். போர் ஆரம்பித்து விட்ட பிறகு உங்களில் யார் வாலி, யார் சுக்ரீவன் என்று தெரிந்து கொள்ள முடியாத நிலையில் நான் திகைத்து நின்றேன். நான் பாணத்தை விட்டு வாலிக்குப் பதில் உன்னைக் கொன்று விட்டேனானால் என்ன ஆகும்? சகோதரர்களாகிய நீங்கள் போட்ட கர்ஜனைகள், முகத்தின் காந்தி, யுத்தம் செய்த முறை எல்லாவற்றிலும் ஒருவனைப் போலவே மற்றொருவனும் இருந்தீர்கள். கொஞ்சங்கூட வித்தியாசமின்றி இருந்தீர்கள். இந்த நிலையில் நான் ஏதும் செய்ய முடியாமல் நிற்க வேண்டியதாயிற்று. வாலி என்று எண்ணி உன்னைக் கொன்று விட்டேனானால் அப்புறம் என் கதி என்ன? பிழைப்பிக்க வந்து கொன்று விட்ட மூடனும் பாவியும் ஆவேனல்லவா? கோபிக்காதே, சுக்ரீவா! மறுபடியும் வாலியை அறை கூவி யழைப்பாய். வாலியை நிச்சயமாகக் கொல்வேன். லக்ஷ்மணா, அதோ அந்த அழகிய பூப் பூத்த கொடியைக் கொண்டு வா. சுக்ரீவன் கழுத்தில் அதை மாலையாய் அமைத்துக் கட்டுவாய். யுத்தத்தில் யார் வாலி, யார் நம்முடைய நண்பன் என்று அதனால் நான் நன்றாகக் காண்பேன். நாம் எண்ணிய காரியத்தை நிறைவேற்றுவோம். இன்றே வாலி பூமியில் விழுந்து புரள்வதைப் பார்ப்பாய், சுக்ரீவனே!" என்றான்.

சுக்ரீவன் சமாதானமடைந்து மறுபடியும் உற்சாகம் அடைந்தான். லக்ஷ்மணன் பூங்கொடியைச் சுக்ரீவன் கழுத்தில் மாலையாக அமைத்துக் கோத்தான். மாலை அணிந்த சுக்ரீவன் முன்னைவிட அழகாகத் தோன்றினான். உடனே கிஷ்கிந்தை வாயிலுக்கு மறுபடியும் போனான். கூட ராமலக்ஷ்மணனும் பின்னால் சென்றார்கள்.

# தங்க மாம்பழம்

ராஜி

பாப்பா மலர் தொடர் கதை

## 24. பச்சைத் திராக்ஷை

"நீங்கள் சொல்லுவது சரிதான்! கல்லறைத் தீவுக்கு யாரும் போனதில்லை தான். அதனால்தான் நான் அங்கே போக வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அங்கே போகிறவர்கள் கல்லாக மாறிவிடுகிறார்கள் என்று நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் நான் அதற்காகக் கொஞ்சங் கூடப் பயப்படவில்லை. கல்லறைத் தீவில் இருக்கும் நாயைப் பற்றித் தானே சொல்லுகிறீர்கள்? அதைப் பற்றி நான் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறேன். ஆனால் இந்த வில்லும் கத்தியும் அங்கு உபயோகத்துக்குக் கொண்டு போக வில்லை. எனக்கு இவைகள் வெகுமதியாகக் கிடைத்தன. அவ்வளவுதான். தயவு செய்து எனக்குக் கல்லறைத் தீவுக்கு எப்படி வழி என்று மாத்திரம் சொல்லுங்கள்" என்றான் பிரபாகரன்.

"தம்பி, அவசரப்படாதே. உனக்குத் தான் கல்லறைத் தீவில் இருக்கும் நாயைப் பற்றி நன்றாகத் தெரியும் என்கிறாயே? ஆதலால் அதைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் நீ இங்கிருந்து கல்லறைத் தீவுக்குப் போவது சுலபமல்ல. கல்லறைத் தீவு மாயா மகேந்திர புரத்து அரசன் வீரசிம்மனைச் சேர்ந்தது. வீர சிம்மனும், இந்தப் பட்டணத்தை ஆளும் சிற்றரசன் மகேந்திர மன்னனும் நெருங்கிய நண்பர்கள். ஆதலால் கல்லறைத் தீவில் ஏதோ இரகசிய விஷயம் இருப்பதால் அங்கு ஒருவரும் எளிதில் போகாதபடி ஏற்கெனவே ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. இந்தப் பட்டணத்திலிருந்து பல மைல்களுக்கப்பால்தான் அத் தீவு இருக்கிறது. கிழக்கே கொஞ்ச தூரத்துக்கு அப்பால் ஒரு பாலைவனம் இருக்கிறது. பல மைல் விஸ்தீரணம் உள்ளது அப் பாலைவனம். ஆதலால் குதிரைகளும் அதில் எளிதில் போக முடியாது. கல்லறைத் தீவுக்குப் போக விரும்புபவர்கள் பாலைவனத்தைக் கால் நடையில்தான் கடக்க வேண்டும். போகும் வழியில் குடிக்கத் தண்ணீர் கூடக் கிடையாது. இரவில் தங்குவதற்கு இடமும் இல்லை. அப்படிப் பாலை வனத்தில் தங்க நேரிட்டால் அருகிலுள்ள காட்டிலிருந்து இரை தேட வரும் துஷ்ட மிருகங்களுக்குப் பலியாக வேண்டியதுதான். நானோ ஒரு அரசாங்கச் சேவகன். இந்த ரகசிய விஷயங்களை நான் சொன்னதாகத் தெரிந்தாலே என் தலைக்கு ஆபத்து. ஏதோ உங்கள் இருவருடைய முகத்தைப் பார்த்தால் எனக்கு உங்களிடம் உண்மையைச் சொல்ல வேண்டும் போலத் தோன்றியது, அதனால்தான் சொன்னேன். எனக்கு நாழிகை ஆகிவிட்டது. நீங்கள் கிழக்குத் திக்காக நேரே செல்லுங்கள். பாலைவனத்தை அடைய அந்த வழி ஒன்றுதான் இருக்கிறது. நான் போய் விட்டு வருகிறேன்" என்று கூறிச் சேவகன் போகத் தொடங்கினான்.



படத்தில் இருப்பவருக்கு நாயென்றால் உயிர். படத்தில் நாயும் இருக்கிறது. திருப்பிப் பாருங்கள்!

"ஐயா, நீங்கள் வழி காட்டியதற்கு எங்கள் வந்தனம். ஒரு சந்தேகம். இவ்வூர் அரசனோ அல்லது வேறு அதிகாரிகளோ இப் பட்டணத்திலிருந்து கல்லறைத் தீவுக்குப் போகும்படி நேரிட்டால் எப்படிப் போவார்கள்?"

"அவர்களுக்கு என்ன! அவர்கள் சௌகரியமாகப் போவதற்கு ஒட்டகம்



படத்திலிருக்கும் தப்புகளைக் கண்டு பிடியுங்கள்! உதாரணமாக......பம்பரத்துக்கு ஆணி இல்லை.

ஒன்று அரண்மனையில் இருக்கிறது. அதன் உதவியைக் கொண்டு அங்கு போவது வழக்கம். நீங்களும் அந்த ஒட்டகத்தின் உதவியை இவ்வூர் அரசனின் உத்தரவு பெற்று உபயோகித்துக் கொள்ளலாம். ஆனால் அவர் முன்பின் அறியாத உங்களுக்கு அந்தச் சௌகரியம் செய்து கொடுப்பாரா என்பது சந்தேகம்தான்."

"எங்களுக்கு எதற்காக அவர் உதவி செய்ய வேண்டும்? நானும் உதவி கேட்க அரசனிடம் போகப்போவதில்லை. என்றாலும் முடிந்த வரையில் பாலைவனத்தைக் கடக்கப் பார்க்கிறேன். முடியா விட்டால் திரும்பி விடுகிறேன். வா உமா, கிழக்கு திக்கு நோக்கிப் போகலாம்" என்று கூறி, அரசாங்கச் சேவகனிடம் விடைபெற்றுக் கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான், பிரபாகரன் உமாவுடன்.

பிரபாகரனும் உமாவும் சந்தோஷமாகப் பேசிக் கொண்டே மகேந்திரபுரப் பட்டணத்தைக் கடந்து போய்க் கொண்டிருந்தார்கள். சிறிது தூரம் சென்றவுடன் பட்டணத்தில் பார்த்த ஜன நடமாட்டத்தைக் காணவில்லை. ஜன நடமாட்டம் என்ன, பிராணிகளின் நடமாட்டத்தைக் கூடக் காணவில்லை. அந்த இடத்திலே ஒரு கிணறு இருந்தது. தண்ணீர் குடிக்க வசதியாக ஒரு ராட்டினமும் அதில் கயிற்றுடன் ஒரு வாளியும் தொங்கவிடப் பட்டிருந்தன. வழிப்போக்கர்கள் தங்குவதற்கு வசதியாக ஒரு சிறிய பந்தலும், சிமிட்டியினால் கட்டப் பட்ட ஒரு பெஞ்சியும் இருந்தன. அந்த இடத்திலே பழைய கறுப்புப் பலகை ஒன்று தொங்கவிடப்பட்டிருந்தது. அதில், "முக்கிய அறிவிப்பு. இந்த இடத்துக்கு அப்பால் கிழக்கு நோக்கிச் செல்ல வேண்டாம் என்று எச்சரிக்கை செய்யப்படுகிறது. மணல் நிறைந்த பாலைவனம் பல மைல்களுக்குப் பரவியிருப்பதால் அதன் வழியாகப் போகிறவர்கள் ஆகாரத்துக்கும், தண்ணீருக்கும் கஷ்டப்பட நேரிடும். மகேந்திர மன்னனின் உத்தரவு" என்று எழுதி இருந்தது.

இந்த எச்சரிக்கையைப்படித்ததும் உமா, "அண்ணா, நாம் இப்பொழுது என்ன பண்ணுவது? இந்தப் பலகையில் எழுதி இருக்கும் எச்சரிக்கையைப் பார்த்தால் மிகவும் பயமாக இருக்கிறதே!" என்றாள்.

"உமா, இந்தப் பாலைவனத்தின் விவரங்களைப் பற்றி ஏற்கெனவே துறவி சொல்லி இருக்கிறார். நம்மைச் சந்தித்த அரசாங்கச் சேவகனும் சொன்னான். அப்படியிருக்கும் போது ஏதோ ஒரு புது எச்சரிக்கையைப் பார்த்தது போல அல்லவா பேசுகிறாய்? ஒன்றுக்கும் பயப்படாதே. முடிந்தால் பாலைவனத்தைக் கடப்போம். இல்லா விட்டால் திரும்பி விட்டால் போகிறது. எதற்கும் இந்தக் கிணற்றிலிருந்து தண்ணீர் குடித்து விட்டு அந்தப் பெஞ்சியில் சற்று உட்கார்ந்து இளைப்பாறி விட்டு மேலே செல்லலாம்" என்றான் பிரபாகரன்.

அப்பொழுது அந்தப் பந்தலில் வேறு ஒருவரும் உட்காரவில்லை. ஆதலால் பிரபாகரனும் உமாவும் தனியாக உட்காருவதற்குச் சௌகரியமாக இருந்தது. அவர்கள் இருவரும் சந்தோஷமாக வில் போட்டியில் கிடைத்த வெற்றியைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் பேசிக் கொண்டு உட்கார்ந்திருந்த சமயத்தில் ஒரு சிறிய கூடையைத் தலைமேல் வைத்துக் கொண்டு வயது முதிர்ந்த கிழவி ஒருத்தி கிணற்றண்டை வந்தாள். அவளைப் பார்த்தால் வெகு தூரம் நடந்து வந்தவள் போல் தோன்றியது. வந்தவள் பிரபா






கரனும், உமாவும் உட்கார்ந்திருப்பதைக் கவனிக்கவில்லை. தன் தலையிலிருந்த கூடையைக் கீழே வைத்தாள். கூடையின் மேல் மூடியிருந்த இலைகளைச் சரியாக வைத்தாள். தான் ஊன்றி நடந்து வந்து கொண்டிருந்த தடியை ஒரு ஓரமாக வைத்து விட்டுக் கிணற்றிலிருந்து மெதுவாகத் தண்ணீர் எடுக்க முயன்றாள். தள்ளாத வயதினால் அவளால் தண்ணீர் எடுக்க முடியவில்லை. உடனே அந்தக் கிழவியின் பரிதாபகரமான நிலையைப் பார்த்த பிரபாகரன் வேகமாக வந்து அவள் கையிலிருந்த ராட்டினக் கயிற்றை வாங்கிக் கிணற்றிலிருந்து அரை நொடியில் தண்ணீர் இழுத்து வாளித் தண்ணீரை அவள் எதிரில் வைத்தான்.

"அப்பா, நீ மகாராஜனா இருக்கணும்" என்று சொல்லிக் கொண்டே தண்ணீரை இரண்டு கையாலும் அள்ளிக் குடித்தாள். முகத்தைக் கழுவிக் கொண்டாள்.

அந்தக் கிழவி புதியவள் அல்ல: பழைய வயற் காட்டுக் கிழவிதான். பழம் விற்கும் ஒரு கூடைக்காரி போலத் தன் உருவத்தைச் சற்று மாற்றிக் கொண்டு அங்கு வந்தாள். தான் கொடுத்த மந்திர அம்புகளை உபயோகிக்காமல் வில் போட்டியில் வெற்றி பெற்ற பிரபாகரனுக்கு ஏதாவது தீங்கு செய்ய வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் பிரபாகரனையும் உமாவையும் பின் தொடர்ந்திருக்கிறாள். கிழவிக்கு எப்படியாவது பிரபாகரனையும் உமாவையும் கல்லறைத் தீவுக்குப் போகாமல் நிறுத்திவிட வேண்டும், அரசனுடைய சந்தோஷத்தையும், வெகுமதியையும் பெற வேண்டும், வீரப்ப தேவனை அவமானப் படுத்த வேண்டும் என்னும் தீவிர எண்ணத்தைக் கொண்டிருந்தாள். ஆனால் பாவம், இந்தக் கிழவியின் சூழ்ச்சிகளைப் பற்றிப் பிரபாகரனுக்கு என்ன தெரியும்? அப்படித் தெரிந்திருந்தால் கிழவிக்கு ஓடோடியும் வந்து கிணற்றிலிருந்து தண்ணீர் இழுத்துக் கொடுத்து உபகாரம் செய்திருப்பானா?

திரும்பிப் பார்த்த கிழவி தனக்கு உதவி செய்த பிரபாகரனைப் பார்த்துச் சிரித்தாள். பிரபாகரனும் பதிலுக்குச் சிரித்து விட்டு உமாவுடன் பேசிக் கொண்டிருந்தான். உடனே கிழவி தடியை ஊன்றிக் கொண்டு கூடையை மற்றொரு கையில் எடுத்துக் கொண்டு அவர்கள் உட்கார்ந்திருந்த பெஞ்சியின் அருகில் இருந்த கடப்பைக் கல்லின் மீது "அம்மாடி!" என்று உட்கார்ந்தாள்.

"அப்பா, உன்னைப் பார்த்தால் மிகவும் நல்ல பிள்ளையாகத் தோன்றுகிறது. நான் வெகு தூரத்திலிருந்து நடந்து வருகிறேன். இவள் யார்? பார்த்தால் உன் தங்கையைப் போலத் தோன்றுகிறதே!" என்றாள் கிழவி.

"ஆமாம். இவள் என் தங்கைதான்! நாங்கள் இந்த ஊருக்குப் புதிது. இப்பொழுது நாங்கள் கல்லறைத் தீவுக்குப் போகப் போகிறோம். சற்று இளைப்பாறவே இங்கு தங்கினோம். நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்றான் பிரபாகரன்.

"குழந்தாய், நான் தினந்தோறும் ஏதாவது கறிகாய்கள், பழங்கள் முதலியவைகளை விற்று ஜீவனம் செய்பவள். ஒரு நாளும் இல்லாமல் இன்று பச்சை திராக்ஷைப் பழ வியாபாரத்தை எடுத்துக் கொண்டேன். காலையிலிருந்து எங்கு சுற்றியும் சோதனை போல ஒரு சேர் கூட விற்கவில்லை. ஒரு கால் இந்த இடத்துக்கு வந்தால் கல்லறைத் தீவுக்குப் போகிறவர்கள் அவசியம் வாங்குவார்கள் என்ற நோக்கத்துடன்தான் இங்கு வந்தேன்!" என்றாள் கிழவி.

"கல்லறைத் தீவுக்குப் போகிறவர்கள் எதற்காகத் திராக்ஷைப் பழம் வாங்க வேண்டும்?" என்று கேட்டான்.

"கல்லறைத் தீவுக்குப் போகிறவர்கள் இதோ உங்கள் எதிரில் தெரியும் பல மைல் விஸ்தீரணமுள்ள இந்தப் பாலைவனத்தைக் கடக்க வேண்டும் அல்லவா? நடு வழியிலே குடிக்க ஒரு சொட்டுத் தண்ணீரும் கிடையாது. ஆதலால் இந்தப் பச்சைக் கொடி திராக்ஷையை வாங்கிக் கொண்டு போனால் நடு வழியில் தாகம் எடுக்கும் பொழுது உதவியாக இருக்கும்" என்று கூறித் திராக்ஷைப் பழத்தின் மேல் மூடியிருந்த இலைகளை எடுத்தாள்.

கூடையிலிருந்த அந்தப் பச்சை திராக்ஷைப் பழங்களைப் பார்த்த பிரபாகரனும், உமாவும் ஆச்சரியமடைந்தார்கள். ஒரு திராக்ஷைப் பழம் ஒரு பெரிய எலுமிச்சம் பழம் அளவு இருந்தது. அதைப் பார்த்த உமாவுக்கும் பிரபாகரனுக்கும் நாக்கில் ஜலம் சொட்டியது. ஆனால் இருவரும் பழத்தைத் தொடக்கூட இல்லை. பேசாமல் அவற்றைப் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். (தொடரும்)

# கணையாழியின் கனவு




கல்கி

## 1. சகுந்தலையின் சுயம்வரம்

கனவுதான்; ஆனாலும் எவ்வளவு இன்பகரமான கனவு!

திரிஜடை அசோக வனத்திலிருந்த சீதையிடம் தான் கண்ட கனவைக் கூறி வந்தாள். சீதை மிகவும் மகிழ்ச்சியுடன் அதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். கடைசியாகத் திரிஜடை "......... இராவணனுடைய மாளிகையிலிருந்து செந்தாமரையாள் ஆயிர முக மூடைய திருவிளக்கைக் கையில் ஏந்திக் கிளம்பி வந்து விபீஷணன் மனையில் புகக் கண்டேன். இத்தருணத்தில் நீ என்னை எழுப்பவே கண் விழித்தேன்" என்று கூறி முடித்தாள். அப்போது சீதை "அம்மா! மறுபடியும் தூங்கு. அந்தக் கனவின் குறையையும் கண்டுவிட்டுச் சொல்லு" என்று வேண்டிக் கொண்டாள்.

[இது என்ன! நீர்கூட இராமாயண ஆராய்ச்சி தொடங்கி விட்டீரா!]

இல்லை, நேயர்களே! தைரியம் கொள்ளுங்கள். உதாரணத்துக்காகவே மேற்படி சம்பவத்தைக் குறிப்பிட்டேன். ரகுராமன் கனவிலிருந்து கண் விழித்ததும் ஏறக்குறைய சீதையைப் போலவே தான் ஆதங்கப்பட்டான். "மறுபடியும் தூங்க மாட்டோமா! அந்தக் கனவின் பாக்கியையும் காண மாட்டோமா!" என்று எண்ணினான்.

[ரகுராமனா! எந்த ரகுராமன்!]

ஓகோ! மன்னிக்க வேண்டும்.

இராமாயணத்தின் கதாநாயகனாகிய ரகுராமன் அல்ல; இவன் கணையாழி கே. பி. ரகுராமன், பி.ஏ.

[கணையாழியா! எந்தக் கணையாழி!]

அட உபத்திரவமே! இதற்கெல்லாம் காரணம் திரு பி. ஸ்ரீ. ஆச்சாரியா அவர்களைத் தவிர வேறு யாருமில்லை. அவர் சென்னைக்கு வந்ததிலிருந்து இந்த மாதிரி புத்தி குழம்பி விட்டது. எதை எடுத்தாலும் இராமாயணம் குறுக்கே வந்து நிற்கிறது.

கணையாழி என்றால் ஹநுமார் இராமரிடமிருந்து வாங்கிச் சீதையிடம் கொண்டு போய்க் கொடுத்த கணையாழி அல்ல. இது, நான் சொல்லப் போகும் கதை நடந்த ஊர். அதற்கு ஏன் "கணையாழி" என்று பெயர் வந்ததென்பது வேறு கதை. அதை மற்றொரு சமயம் சொல்லலாம். இப்போது ரகுராமன் கண்ட ரஸமான கனவைக் கூறுகிறேன்.

சகுந்தலை—இது அவளுடைய உண்மையான பெயரல்ல; மற்றொரு இராமாயணப் பெயர் வந்தால் வாசகர்களால் தாங்க முடியாது என்று பயந்து நான் மாற்றி இட்ட பெயர்—சகுந்தலை ஆற்றங்கரை மரத்தின் அடிக்கிளையில் ஏறி, உல்லாசமாய்ச் சாய்ந்து உட்கார்ந்திருக்கிறாள். அவள் வலது கரத்தில் ஒரு பூமாலை தொங்குகிறது. ரகுராமனும், இன்னும் கணையாழி கிராமத்திலே கதாநாயகர்களாவதற்குத் தகுதி வாய்ந்தவர்களா

ஆனந்த விகடனில் 1934-ம் ஆண்டு வெளியானது.

யிருந்த இளைஞர்கள் அனைவரும் அந்த மரத்தடியில் நின்று—உட்கார்ந்து—நின்று—உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். தெளிவாய்ச் சொன்னால், தோப்புக் கரணம் போட்டுக் கொண்டிருந்தார்கள்!

சிறிது நேரத்துக்குப் பிறகு அவர்கள் ஒவ்வொருவராகக் களைத்துப் போய் உட்காரத் தொடங்கினார்கள். ஒருவர், இருவர், மூவர், நால்வர்......உட்கார்ந்து விட்டார்கள். ரகுராமனும் வைத்தியநாதனும் மட்டுந்தான் பாக்கி. கடைசியில் வைத்தியநாதனும் தோல்வியுற்று உட்கார்ந்தான். அப்போது மரத்தின் மீதிருந்த சகுந்தலை குயிலினும் யாழினும் இனிய குரலில் "ரகுராமனே ஜயித்தார். அவருக்கே நான் மாலையிடுவேன்" என்று சொல்லிக் கொண்டே மரத்திலிருந்து கீழிறங்கலானாள். அப்போது ரகுராமன் அவளுக்குக் கை கொடுத்து இறக்கி விடுவதற்காகப் பாய்ந்து சென்றான். இத்தகைய ரஸமான, ருசிகரமான, நாவிலே ஜலம் ஊறச் செய்யும்படியான இடத்திலேதான் ரகுராமன் கண் விழித்தது. விதானித்துப் பார்த்தான். தான் படுத்திருந்த தாழ்வாரத்தின் தூணையும், கூரை விட்டத்தையும் பிடித்துக் கொண்டு நிற்பதையும் கண்டான். மறுபடியும் தூங்கி, அந்தக் கனவின் குறையையும் காண மாட்டோமாவென்று அவன் உள்ளம் துடிதுடித்தது. பிறகு தூக்கம் வரவேயில்லை. மனம் என்னாதெல்லாம் எண்ணிற்று.

இந்தக் கனவு, முதல் நாள் சாயங்காலம் தானும் மற்றக் கலையாழி இளைஞர்களும் பேசிக் கொண்டிருந்ததின் பயன் என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது.



"முன்னெல்லாம் போல இக்காலத்திலும் சுயம்வரம் ஏன் நடத்தக் கூடாது! நமக்குள் தீரமான காரியம் செய்கிறவன் சகுந்தலையை மணம் புரிவதென்று ஏற்படுத்தி விட்டால்!......" என்றான் கல்யாணசுந்தரம்.

"அப்படி ஏற்படுத்தினால் நீதான் ஜயிப்பாய் என்று எண்ணமோ!" என்றான் இராமமூர்த்தி.

"எனக்கு ஒன்று தெரியும். யார் அதிகமான தோப்புக் கரணம் போட முடியும் என்று பந்தயம் ஏற்படுத்தினால் ரகுராமன் தான் ஜயிப்பான்" என்று வைத்தியநாதன் சொன்னான்.

எல்லாரும் சிரித்தார்கள்.

வைத்தியநாதன் கூறியதில் கொஞ்சம் உண்மையுண்டு. ரகுராமன் சிறு பையனாயிருந்தபோதிலிருந்து பஸ்கி போட்டுப் பழகியவன். முந்நூறு, நானூறு பஸ்கி ஒரே மூச்சில் அவனால் போட முடியும்.

பிறகு அவர்களில் ஒவ்வொருவனும் எந்தெந்தப் பந்தயத்தில் ஜயிப்பான் என்பதைப் பற்றிப் பேச்சு நடந்தது.

இவ்வாறு தன்னைப் பரிகாசம் செய்வதற்காக அவர்கள் சொன்னதையே தான் கனவில் செய்ததாகக் கண்டதை நினைக்க ரகுராமனுக்குச் சிறிது நாணமாயிருந்தது. ஆனாலும் என்ன! மற்றவர்களுக்கு அது தெரியப் போவதில்லை. தன் வரையில், மறுபடியும் கண் விழித்தே எழாமல் அந்தக் கனவு காண்பதிலேயே வாழ்நாள் முழுவதையும் கழித்துவிட மாட்டோமா என்று அவனுக்குத் தோன்றியது.

கலையாழியில் அன்றிரவு ரகுராமனைப் போல் பந்தயத்தில் மற்றவர்களைத் தோற்கடித்துச் சகுந்தலையை மணம் புரிவது சம்பந்தமான கனவு கண்டவர்கள் இன்னும் பலர் உண்டு. வைத்தியநாதன் என்ன கனவு கண்டான் தெரியுமா! அவனும், இராமமூர்த்தி, ரகுராமன் முதலியோரும் வரிசையாக இலைகளுக்கு முன்னால் உட்கார்ந்தார்கள். எதிரில் ஒரு பெரிய அண்டா நிறைய இட்டிலியும் ஒரு ஜாடி நிறைய எண்ணெயும், மிளகாய்ப் பொடி வகையறாக்களும் வைத்திருந்தன. சகுந்தலை அந்த இட்டிலிகளை எடுத்துப் பரிமாற ஆரம்பித்தாள். அருகில் வைத்திருந்த கறுப்புப் பலகையில் அவரவர்கள் தின்ற இட்டிலிகளுக்குக் கணக்குப் போட்டு வந்தாள். மற்றவர்கள் எட்டு, பத்து, பதினைந்து, பதினெட்டாவதில் நின்று விட்டார்கள். ஆனால் வைத்தியநாதனோ மேலே மேலே போய்க் கொண்டிருந்தான். இட்டிலி பரிமாறிக் கொண்டிருந்த — ஒரே ஒரு தந்த வளையல் மட்டும் அணிந்து கொண்டிருந்த — சகுந்தலையின் அழகிய கையை அவன் பார்ப்பான். "இத்தகைய கரத்தினால் இட்டிலி பரிமாறப் படுகையில், அந்த அண்டாவிலுள்ள இட்டிலிகளைச் சாப்பிடுவது தானா ஒரு பிரமாதம்! முடிவென்பதே இல்லாமல் இட்டிலிகளைச் சாப்பிட்டுக் கொண்டேயிருக்கலாமே" என்று அவனுக்குத் தோன்றியது. கடைசியாக, அவன் நாற்பத்தாறாவது இட்டிலி தின்று கொண்டிருக்கையில் சகுந்தலை தனது பவழத்தை வென்ற இதழ்களைத் திறந்து, "இதோ வைத்தியநாதன் தான் வெற்றிபெற்றார். அவருக்கே நான் மாலை சூட்டுவேன்!" என்று கூறி மாலையை எடுத்து வந்தாள். அந்தச் சமயத்தில் — அதிக சந்தோஷத்தினாலோ, என்னமோ—நாற்பத்தாறாவது இட்டிலி வைத்தியநாதனுடைய தொண்டைக்குக் கீழே இறங்காமல் அங்கேயே நின்று விட்டது. திக்குமுக்காடிப் போய் 'பெப்பெப்பே" என்று உளறிக் கொண்டே வைத்தியநாதன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். பனிக்காக அவன் தலையில் கட்டிக் கொண்டிருந்த மப்ளரின் முடிச்சு கழுத்தில் இறுகியிருப்பதை உணர்ந்து அதைத் தளர்த்தி விட்டான்.

இம்மாதிரியே கல்யாணசுந்தரம், ராஜசேகரன், மாசிலாமணி, இராமமூர்த்தி முதலியவர்கள் எல்லாரும் அன்றிரவு வெவ்வேறு விதமான கனவுகள் கண்டார்கள்.

## 2. கல்கத்தா ரங்கநாதம்

கலையாழி, அருணா நதி தீரத்திலிருந்த வளம் பொருந்திய கிராமம். அந்தக் கிராமத்தார் பரம்பரையான புத்திசாலிகள். அவர்கள் தானிய லக்ஷ்மியை இஷ்ட தெய்வமாகக் கொண்டு வழி

பட்டு வந்தார்கள். இந்த வழிபாட்டில் வட்டி. வட்டிக்கு வட்டி கூட்டு வட்டி ஆகிய மந்திரங்களை இடைவிடாமல் உச்சரித்து வந்தார்கள். சக்தி வாய்ந்த இந்த மந்திரங்களுக்குக் கட்டுப் பட்டு தனலக்ஷ்மியும் அக் கிராமவாசிகளுக்கு அடிமை பூண்டு வாழ்ந்து வந்தாள்.

இத்தகைய கிராமத்தில் இளந் தலைமுறையைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் கலாசாலைப் படிப்புள்ளவர்களா யிருந்ததில் ஆச்சரியமில்லை யல்லவா! அந்த ஊரில் இருபது வயதுக்கு மேற்பட்ட இளைஞர்கள் எல்லாரும் அநேகமாக எம். ஏ.க்கள்; எம். ஏ. அல்லாதவர்கள் பி. ஏ.க்கள்; அதுவும் இல்லாதவர்கள் பி. ஏ. படிப்பவர்கள். சாதாரணமாய், கோடை விடுமுறை நாட்களில் இந்த ஊருக்கு யாராவது புதிதாய்ப் போனால், சீமையில் கேம்பிரிட்ஜ் ஆக்ஸ்போர்டு என்றெல்லாம் சொல்கிறார்களே, இந்த ஊர் அவைகளில் ஒன்றோ என்று சந்தேகிக்கும்படி இருக்கும்.

இத்தகைய கணையாழி கிராமத்தில் இப்போது வசித்து வந்த பழைய தலைமுறையைச் சேர்ந்தவர்களில் கல்கத்தா ரங்கநாதம் என்று ஒருவர் இருந்தார். கணையாழியில் பிறந்தும் பாங்கர் தொழில் செய்யாத அபூர்வ மனிதர்களில் இவர் ஒருவர். அக்கவுண்டண்ட் ஜெனரல் உத்தியோகத்திலிருந்து பென்ஷன் பெற்றுச் சமீபத்தில் விலகியவர். வெகு காலம் கல்கத்தாவில் வசித்தபடியால் இவருக்குக் கல்கத்தா ரங்கநாதம் என்று பெயர் வந்தது. உத்தியோகத்திலிருந்த காலத்தில் இவர் தமது குடும்பத்துடன் அடிக்கடி கணையாழிக்கு வந்து சிலகாலம் வசித்து விட்டுப் போவதுண்டு. ஆனால் நான்கு வருஷங்களுக்கு முன்பு அவருடைய அருமை மனைவியும், மூத்த புதல்வனும் ஏறக்குறைய ஒரே சமயத்தில் காலஞ் சென்ற பிறகு, கல்கத்தா ஜாகையைக் கலைத்துத் தமது புதல்வி சகுந்தலையை ஸ்ரீ ரவீந்திரநாதரின் சாந்தி நிகேதனில் விட்டு விட்டுத் தாம் கணையாழிக்கே வந்து விட்டார். இங்கு ஒரு சமையற்காரனை வைத்துக் கொண்டு ஏகாங்கியாய் வாழ்ந்து வந்தார். ஐந்தாறு பீரோக்கள் நிரம்ப அடுக்கி வைத்திருந்த புத்தகங்கள்தான் அவருக்குத் துணையாய் இருந்து வந்தன.




சில சமயம் கணையாழி இளைஞர்களில் சிலர் அவர் வீட்டுக்குப் போய் அவருடன் பேசிக் கொண்டிருப்பதுண்டு. அதாவது, பெரும்பாலும் அவர்கள் பேசிக் கொண்டிருப்பார்கள்; அவர் கேட்டுக் கொண்டிருப்பார். ஆனால் சிற்சில சமயம் அவர் உண்மையில் தாங்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிறாரா, அல்லது கேட்டுக் கொண்டிருப்பது போல் பாசாங்கு செய்கிறாரா என்று அவர்களுக்குச் சந்தேகம் உண்டாவதுண்டு.

உதாரணமாக, அவர்கள் ஒரு நாள் கிரிக்கெட்டைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கையில், சி. கே. நாயுடு எந்த ஊர்க்காரர் என்று கேள்வி பிறந்தது. அவர் தமிழ் நாட்டில் பிறந்தவர்தான் என்று ஒருவன் சொன்னான். "இல்லை, இல்லை. அவர் பங்களூர்க்காரர்" என்றான் மற்றொருவன். "என்ன, உங்களுக்குத் தெரியுமா சி. கே. நாயுடு எந்த ஊர்க்காரர் என்று!" என்பதாக ஒருவன் ரங்கநாதம் அவர்களைப் பார்த்துக் கேட்டான். அப்போது அவர் அரை நிமிஷம் திகைத்திருந்து விட்டு, "என்ன, சரோஜினி நாயுடுதானே! வங்காளி ஸ்திரீதான். சந்தேகமென்ன!" என்றார்.

இத்தகைய மெய்மறந்த பேர்வழி ஒரு நாள் கணையாழி இளைஞர்களிடம் மிகவும் உற்சாகமாகவும் பரபரப்புடனும் வார்த்தைகளைக் கொட்டிப் பேசத்தொடங்கிய போது அவர்களுக்குப் பெரிதும் ஆச்சரியமாய்ப் போயிற்று. முதலில் அவர் கணையாழி ஸ்டேஷனில் எந்தெந்த ரயில் எவ்வெப்போது வருகிறதென்பதை மிக நுட்பமாய் விசாரித்தார். பிறகு கணையாழியைச் சுற்றி மோட்டார் போகக் கூடிய நல்ல சாலைகள் என்னென்ன இருக்கின்றனவென்று கேட்டார். அப்புறம், அந்த இளைஞர்கள் யாருக்காவது கலியாணம் ஆகியிருக்கிறதாவென்று வினவினார். ஒருவரும் ஆகவில்லையென்றார்கள். ஸ்ரீதரன் என்பவனுக்கு மட்டும் சமீபத்தில் கலியாணம் நிச்சயமாகியிருக்கிறது, மணப் பெண்ணுக்கு வயது பதினொன்று என்று அறிந்த போது அவரால் சிரிப்பைத் தாங்கவே முடியவில்லை. "இந்தக் காலத்திலேகூடவா இத்தகைய பொம்மைக் கலியாணம் நடக்கின்றன!" என்று ஆச்சரியப் பட்டார். கலியாணத்தைப் பற்றிய பேச்சு வளர்ந்தது. "பெண்களுக்கு வயது வந்த பிறகு அவர்களே கணவன்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி விட்டு விட வேண்டும்" என்னும் தமது கொள்கையைத் தாங்கி ஸ்ரீ ரங்கநாதம் பேசினார்.

பிறகு, அந்த ஊரில் படித்த ஸ்திரீகள் யாராவது இருக்கிறார்களா என்றும், மாதர் கூடிப் பொழுது போக்குவதற்குரிய சங்கம் ஏதாவது இருக்கிறதா என்றும், இன்னும் என்னவெல்லாமோ விசாரித்தார். ஒரு நாளும் இல்லாத புதுமையாக, கணையாழியின் சமூக வாழ்க்கையில் கிழவர் இவ்வளவு சிரத்தை காட்டியதேன் என்பது கடைசியாகத் தெரிய வந்தது. அவருடைய புதல்விக்கு விசுவபாரதியில் கல்விப் பயிற்சி முடிந்து விட்டதென்றும், அவள் மறுநாள் காலை ரயிலில் கணையாழிக்கு வருகிறாளென்றும், இரண்டு, மூன்று மாதம் அங்கு இருப்பாளென்றும் அறிவித்தார்.

தங்களுடைய வாழ்க்கையிலேயே புதுமையான அநுபவம் ஒன்று ஏற்படப் போகிறதென்ற உணர்ச்சியுடன் அன்றிரவு கணையாழி இளைஞர்கள் படுக்கச் சென்றார்கள்.

## 3. புதுமைப் பெண் வருகை

மறு நாள் காலையில் ரயில்வே ஸ்டேஷனில் அத்தனை பேருக்கும் சேர்ந்தாற் போல் என்ன காரியந்தான் இருக்கும்! ரகுராமன் டிக்கட் கொடுக்கும் குமாஸ்தாவின் அறையில் உட்கார்ந்து அவருடன் வெகு சுவாரஸ்யமாய் ஏதோ பேசிக் கொண்டிருந்தான். ஆனால் அவனுடைய கண்

அடிக்கடி கடிகாரத்தின் முள்ளைப் பார்த்துக் கொண்டிருந்தது.

வைத்தியநாதன், போர்ட்டர் சின்னப்பனுடன் ஏதோ ரஸமான சம்பாஷணையில் ஆழ்ந்திருந்தான். ஸ்ரீதரன், ஸ்டேஷன் பிளாட்பாரத்தைச் சென்னைக் கடற்கரையாகப் பாவித்து உலாவிக் கொண்டிருந்தான். கல்யாணசுந்தரம், எடை போடும் இயந்திரத்தின் மேல் உட்கார்ந்து நேற்று வந்த பத்திரிகையின் விளம்பரப் பகுதியை ஏகாக்கிர சிந்தையுடன் படித்துக் கொண்டிருந்தான்.

வண்டி வந்து நின்றது. ரங்கநாதம் ஸ்திரீகளின் பிரத்தியேக வண்டியை நோக்கி விரைவாய்ச் சென்றார். அவர் அவ்வளவு வேகமாக நடந்ததை ரகுராமன் அதற்கு முன் பார்த்ததே யில்லை. அடுத்த கணம் ஸ்திரீகளின் வண்டிக்குள்ளிருந்து ஒரு சந்திர பிம்பம் வெளியே தோன்றுவதை அவன் கண்டான். இதென்ன! சந்திர பிம்பத்தின் மத்தியில் திடீரென்று முத்து வரிசை தோன்றுகிறது! அடேடே! ஒரு பெண்ணின் முகமா அது! சந்திர பிம்பம் வாயைத் திறந்து "அப்பா! இதோ இருக்கிறேன்" என்று சொன்னதைக் கேட்ட பிறகுதான் ரகுராமனுக்கு நிச்சயமாயிற்று. அவனை யறியாமல் அவனுடைய கால்கள் அந்தப் பக்கம் நோக்கி நடந்தன.

சாமான்கள் இறக்கப்பட்டு, சகுந்தலை வண்டியிலிருந்து கீழே இறங்குவதற்குள், கணையாழியில் கதாநாயகர்களாவதற்குத் தகுதி வாய்ந்த அவ்வளவு இளைஞர்களும் அங்கே சூழ்ந்து விட்டார்கள். போர்ட்டர் சின்னப்பன் தனது உத்தியோக வாழ்க்கையில் என்றும் காணாத அதிசயத்தை அன்று கண்டான். சாதாரணமாய் ஒரு சின்னக் கைப்பெட்டியைத் தூக்குவதற்குக்கூடத் தன்னைத் தேடிப் பிடிக்கும் வழக்கமுடைய சின்ன எசமானர்கள் எல்லாம் தமக்குத் தலை பெட்டியோ, படுக்கையோ, வேறு சாமானோ எடுத்துக்கொண்டு போவதை அவன் அன்று பார்த்தான்.

சாமான்கள் ஏற்றப்பட்டு, ரங்கநாதமும் சகுந்தலையும் வண்டியில் ஏறி உட்கார்ந்ததும், "சரி, சாயங்காலம் வருகிறோம். மற்ற விஷயங்கள் பேசிக் கொள்ளலாம்" என்றான் வைத்தியநாதன்.

"சரி, சாயங்காலம் வாருங்கள்" என்று ரங்கநாதமும் சொன்னார். ஆனால் வழியில் "மற்ற விஷயங்கள் என்ன!" என்று சகுந்தலை கேட்ட போது அவர் தமது வழுக்கை மண்டையைச் சொறியத் தொடங்கினார்.

—அன்றைய தினம் சாயங்காலமானது, மத்தியானம் இரண்டு மணிக்கே வந்து விட்டதாகத் தோன்றியது. மணி மூன்று அடிப்பதற்குள் ரகுராமன், வைத்தியநாதன் முதலான ஏழெட்டுப் பேரும் ரங்கநாதம் அவர்களின் வீட்டு ஹாலில் கூடி விட்டார்கள். ரங்கநாதமும் அவர்களை எப்போதையும் விட அதிக உற்சாகத்துடன் வரவேற்றார். ஒருநாளும் இல்லாத திருநாளாக அவர்களுக்கெல்லாம் காப்பி கொண்டு வரும்படி சமையற்காரனுக்கு உத்தரவிட்டார்.

காப்பியுடன் சகுந்தலையும் வந்தாள். அவள் உட்கார்ந்ததும், "நேற்றுச் சொன்னேனல்லவா! என்னுடைய பெண் இவள்தான்" என்றார்.

"காலையிலேயே தெரிந்து கொண்டோம்" என்றான் கல்யாண சுந்தரம்.

"காலையில் நீங்களாக அல்லவா தெரிந்து கொண்டீர்கள்! இப்போது நான் முறைப்படி அறிமுகப்படுத்தி வைக்கிறேன்" என்றார்.

"எனக்கு இவர்களை இன்னார் என்று அறிமுகப் படுத்தவில்லையே, அப்பா!" என்றாள் சகுந்தலை.

"ஆமாம். அதைத்தான் இப்போது செய்யப் போகிறேன். இதோ இவர்தான் வைத்தியநாதன்" என்றதும், எல்லாரும் 'கொல்'லென்று சிரித்தார்கள். ஏனென்றால், அவரால் சுட்டிக் காட்டப்பட்டவன் பெயர் கல்யாண சுந்தரம்.

"இல்லை, என் பெயர் கல்யாண சுந்தரம். அதோ அவர் பெயர் வைத்தியநாதன்" என்றான் கல்யாண சுந்தரம்.

"வைத்தியநாதன், எம். ஏ." என்றான் அவ்வாறு சுட்டிக் காட்டப்பட்டவன். "எம். ஏ." என்று பரிகாசமாய்ச் சேர்த்ததாக அவனுடைய எண்ணம். சமயத்தில் அதையும் போட்டு வைத்து விடலாமென்ற உத்தேசமும் உண்டு.

"அப்பா எப்போதும் இப்படித்தான். அவருக்குப் பெயர், ஊர் ஒன்றும் ஞாபகம் இருப்பதில்லை. ஏன், அப்பா! என் பெயர் உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா!" என்று கேட்டாள்.

உடனே ஒரு பலத்த அதிர்வேட்டுச் சிரிப்புக் கிளம்பிற்று. அதில் ரங்கநாதமும், சமையற்காரனும் கூடக் கலந்து கொண்டார்கள். ஆனால் ரகுராமன் மட்டும் சிரிக்கவில்லை. அரை நாழிகையாக அவன் வேறொரு யோசனையில் ஆழ்ந்திருந்தான். சகுந்தலையிடம் ஏதாவது பேசவேண்டுமென்பது அவனுக்கு எண்ணம். ஆனால் என்ன பேசுவது!......

கடைசியாக வாயைத் திறந்து, "கல்கத்தாவிலே என்ன விசேஷம்!" என்று கேட்டு விட்டான். இந்த மூன்று வார்த்தைகளை வெளியே கொண்டு வருவதற்குள் அவனுக்கு மூச்சு முட்டி விடும் போலிருந்தது.

"கல்கத்தாவிலா! எவ்வளவோ விசேஷம்!" என்றாள் சகுந்தலை. அப்போது தேசமெங்கும் சுதந்திர இயக்கம் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. கல்கத்தாவில் வெகு மும்முரமா யிருந்தது. அது சம்பந்தமான நிகழ்ச்சிகளைச் சகுந்தலை கூறலானாள். வாயில் ஈ புகுந்தது தெரியவில்லை என்பார்களே, அந்தமாதிரி எல்லாரும் அவ்விவரங்களைக் கேட்கலாயினர்.

சாயங்காலம் அவர்கள் வீடு திரும்பிச் சென்ற போது "பாரதியார் புதுமைப் பெண் என்று பாடியிருக்கிறாரே, அவள் இவள்தான் போலிருக்கிறது" என்றான் கல்யாண சுந்தரம். அதற்குப் பிறகுதான் முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்ட சம்பாஷணை அவர்களுக்குள் நடந்தது. அன்றிரவே ரகுராமன், வைத்தியநாதன் முதலியோர் இன்பக் கனவுகள் கண்டார்கள்.

இரவு படுக்கைக்குப் போகுமுன் சகுந்தலை ரங்கநாதம் அவர்களிடம், "அப்பா! இந்த ஊர்ப் பிள்ளைகள் கொஞ்சம் பைத்தியமா யிருப்பார்கள் போலிருக்கிறதே!" என்று சொன்னாள்.

"என்ன! பைத்தியம் என்றா சொன்னாய்!" என்றார் ரங்கநாதம்.

"ஆமாம்."

"ரொம்ப சந்தோஷம்."

"அதில் சந்தோஷம் என்ன அப்பா!" என்று சகுந்தலை சிரித்துக் கொண்டே கேட்டாள்.

"இல்லை. நான் அவர்களை அசடு என்று நினைத்தேன். நீ பைத்தியம் என்கிறாயே!"

சகுந்தலை இன்னும் அதிகமாகச் சிரித்து விட்டு, "அதென்ன அப்பா! அசட்டை விடப் பைத்தியம் மேலா!" என்று கேட்டாள்.

"ஆமாம்; அசடுகளினால் ஒன்றும் செய்ய முடியாது; பைத்தியங்களினால் ஏதாவது காரியம் செய்ய முடியும்."

"அவர்களைக் கொண்டு கொஞ்சம் காரியம் செய்விக்கலாமென்றுதான் நினைக்கிறேன்! பார்க்கலாம்" என்றாள் சகுந்தலை.

அவளுடைய நோக்கம் எவ்வளவு தூரம் நிறைவேறிய தென்பதைக் கதையின் பிற்பகுதியில் பார்ப்போம்.

(தொடரும்)

# தெம்பூட்டுகிறது

# காலையில் உபயோகித்தால்!

# மென்மை உணர்ச்சி

# மணிக்கணக்காய் மாறாது!




காஷ்மீர் பொக்கே டால்க் எவ்வளவு தெம்பூட்டுகிறது! அந்த மென்மை உணர்ச்சி மணிக் கணக்காக நீடிக் கிறது! ஈரத்தை உறிஞ்சி, அரிப்பும் புண் ணும் வராமல் தடுக்கிறது. குளுமை மணம், புத்துணர்ச்சி அளிக்கிறது.

கால்கேட் 1806 முதல்
தரத்துக்குப் பெயர்போனது

## காஷ்மீர் பொக்கே டால்கம் பவுடர்

ஆண்கள் விரும்பும் நறுமணம்

CBG/13



## உல்லாச சவாரிக்கு உகந்த பைசைக்கிள்

மட்டற்ற மகிழ்ச்சியும், உல்லாச உடற் பயிற்சியும் பெற ஒரு ஹெர்குலிஸ்-இந்தியா'வில் சவாரி செய்யுங்கள்.



# ஹெர்குலிஸ்-இந்தியா

நம்பகமான உழைப்பிற்கு



இந்தியாவில் தயாரிப்பாளர்கள்
டி.ஐ.சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்.
அம்பத்தூர் . . . , மதராஸ்.

எல்லா பிரதான வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

---

## டால்டா சமையல் புத்தகத்தில்

300 ருசிமிக்க தின்பண்டங்களின் செய்முறைக் குறிப்புகள் தரப்பட்டுள்ளன.

இப்புத்தகம் தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, வங்காளி என்ற பாஷைகளில் கிடைக்கிறது. இதில் 300 செய்முறைக் குறிப்புகள், பல படங்கள், சமையல், ஊட்டம் இவைகளைப் பற்றிய குறிப்புகள் முதலியவை அடங்கியுள்ளன.

**விலை ரூபாய் இரண்டுதான்**
தபால் செலவு அணா 12 தனி.

உங்கள் பிரதிக்கு இன்றே பணம் அனுப்புங்கள்:

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**
தபால்பெட்டி நெ. 353, பம்பாய் 1




இதில் வட இந்தியா, குஜராத், மஹாராஷ்டிரா, தென் இந்தியா, வங்காளம், ஐரோப்பா முதலான பிரதேசங்களைச் சேர்ந்த பல தின்பண்டங்களின் செய்முறைக் குறிப்புகள் உள்ளன.

HVM. 204-X25 TM

# 43. கோட்டை தெரிகிறது!

நடுப்பகலில் எல்லோரும் இறங்க வேண்டிய ஸ்டேஷனில் இறங்கி விட்டார்கள். ஸ்டேஷனில் ஒரு வாடகை வண்டியைக் கூடக் காணோம். கோகிலா எத்தனைதான் ஏழையாகி விட்ட பொழுதிலும் தகிக்கும் மத்தியான வெய்யிலில் அவளால் எப்படி நான்கைந்து மைல்கள் நடக்க முடியும்? ராதாவுக்கு அது பெருங் கவலையாக இருந்தது. கோகிலா உற்சாகத்துடன், "வெகு தூரம் நடந்து எனக்குப் பழக்கமிருக்கிறது. நீ கவலைப்படாதே!" என்றாள்.

"அது சரி! ஆனால் குழந்தை எப்படி நடப்பான்?" என்று கேட்டான் ராதா.

உண்மைதானே? நடுத்தர வகுப்பின் நடைமுறை வாழ்க்கையைப் பார்த்தால் அது எப்படி எப்படியெல்லாம் நாசூக்கான வாழ்க்கை நடத்த விரும்புகிறது என்பது தெரிய வரும். பெண்களை வேலைக்காரிகளாகவும் கூலி வேலை செய்து பிழைப்பவர்களாகவும் கருதிச் சக்கையாக வேலை வாங்காமல் இருப்பது நல்லதுதான். அதுதான் மனிதத் தன்மையுங்கூட. ஆனால் அந்த மனிதத் தன்மையைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, அவர்கள் தங்கள் குழந்தையை இடுப்பில் தூக்கிக் கொண்டு அரை பர்லாங்கு தூரம் நடக்க அஞ்சினால், அல்லது பத்துப் பதினைந்து சேர் நிறையுள்ள பொருளைத் தூக்கிக் கொண்டு கூப்பிடு தூரத்தில் உள்ள கிராமத்துக்கு நடந்து செல்லத் திணறினால் என்ன ஆவது? இத்தகைய நிலைக்குப் பெண்கள் தங்களை இலக்காக்கிக் கொண்டால் உண்மையில் அவர்களுக்கு ஏதாவது பயன் உண்டா?—இது தீர யோசித்து முடிவுக்கு வர வேண்டிய விஷயம்.

கிராமத்துப் பெண்களிடையே பெண்மையின் பெருமையையும் புத்துணர்ச்சியையும் புகுத்தப் போகிறோம் என்று சொல்லிக் கொண்டு பிரசாரம் செய்யப் புறப்படும் மாதர் தலைவிகள் ஒரு மைல் தூரம் நடப்பதற்குள்ளாக நான்கு இடங்களில் அக்கடா என்று உட்கார்ந்து விட்டால் அப்புறம் அவர்கள் பிரயாசை என்ன ஆவது? நேரத்தை மிச்சப்படுத்துகிறோம் என்று கூறிக் கார் சவாரி செய்வதைக் காட்டிலும் அவர்கள் தங்கள் தொண்டுக்குப் பெருமை தேடிக் கொள்வதுதான் உகந்தது; உயர்ந்ததுங்கூட. அதனால் அவர்கள் கிராமத்து மாதர்களிடையே புத்துணர்வையும் ஆர்வத்தையும் உண்டுபண்ணுவதற்கு முன்னால் தங்கள் உடலையும் உள்ளத்தையும் வலுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

"குழந்தை எப்படி நடந்து வருவான்?" என்று ராதா கேட்டதும் கோகிலாவின் மனத்தில் இத்தகைய சிந்தனைதான் ஓடியது. அந்தச் சிந்தனை அவள் மனத்துக்குப் பலத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்தது. உடனே பியூஷின் கையைப் பிடித்துக் கொண்டு எல்லோருக்கும் முன்னால் நடக்கத் தயாராகி விட்டாள்.

அதைக் கண்ணுற்ற ராதா பெட்டியைத் தன் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு நடந்தான். வத்ஸராஜும் மற்றப் பொருள்களை எடுத்துக் கொண்டு கிராமத்துப் பாதையை நோக்கி நடக்கலானான்.

இத்தகைய ரெயில்வே நிலையங்களை நிர்மாணித்தவர்கள், அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளும் பிரயாணிகளை எப்படியெப்படியெல்லாம் கஷ்டப்படுத்த முடியும் என்னும் விஷயத்தில் தங்கள் மேதையை அதிகம் செலவிடுகிறார்களோ, என்னவோ? இல்லாவிட்டால் சில ஸ்டேஷன்களுக்கு அருகில் பல மைல்கள் சுற்றளவுக்குக் கிராமங்களே இல்லாமல் இருக்குமா?

கோகிலா ஆரம்பத்தில் வேகமாகத்தான் நடந்தாள். ஆனால் சிறிது நேரத்துக்குப்




பின் தாமாகவே அவள் கால்கள் வேகம் குறைந்து விட்டன. பியூஷுக்கும் சாலையில் நடந்து பழக்கம் இல்லாததனால், நடந்து வருவதற்கு முரண்டு பிடித்தான். அதற்காக அவன் சொன்ன சாக்குப் போக்குகள் பிரமாதமானவை. "அம்மா, காலில் தூசி படிகிறது!" என்பான் ஒரு சமயம். "செருப்புக் கடிக்கிறது, அம்மா!" என்பான் இன்னொரு சமயம். "வழியில் கல்லும் முள்ளுமாக இருக்கிறதே!" என்பான். "மரத்தில் குரங்கு உட்கார்ந்திருக்கிறதே!" என்பான். "ஏன், அம்மா! ஓநாய் வந்து தூக்கிக் கொண்டு போய் விட்டால்? நரி வந்து கண்களில் மண்ணைத் தூவினால்......?" என்று தனக்குத் தோன்றிய கேள்விகளையெல்லாம் கேட்

பான். தன்னால் நடக்க முடியவில்லை என்பதற்குச் சுற்றி வளைத்து எத்தனை காரணங்கள் சொல்லலாமோ. அத்தனை காரணங்களையும் அவன் சொல்லித் தீர்த்து விட்டான்.

ஆரோக்கியசாலியான குழந்தையை இடுப்பில் தூக்கிக் கொண்டு தன்னால் நெடுந்தூரம் நடக்க முடியும் என்று கோகிலாவுக்குத் தோன்றவில்லை. அதனால், ராதாவையும் வத்ஸராஜையும் பார்த்து, ''கொஞ்சம் உட்கார்ந்து இளைப்பாறி விட்டுப் போவோமே! பீயூஷ் பிடிவாதம் பிடிக்கிறான் !'' என்றாள்.

''வா, தம்பி! நான் தூக்கிக் கொண்டு வருகிறேன் !'' என்றான் வத்ஸராஜ்.

யாராவது தூக்கிக் கொண்டு வருகிறேன் என்று சொல்லி விட்டால் குழந்தைகளுக்கு அது ஒரு பெரிய விளையாட்டாகவே தோன்றுகிறது. பீயூஷ் உடனே சரியென்று சம்மதித்து விட்டான். வத்ஸராஜ் கையிலிருந்த மூட்டை முடிச்சுகளைக் கீழே வைத்துவிட்டுப் பீயூஷைத் தூக்கித் தன் தோளில் உட்கார வைத்துக் கொண்டான். பிறகு கீழே வைத்திருந்த பொருள்களை எடுத்துக் கொண்டு திருப்பவும் நடக்கலானான்.

அதைக் கண்ட கோகிலாவுக்கு மிகவும் வெட்கமாகப் போய் விட்டது. அவள் பீயூஷைக் கீழே இறங்கி விடுமாறு எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனால் அவனா இறங்குபவன்? முடியாது என்று தீர்மானமாக மறுத்து விட்டான். வத்ஸராஜின் உயர்ந்த தோள்மீது உட்கார இடம் கிடைத்து விடவே, அவனுக்கு ஏற்பட்ட ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. வியப்புடன் விழிகளை உருட்டி உருட்டி இங்கும் அங்கும் வேடிக்கை பார்க்கலானான்.

''தம்பி! என் தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு உட்காரு! தெரிந்ததா ?'' என்று பீயூஷை வத்ஸராஜ் எச்சரித்தான்.

இப்படி வழி கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து ஊரும் கிட்டிக் கொண்டிருந்தது. அடிக்கடி கோகிலா பெட்டியைத் தன்னிடம் தருமாறு ராதாவைக் கேட்டாள். மூட்டை முடிச்சுகளைத் தான் எடுத்து வருவதாக வத்ஸராஜிடமும் சொன்னாள். ஆனால் அந்தத் தம்பதிகள் பட்டிக்காட்டைச் சேர்ந்தவர்களானாலும் அவ்வளவு முட்டாள்கள் அல்லவே! நாகரிகமாக வளர்ந்த அவளிடம் சுமையைக் கொடுத்துச் சிரமத்துக்கு உள்ளாக்குவார்களா? நகரத்தில் உள்ளவர்கள் நாசூக்கானவர்கள், அவர்களது அந்த மேன்மைக்குக் குறைவு ஏற்படுத்தக் கூடாது என்னும் விஷயத்தில் கிராமத்தார்கள் மிகவும் கவனம் செலுத்துகிறார்கள். உடல் உழைப்பு இல்லாமல் இருப்பதில் ஒரு தனிப் பெருமை இருப்பதாக நகரத்தார்களைப் பொறுத்த வரையில் கிராமத்தார்கள் நம்புகிறார்கள். அதனால்தான் அவர்கள் நகரத்தாரின் கண்களில் எந்த வேலையையும் அதிகமாகக் காட்டுவதில்லை.

இத்தகைய கிராமத்தார்களுடன் பயணம் போகும்படியான சந்தர்ப்பம் வாய்த்து விட்டால், நகரத்தாரின் பெருமைக்கும் மேன்மைக்கும் எத்தனை தடவை, அசக்தி, பலமின்மை என்னும் பொருள் கொள்ள நேருகிறது என்பதைப் புத்தியுள்ள நகரத்தார்கள் பல சந்தர்ப்பங்களில் உணர்வார்கள். அத்தகைய பெருமையைக் காட்டிலும் உடல் வலிவும் உள்ள வலிவும்தான் தேவை என்றும் நிர்மாணிப்பார்கள்.

''அம்மா, அதோ கோட்டை தெரிகிறதே!'' என்று அமரன் உரக்கக் கூவினான். அவனுக்கு ஊரைக் கண்டு விட்டதில் அவ்வளவு ஆனந்தம்!

வத்ஸராஜின் பார்வையும் ராதாவின் பார்வையும் கிராமத்தையே நோக்கியவண்ணம் இருந்தன. அரை மைலுக்கு இப்பாலிருந்தே கிராமம் கண்களுக்குப் புலப்படத் தொடங்கி யிருந்தது. சொந்த ஊரைப் பார்த்து அமரனுக்கு அதிக ஆனந்தம் ஏற்பட்டிருக்குமா அல்லது அந்தத் தம்பதிகளுக்கா என்று கேட்டால், அதற்கான பரிசைத் தம்பதிகள் தான் பெறுவார்கள். சொந்த ஊர் என்றாலே ஒரு தனிக் கவர்ச்சி தான்! அதில் உள்ள இன்பத்தை யாராலும் சொல்லி மாளாது.

அதோ! அவர்கள் ஊரும் வந்து விட்டது.

வீட்டு வாசலை அவர்கள் அடைவதற்குள்ளாகவே, எத்தனையோ பேர் சூழ்ந்து கொண்டு விட்டனர். எல்லோரும் மகிழ்ச்சியுடன் நலம் விசாரித்தனர். வத்ஸராஜின் வீட்டுக் கெதிரில் ஒரு சின்னத் திருவிழாக் கூட்டமே கூடிவிட்டது என்று சொன்னால் மிகையாகாது.

தண்டனை முடிந்த பின் எல்லோரும் குற்றவாளியின் குற்றத்தை மறந்து விடுகிறார்கள். நாளடைவில் அவனிடம் அவர்களுக்கு அநுதாபமே எஞ்சி நிற்கிறது. இதனால் இத்தனை வருஷங்கள் கழித்துத் திரும்பி வந்த வத்ஸராஜைப் பார்த்து எல்லாருக்குமே எல்லையற்ற மகிழ்ச்சி தான் உண்டாயிற்று.

கிராமத்திலேயே மிகுந்த மரியாதைக்கு உகந்த பெரிய குடும்பத்தின் வாரிசு அல்லவா அவன்? அவனைப் பார்த்ததுமே கடந்த காலத்து இன்ப நினைவுகள் எல்லோருடைய மனத்தையும் நிறைத்து விட்டன. அப்புறம் அவனைப் பற்றிய குறைகளைக் கண்டு பிடிப்பதற்கு மனத்தில் இடம் ஏது?

வீட்டைச் சரி செய்து சுத்தம் செய்யும் விஷயத்தில் அவனுடைய அண்டை அயலார்கள் அவனுக்கு மிகவும் உதவியாயிருந்தனர். இருந்தாலும் வத்ஸராஜுடன் ஒரு பெண்மணியையும் பாலகனையும் பார்த்து இவ் விருவரும் யாராயிருக்கலாம் என்ற கேள்வி அவர்களுடைய மனத்தில் முளைத்தது. வத்ஸராஜின் உறவினர்களில் ஒருவராயிருக்கலாமோ என்று எண்ணினால், கோகிலாவின் நடை, உடை, பாவனையைக்



கொண்டு அப்படியிருக்க முடியும் என்று அவர்களால் தீர்மானிக்க முடியவில்லை. கோகிலா உடை உடுத்தியிருந்த முறையும், நடந்து கொண்ட விதமுமே அவளை அந்தக் கும்பலிலிருந்து தனியாக இனம் காட்டிக் கொடுத்து விட்டன. புதுமையில் மிளிர்ந்த அவளைப் பார்த்துக் கிராமத்தார்களுடைய மனத்தில் இல்லாத பல தர்க்க விதர்க்கங்கள் எழுந்தன. ராதா அவளை அடிக்கொரு தடவை "அண்ணி, அண்ணி!" என்று அழைத்தாளே, அதைக் கொண்டாவது அவர்களுடைய மனத்துச் சம்சயம் தீர்ந்திருக்கலாம். ஆனால் தீரவில்லை. அதனால் அவர்கள் சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் கறட்டோணானை விழுங்கியவன் கதையாக மனத்துள் குமைந்து சந்தேகத்துக்கு இருதயத்தில் இடம் அளித்திருந்தனர். பெண் உள்ளம் படைத்த ராதா அதைப் போக்க எத்தனையோ முயன்றாள். வெள்ளையுள்ளம் படைத்த வத்ஸராஜ் அப்படி அவர்களுக்குச் சந்தேகம் எழக் கூடும் என்ற சிந்தனையே இல்லாமல் தன் வேலையைக் கவனிக்கலானான்.

வத்ஸராஜ் வந்ததும் வீட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கையும் இண்டு இடுக்கையும் விடாமல் பார்வையிட்டான். அவனுடைய வெள்ளிப் பூண் போட்ட வாள் ஒரு புறம் சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய சட்டி, வேல், வில், அம்பு ஆகியவை அதன் அதன் இடத்தில் அப்படியப்படியே வைக்கப்பட்டிருந்தன. ஒரு பிறையில் அவனுடைய தோல் பை வைத்திருந்தது. அதையும் அவன் பார்த்தான். ஒவ்வொன்றையும் அவன் தன் கைகளால் தூக்கித் தூக்கிப் பார்த்து விட்டு வைத்தான். தன் பழைய தோழர்களாகிய அவற்றைக் கண்டு அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று.

பிறகு மாட்டுக் கொட்டகைக்குச் சென்று தன் எருமையையும் இரு பசுக்களையும் பார்த்தான். அவை அவனுக்குச் சொந்தமானவை. அவன் வீட்டில் இல்லாத அந்தக் காலத்தில் அண்டை அயலார்கள் அக்கறையுடன் பார்த்துக் கொண்டவை. அவன் அவற்றின் முதுகில் ஒரு 'சொட்டு' வைத்துத் தடவிக் கொடுத்தான். அவை மகிழ்ச்சியுற்றுத் தலையையும் காதுகளையும் அசைத்தன. அருகிலேயே இன்னொரு புறத்தில் இரு இளங் காளைக் கன்றுகள் நின்று கொண்டிருந்தன. அவற்றின் அருகில் சென்று அவிழ்த்தான். ஒரு பிடி வைக்கோலை எடுத்து அவற்றின் வாய்க்கு அருகே கொண்டு போனான். அவிழ்த்து விட்ட மகிழ்ச்சியில் அவை காலைத் தூக்கிக் கொண்டு துள்ளிக் குதிக்கத் தொடங்கின. கட்டியிருந்த மாடுகள் அத்தனையும் அவனையே பார்க்கலாயின. அவன் ஒவ்வொன்றின் அருகிலும் சென்று அன்புடன் தடவிக் கொடுத்துச் சொரிந்து கொடுத்துப் பேசலானான். பிறகு ஒரு பசுவின் அருகில் சென்று, அதன் கழுத்தைத் தன் இரு கைகளாலும் கட்டிக்

கொண்டு, "நான் இங்கிருந்து போகும் பொழுது நீ ரொம்பச் சின்னவளா யிருந்தாய், இல்லையா ?" என்று கேட்டான்.

அவன் பேச்சைக் கேட்ட அந்தப் பசுவுக்கு அப்பொழுது மயிர் சிலிர்த்தது.

"நீ என் கண்ணே, இல்லையோ ! ஆமாம், இத்தனை நாளும் நீ பசியினால் ரொம்ப வாடிப் போய் விட்டாய் ! என்ன நான் சொல்வது சரிதானே ?" என்று கேட்டான் வத்ஸராஜ்.

மனிதன் பேசும் மொழியை மிருகங்கள் புரிந்து கொள்கின்றனவா, இல்லையா என்பதை அவற்றுக்குப் பேசும் திறன் இல்லாததனால் சரியாகச் சொல்ல முடியாது. ஆனால் மனிதனின் விழிகளைப் போலவே, மிருகங்களின் விழிகளும் உணர்ச்சிகளை நன்கு வெளியிடக்கூடும் திறன் பெற்றவை என்பதை மிருகங்களை வளர்ப்பதில் அக்கறை யுள்ளவர்கள் யாருமே ஒப்புக் கொள்வார்கள். பசு எதிரே பார்த்துக் கொண்டிருந்தது. வத்ஸராஜ் தன்னைச் சொரிந்து கொடுத்து இன்னும் அன்பு செலுத்த வேண்டும் என்ற ஆசை அதற்குக் கட்டுக்கடங்காமல் இருந்தது என்பது அது நின்று கொண்டிருந்த நிலையிலிருந்தே நன்றாகத் தெரிந்தது. ராதா வெகு வேகமாகக் குப்பை கூளங்களைக் கூட்டி வீட்டைச் சுத்தம் செய்தாள். கீழே விரிக்கும் பாயை எடுத்துத் தூசி தும்பு இல்லாமல் நன்றாக உதறி விரித்தாள். அதன் மேல் வீட்டில் இருந்த பழைய மெத்தை ஒன்றைப் போட்டுக் கோகிலாவை உட்காருமாறு சொன்னாள்.

அவன் ஒரு கணம்கூடச் சோம்பேறியாகச் சும்மா நிற்காமல் பாத்திரங்களைத் தேய்த்தான். நீர் மொண்டு வந்து நிரப்பினான். கொடிப் பொழுதில் காணச் சகிக்காமலிருந்த வீட்டைக் கண்ணாடி யெனச் சுத்தம் செய்து துப்புரவாக்கி விட்டான். குடியில்லாததால் இத்தனை நாளும் பார்ப்பவர் அற்றுக் கிடந்த வத்ஸராஜின் வீடு 'கல கல' வென்று ஆகி ஊரார் கவனத்தையே கவர்ந்து விட்டது என்றால் அதிகம் சொல்வானேன் ?

கோகிலாவும் அவர்களுக்கு உதவியாகக் காரியங்கள் செய்ய முயன்றாள். ஆனால் வத்ஸராஜும் ராதாவும் அதற்குச் சிறிதும் இடம் கொடுக்கவில்லை ; சிறு துரும்பைக் கூடத் தூக்கிப் போடும் வேலையை அவளுக்கு வைக்கவில்லை. ஆனால் ஒவ்வொரு காரியத்தையும் செய்யும்பொழுதுமட்டும் 'இப்படிச் செய்யலாமா, இது பிடித்திருக்கிறதா ?' என்று அவளை அடிக்கடி ஆலோசனை கேட்டுச் செய்தார்கள். ஒரு குறையும் அவள் மனத்தை உறுத்தக் கூடாது என்னும் விஷயத்தில் அவர்கள் கவனம் செலுத்தியது போல் வேறு யாருமே கவனம் செலுத்தி யிருக்க முடியாது. தனிமையில் இருக்கிறோம் என்ற எண்ணம் அவள் மனத்தில் இடம் பெறக் கூடாது என்பதற்காக ராதா அடிக்கடி அவளையே வளைய வளைய வரலானாள்.

பியூஷுக்குத் தாகமா யிருந்தது. குடிக்கத் தண்ணீர் வேண்டும் என்று கேட்டான். கோகிலா எழுந்து தண்ணீர் எடுத்து வருவதற்காகச் சென்றாள். அதை வத்ஸராஜ் பார்த்து விட்டான். உடனே ராதாவைக் கூப்பிட்டு, "அண்ணியை வற்புறுத்தி அழைத்து வந்தது இப்படி வேலை வாங்குவதற்காகவா?" என்று கடிந்து கொண்டான்.

உடனே ராதா ஓடிப் போய்க் கோகிலாவின் கையிலிருந்து கோப்பையைப் பிடுங்கிக் கொண்டு பியூஷுக்குத் தன் கையினாலேயே தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள்.

"ராதா! நீ செய்வது கொஞ்சங்கூட நன்றாயில்லை. நான் நடமாட வேண்டும் என்று நினைக்கிறாயா? இல்லை, இப்படியே உட்கார்ந்திருக்க வேண்டும் என்று எண்ணுகிறாயா? நான் சமையல் செய்கிறேன் என்றால்கூட விட மாட்டேன் என்கிறாயே!" என்று சிரித்தவாறே கேட்டாள் கோகிலா.

"அப்படியானால் நீங்கள் என் கைச் சமையலைச் சாப்பிட மாட்டீர்களாக்கும்!" என்று கேட்ட ராதா அதற்கு மேல் பேச விடாமல் கோகிலாவின் வாயை வெகு சாதுரியமாக அடைத்து விட்டாள்.

இரவு தூங்குவதற்குக் கோகிலாவுக்கென்று ராதா நல்ல படுக்கையாகத் தயார் செய்தாள். தனக்குச் சௌகரியம் அளிக்கும் பொருட்டு ராதாவும் வத்ஸராஜும் எத்தனை சிரமப்படுகிறார்கள் என்பதைக் கோகிலா கவனிக்கத் தவறவில்லை. தனக்காக அவர்கள் சிரமப்படக் கூடாது என்றுதான் அவள் விரும்பினாள். அவர்கள் அதைக் கேட்டால் தானே? அவள் நினைத்தது போல் அவர்களுக்கு அதெல்லாம் ஒரு பெரிய சிரமமாகத் தோன்றினால்தானே கேட்பதற்கு?

ஒரு அறையில் சாதாரணமான மெத்தையைக் காட்டிலும் பெரிய மெத்தை ஒன்று விரித்திருந்தது. அதைப் பார்த்த கோகிலா, "அப்பாடியோ! எத்தனை பெரிய மெத்தை! இந்த மெத்தை எத்தனை மணங்கு பஞ்சு சாப்பிட்டிருக்குமோ, தெரியவில்லையே!" என்று ராதாவைக் கூப்பிட்டுக் கேட்டாள்.

ராதாவுக்கு அவள் அறியாமையை எண்ணிச் சிரிப்புத்தான் வந்தது. "இது பழைய காலத்து மெத்தை! எத்தனை மணங்கு பஞ்சு பிடித்திருக்குமோ, யார் கண்டார்கள்? வா, போவோம்!" என்றாள்.

கோகிலா அந்த மெத்தைக்கு அருகில் நின்று கொண்டிருந்தாள். ராதா அங்கிருந்து அவளைச் சீக்கிரம் அழைத்துப் போய் விட வேண்டும் என்பது போல் அவசரம் காட்டினாள். ஆனால் கோகிலாவுக்கு அத்தனை உயரமும் பருமனும் உள்ள மெத்தையில் உட்கார்ந்து பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருந்தது. எனவே, அவள் அந்த மெத்தையின் மேல் ஏறுவதற்காகக் காலைத் தூக்கி

வைத்தான். அடுத்தகணம் அது சதக்கென்று அமுங்கி விட்டது. உள்ளே புல்லும் சத்தையும் போட்டு நிரப்பியிருப்பது போன்ற சலசலப்புச் சப்தம் கேட்டது.

"ஏன் ராதா, இது என்ன! இப்படி திடுமென்று அமுங்கிப் போய் விட்டதே!" என்று கேட்டாள் கோகிலா.

"இதுதான் எங்கள் படுக்கை. கிராமங்களில் எல்லாம் இப்படித்தான் இருக்கும்!" என்றான் ராதா.

"உள்ளே புல்லையும் சத்தையும் போட்டு நிரப்பி மேலே மெத்தையாகத் துணிகளையல்லவா தைத்துப் போட்டிருக்கிறாற்போலிருக்கிறது! இதில் எதற்காகத் தூங்குகிறீர்கள்?" என்று கேட்டாள் கோகிலா.

"கிராமவாசிகளாகிய எங்களுக்கு இது தான் பட்டு மெத்தை. இதில் புல் அல்ல; வைக்கோலை அடைத்திருக்கிறோம். இதில் படுத்துத் தூங்கினால்தான் எங்களுக்குத் தூங்கினாற் போல் இருக்கும்!" என்று விளக்கினான் ராதா.

"அப்படியானால் நானும் நாளையிலிருந்து இதிலேயே தூங்குகிறேன்!"

"அண்ணி! இதெல்லாம் உங்களுக்கு ஒத்து வராது; பிடிக்கவும் பிடிக்காது!"

"உங்களுக்குப் பிடித்திருக்கும் போது எனக்கு மட்டும் ஏன் பிடித்திராது? என்னிடம் வேண்டிய மட்டும் துணி இருக்கிறது. நாளைக்கு எடுத்து இம்மாதிரி மெத்தை தைத்து உறை செய்து நானும் போட்டுக் கொள்ளப் போகிறேன்!" என்றான் கோகிலா.

"அண்ணி! இந்த மாதிரி அசட்டுத்தனம் எல்லாம் இங்கே வேண்டாம். எங்கள் வீட்டில் இருக்கும் வரை நாங்கள் சொல்வதைத் தான் நீங்கள் கேட்டு ஆகவேண்டும், தெரிந்ததா?" என்றான் ராதா.

"அப்படியானால் நீ என்னை இங்கே சிறை வைத்திருக்கிறாய் என்று சொல்லு!" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள் கோகிலா.

"சிவ, சிவா! என்ன பேச்சு பேசுகிறீர்கள், அண்ணி!" என்று முகத்தைச் சிணுங்கிக் கொண்டான் ராதா.

"வேடிக்கைக்குச் சொன்னால் அப்படியே தப்பர்த்தம் செய்து கொண்டு விட்டாயே!" என்று கோகிலா சமாதானம் செய்தாள்.

"நல்ல வேடிக்கை! இதுவும் ஒரு வேடிக்கையா?" என்றான் ராதா.

கோகிலா அதற்கப்புறம் ஒன்றும் பேசவில்லை. ஆனால் மறு நாள் முதல் யார் என்ன தடுத்தாலும் கிராமத்தார்கள் தயாரிக்கும் அத்தகைய மெத்தையிலேயே தானும் தூங்குவதென்று தீர்மானித்தாள்.

இரவு வெகுநேரமாகி விடவே, கோகிலா தன் படுக்கையில் போய் உட்கார்ந்தாள். ராதா தன் அலுவல்களை முடித்துக் கொண்டு அவள் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள். பிறகு மெதுவாக அவள் கால்களைப் பிடித்து விடலானாள். கோகிலா சட்டென்று தன் கால்களை இழுத்து மடக்கிக் கொண்டு, "என்ன காரியம் செய்கிறாய் ராதா? உங்களோடு இதற்காகவா நான் அங்கிருந்து இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன்?" என்று அன்புடன் கடிந்து கொண்டாள்.

"அண்ணி! உங்கள் உடலோ பூப்போன்றது. அதோடு தங்களுக்கு இந்தச் சமயம் பார்த்து மனக் கஷ்டம் வேறு வந்திருக்கிறது. அதுவும் போதாதற்கு நடுப் பகல் நேரத்தில் கொளுத்தும் வெய்யிலில் எங்களோடு நான்கைந்து மைல் நடந்து வந்திருக்கிறீர்கள். தங்களுக்குக் கொடுத்த கஷ்டத்தை இப்பொழுது நினைத்துப் பார்த்தால் கூட எனக்கு நெஞ்சை வலிக்கிறது. இருந்தாலும் என்ன செய்வது? அந்த நேரத்துக்கு அதைத் தவிர எங்களுக்கு வேறு வழி தோன்றவில்லை. நடந்து வந்ததனால் நிச்சயம் உங்களுக்குக் கால் கடுத்துப் போயிருக்கும். வலி தானாது. கொஞ்சம் இதமாகப் பிடித்து விட்டால்தான் உங்களுக்குச் சிரமம் தீரும். அதனால் தடுக்காதீர்கள்!" என்று மிகவும் பணிவாகச் சொன்னாள் ராதா.

ராதா சொன்னது முற்றிலும் உண்மை. நிஜமாகவே கோகிலாவுக்குக் கால்களை ரொம்பவும் வலிக்கத்தான் செய்தது. இருந்தாலும் அவள் ராதாவைக் கால் பிடிக்க விடவில்லை.

ஐசுவரியமும் அதிகார வேட்கையும் அளவுக்கு மிஞ்சி விட்டால், சமூகத்தில் ஆனந்த வாழ்வு வாழ வேண்டும் என்ற ஆசை அதிகமாவதும் தோரணையோடு விதரணையாக வாழ வகை செய்து கொள்ள வேண்டும் என்ற விருப்பம் மூள்வதும் இயல்பு. எந்தச் சமூகத்தில் இத்தகைய நிலை வேர் விடுகிறதோ, அந்தச் சமூகம் அடிமைத் தனையைத் தானாகவே வலிய வருவித்துக் கொள்கிறது. அந்த அடிமைத் தனையின் விளைவுச் சின்னமாகத்தான் கைகால் பிடித்து விடச் சொல்லும் கொடிய பழக்கம் சமூகத்தில் தலை தூக்கி நிற்கிறது. ஜகதீஷும் கோகிலாவும் அது வெகு வெகு இழிவான செயல் என்று அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். உடல் நலக் குறைவு காரணமாக அத்தகைய நிலை ஏற்படுமானால் அது வேறு விஷயம். அர்த்தமின்றி அநாவசியமாக இன்பம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு கைகால் பிடித்து விடச் சொல்லும் பழக்கம் மனித வர்க்கத்தினிடையே உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பாகுபாட்டை உண்டு பண்ணி விடுகிறது.

எனவேதான் ஜகதீஷுக்கும் கோகிலாவுக்கும் அத்தகைய செயல்கள் பிடிக்கவில்லை. அதனாலேயே தான் கோகிலா, "கால் பிடிக்கக் கூடாது!" என்று ராதாவைத் தடுத்தாள். (தொடரும்)

# சுபாஷ் ஏன் தோல்வியுற்றுன்




## செவன் ஒ'க்ளாக் பிளேடுகளால் உங்களுக்கு என்ன அனுகூலம்

பணம் மிச்சமாகிறது. டீக்கான தோற்றம். க்ஷவரசுகம். பரிசுத்தத்தன்மை. வெற்றிக்கான மார்க்கம்.

தினசரி செவன் ஒ'க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.

**7 o'clock BLADES**






மங்கிய நிலவு வெளிச்சத்தில் தூரத்தில் உள்ள மலைத் தொடர்கள் பிரமாண்டமான நிழல் உருவங்களைப் போல் காட்சியளித்தன. அந்தகாரமும் ஆழ்ந்த மௌனமும் அகில உலகையும் ஆட்கொண்டிருந்த அந்த நடுநிசியில் எல்லோரும் தூங்கிக் கொண்டிருந்தனர்.

ஆனால், ஜானம்மா மாத்திரம் தூங்கவில்லை. கண்களைத் திறந்த வண்ணம் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் எவ்வளவோ முயற்சித்தும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. தூரத்தில் உள்ள சர்க்கஸ் கூடாரத்திலிருந்து வந்த பாண்டு வாத்திய முழக்கம் அந்தகாரத்தையும் மௌனத்தையும் கிழித்துக் கொண்டு வருவதுபோல் தோன்றியது. எனவே, அந்த முழக்கத்திலிருந்து, இரண்டாவது ஆட்டம் முடியப் போகிறது என்பதை ஜானம்மா தெரிந்து கொண்டாள்.

இரவில் கண்களைத் திறந்த வண்ணம் எவ்வளவு நேரம்தான் விழித்துக் கொண்டிருப்பது! அவள் ஜன்னலின் வழியாக முடிவற்ற வானத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளுடைய கையில் வலி தாங்க முடியவில்லை. கட்டுப் போட்டிருந்த வலது கையை இடது கையினால் தடவிக் கொடுத்தாள். முதுகுப் புறமாக வெகுநேரம் படுத்திருந்ததால், அவளுக்கு முதுகையும் வலித்தது. அவளுக்கு இடது புறமாகவோ அல்லது வலது புறமாகவோ திரும்பியும் படுத்துக் கொள்ள முடியவில்லை. சிறிது புரண்டாலும் கை வலி அதிகமாகியது.

திடீரென்று ஜானம்மாவின் கண்கள் லக்ஷ்மியிடத்தில் லயித்தன. லக்ஷ்மி அந்த அறையின் ஓர் ஓரத்தில் சுருட்டி மடக்கிக் கொண்டு படுத்திருந்தாள். அவள் அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். ஜானம்மா, தான் வலியினால் அவஸ்தைப்பட்டுக் கொண்டும் சஞ்சலப் பட்டுக் கொண்டும் இருப்பதையும், லக்ஷ்மி உலகத்தையே மறந்து யாதொரு கவலையுமின்றி அமைதியாகத் தூங்குவதையும் ஒப்பிட்டுப் பார்த்தாள். லக்ஷ்மியின் பரிதாபகரமான சரித்திரம் ஜானம்மாவின் ஞாபகத்துக்கு வந்தது.

ஜானம்மா சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்தபோது, லக்ஷ்மி சர்க்கஸ் வித்தைகள் செய்து காட்டுவதில் எல்லோரையும் காட்டிலும் சிறந்த நட்சத்திரமாக விளங்கி வந்தாள். அப்போது அவள் இட்ட கட்டளையைக் கம்பெனியைச் சேர்ந்த சகலரும் மிகப் பணிவுடன் நிறைவேற்றுவதில் போட்டி போட்டு வந்தனர்.

ஆனால், இப்போது லக்ஷ்மி ஒரு வேலைக்காரியைப் போல் எல்லோருக்கும் ஏவலாளாக இருக்க நேர்ந்தது. அதற்கு முக்கிய காரணம் அவளுக்கு வயதாகி விட்டதுதான்!

லக்ஷ்மிக்கு நாற்பது வயதுக்கு மேலாகி விட்டது. அவள் தன்னை இளமையாகக் காட்டிக் கொள்ள எத்தனையோ செயற்கை முறைகளைக் கைக்கொண்டும் கூடத் தன்னுடைய உண்மையான வயதை அவளால் மறைக்க முடியவில்லை.

உலகம் அப்படித்தான் என்பதை ஜானம்மா நன்கு அறிவாள். புஷ்பங்கள் வாடி வதங்கி உதிர்ந்து விடுகின்றன. அவற்றின் ஸ்தானத்தில் மொட்டுக்கள் கிளம்புவது உலகில் சகஜம்தானே.

ஜானம்மாவின் இளமை முறுக்கு தளர்ந்து விட்டதெனினும், அவள் இன்னும் வாடவில்லை.

அவள் செவி கொடுத்து உற்றுக் கேட்டாள். பாண்டு வாத்தியத்தின் இலேசான சத்தம் கேட்டது. சர்க்கஸின் கடைசிக் காட்சியாக இருக்க வேண்டும். வான ஊஞ்சலில் தாவும் திடுக்கிடும் காட்சி நடக்கிறது. அப்போது அதைப் பார்த்துக் கொண்டிருக்கும் ஆயிரக் கணக்கான ஜனங்களின் ஹிருதயம் எப்படி அடித்துக் கொள்ளும் தெரியுமா!

வான ஊஞ்சல்! இதை நினைத்தபோது ஜானம்மாவுக்குத் தன் ஹிருதயம் பற்றி எரிவதுபோல் இருந்தது. முதல் நாள் இரவு தான் அதிலிருந்து

விழுந்ததை நினைத்ததும், அவளது கைவலி பன் மடங்கு அதிகமாகியது.

அவள் அசைவற்றுப் படுத்துக் கொண்டிருந்தாள். தூங்க முடிந்தால் அவளுக்கு எவ்வளவு சௌகரியமாக இருக்கும்! அவள் கண்களை இறுக மூடிக் கொண்டாள். வலியைச் சமாளிப்பதற்காக உதட்டைக் கடித்தாள். உதட்டைக் கடித்துக் கொண்டால் வலி நின்று விடுமா! வலி பொறுக்க முடியாமல் 'ஹா' என்று உரக்கக் கத்தி விட்டாள்.

லக்ஷ்மி ஒரு தூக்கம் தூங்கி விட்டு எழுந்ததும், ஞானம்மா விழித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். "ஞானம்மா, இன்னும் நீ தூங்கவில்லையா!" என்று கேட்டாள்.

"தூங்கவில்லை."

"ஏன், உன் கை வலிக்கிறதா!"

"வலி சகிக்க முடியவில்லை" என்றாள் ஞானம்மா.

லக்ஷ்மி மறுபடியும் தூங்க முற்பட்டு விட்டாள்!

சர்க்கஸ் லாரியின் சத்தத்திலிருந்து, சர்க்கஸ் முடிந்து எல்லோரும் திரும்பி வருகிறார்கள் என்பதை ஞானம்மா அறிந்து கொண்டாள். அவளது சகாக்களான சகல பெண்களும் உள்ளே வந்தனர். அவர்கள் மிகவும் களைத்திருந்ததால், சந்தடி செய்யாமல் படுத்துக் கொண்டு விட்டார்கள். அவர்கள் யாவரும் மறுநாள் மத்தியானம் வரையில் எழுந்திருக்க மாட்டார்கள்!

சர்க்கஸ் கம்பெனியைச் சேர்ந்த சகலரும் ஒரு பெரிய ஹோட்டலில் தங்கியிருந்தார்கள். மூன்றாவது மாடியில் பெண்களுக்கும், இரண்டாவது மாடியில் ஆடவர்களுக்கும் இடம் அளிக்கப்பட்டிருந்தது. கம்பெனியைச் சேர்ந்த வேலையாட்கள் எல்லோரும் சர்க்கஸ் கூடாரத்திலேயே இஷ்டப்படி படுத்துக் கொள்வார்கள்.

• • •

அந்த விபத்து முதல் நாள் இரவு நிகழ்ந்தது. ஞானம்மா வெகு உயரத்தில் அமைக்கப்பட்டிருந்த வான ஊஞ்சல்களில் தனது திறமையைக் காட்டிக் கொண்டிருந்தாள். ஓர் ஊஞ்சலைப் பிடித்துக் கொண்டு சிறிது சிறிதாக வேகத்தை அதிகப்படுத்திக் கொண்டே போவாள். அவள் மிகவும் வேகமாக ஆடும்போது அவள் பறப்பதைப் போலவே இருக்கும். அப்போது அவள் ஓர் ஊஞ்சலிலிருந்து மற்றோர் ஊஞ்சலுக்குத் தாவும் போது, கீழே வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் ஜனங்கள் யாவரும் கதிகலங்கிப் போய் விடுவார்கள். கரகோஷம் வானைப் பிளக்கும்.

ஞானம்மா சென்ற நாலு வருஷங்களுக்கு மேலாக வான ஊஞ்சலில் ஆடி மிகவும் பயிற்சி பெற்றிருந்தாள். அவ் விஷயத்தில் அவளுடைய திறமையைப் பற்றி யாருக்கும் எவ்வித சந்தேகமும் இல்லை. அவள் ஊஞ்சலில் தன் வித்தைகளைக் காட்டும் போது, தரையிலிருந்து ஒரு ஆள் உயரத்துக்கு மேல் ஒரு பெரிய வலையைக் கட்டியிருப்பார்கள். எனவே, அவள் ஒருவேளை தப்பித் தவறிக் கீழே விழுந்தால்கூட வலைமீதுதான் விழ வேண்டியிருக்கும். எனினும் ஒரு தடவையாவது அவள் தவறி விழுந்ததில்லை.

ஞானம்மா ஒரு ஊஞ்சலிலிருந்து மற்றொரு ஊஞ்சலுக்குத் தாவும்போது கீழே வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் ஜனங்கள் மிகவும் திக்பிரமை அடைந்து விடுவார்கள். அவள் ஒரு கையால் ஊஞ்சல் ஆடுவாள். இரண்டு கைகளையும் விட்டு விட்டுக் கால்களால் ஆடுவதும் உண்டு. சர்க்கஸ் காட்சிகளுக்குள்ளேயே ஞானம்மா ஊஞ்சலாட்டம் தான் சிகரம் போன்றதாகும். அதைப் பார்க்கும் போது ஜனங்களின் தலை சுழலும். சிறிதளவு கை தவறினாலும் ஞானம்மாவின் உயிருக்கே ஆபத்து ஏற்படலாம்.

முதல் நாள் இரவு அவளுடன் கூட ஆடிய மாதவி செய்த அற்பத் தவறு காரணமாக ஞானம்மா கீழே விழுந்து விட்டாள். மாதவி ஏதோ சதிக் கூட்டத்தின் முன்னேற்பாட்டுக்கு இணங்க அவ்விதம் செய்தாளா என்று சர்க்கஸ் கம்பெனியைச் சேர்ந்த ஒரு சிலர் சந்தேகித்தனர்.

துரதிர்ஷ்டவசமாக, ஞானம்மா வலையின் ஓரத்தில் விழுந்ததால், வலை ரப்பர் போல் எழும்பியது. அதனால் அவள் தவறிக் கீழே தரையில் விழுந்து விட்டாள்.

ஞானம்மாவுக்குத் தான் கீழே விழுந்தது தான் தெரியும். பிறகு அவள் பிரக்ஞை தெளிந்து எழுந்த போது தன் கையில் பொறுக்க முடியாத வலி இருந்தது தெரிந்தது. கீழே விழுந்ததில் அவளது கை எலும்பு முறிந்து விட்டதாக டாக்டர் கூறிய போது ஞானம்மா விம்மி விம்மி அழுது விட்டாள்.

அன்று மாலை சர்க்கஸ் மானேஜர் அந்த அறைக்கு வந்து அவளது கையைப் பற்றி விசாரித்த காட்சியை அவளால் என்றும் மறக்க முடியாது. மானேஜரின் பேச்சில் அணுவளவாவது அனுதாப உணர்ச்சி தென்படவில்லை. கீழே விழுந்து காயமடைந்த



தற்கு ஞானம்மா தான் பொறுப்பாளி என்று அவர் மறைமுகமாகக் குற்றம் சாட்டுவது போலவும் தோன்றியது.

“இன்று வான ஊஞ்சலில் யார் ஆடப் போகிறீர்கள்!” என்று கேட்டார் மானேஜர்.

“ஏன், என்ன பிரமாதம்! கல்யாணியும் நானும் ஆடுகிறோம்” என்று கூறினாள் மாதவி சிறிதும் தயக்கமின்றி.

இவர்கள் என்ன ஜன்மங்கள்! அவ்வமயம் ஞானம்மாவின் நிலைமையைப் பற்றி யாருமே கவலைப் படவில்லை. அந்தக் கம்பெனியில் பல வருஷங்கள் பழகியதன் காரணமாக சர்க்கஸில் உள்ள நாலு கால் மிருகங்களைப் போல் அவர்களும் ஆகிவிட்டார்கள் போலும்!



“யாராவது ஆடுங்கள். ஆனால் நேற்று நடந்தது போல் ஆபத்துக்கு ஆளாகி விடாதீர்கள். அவ்விதம் விபத்து ஏற்படுவது கம்பெனிக்கே அவமானம். போதாக்குறைக்குச் சென்ற ஆறு நாட்களாக ஐயாயிரம் ரூபாய்தான் வசூலாகி யிருக்கிறது. மழைக் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. எனவே, அதிக வருமானம் கிடைத்தாலன்றிக் கம்பெனியைத் தொடர்ந்து நடத்துவது மிகவும் கஷ்டமாகி விடும்” என்றார்.

இவ்விதம் மானேஜர் சொல்லியவாறே திரும்பிச் சென்று விட்டார். அவர்களுடைய பதில் என்ன என்பதை அறிந்து கொள்ள வேண்டிய அவசியம் அவருக்கு இல்லை அல்லவா! அப்போதைக் கப்போது இவ்விதம் ஏதாவது சொல்லிக் கொண்டிருந்தால் தான் அவர்கள் சரியாக நடந்து கொள்வார்கள். இல்லா விடில் அதிக வசதிகள் வேண்டும், அதிகச் சம்பளம் வேண்டும் என்றெல்லாம் தொந்தரவு கொடுக்க ஆரம்பித்து விடுவார்கள். எனவே, அவர்கள் சர்க்கஸில் உள்ள மிருகங்களைப் போல் வாய் திறவாமல் வேலை செய்யும்படி செய்வது எப்படி என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்!

• • •

ஞானம்மா அந்த சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்து பல வருஷங்களுக்கு மேல் ஆகி விட்டது. அவள் ஆறு வயதுக் குழந்தையாக இருக்கும் போதே, வறுமைக் கொடுமை தாங்க முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஞானம்மாவின் தாயாரிடமிருந்து அவளை அழைத்துக் கொண்டு வந்து விட்டார்கள். தான் வரும்போது தன் தாயார் இருதயம் வெடித்து விடும்போல் விம்மி விம்மி அழுததை ஞானம்மா மறக்க வில்லை. தான் சௌகரியமாக சர்க்கஸ் கம்பெனியில் இருக்கப் போவதைக் குறித்துத் தன் தாயார் ஏன் அப்படி அழ வேண்டும் என்பதை அப்போது அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. விவரம் தெரியும் வயது வந்த பின் ஞானம்மா அந்தக் காட்சியை நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டுக் கதறியது உண்டு.

சர்க்கஸ் கம்பெனியில் சேர்ந்த நாளிலிருந்து அவளுக்குப் பல வித்தைகளும் சொல்லிக் கொடுத்தார்கள். அவள் பயிற்சி பெறும்போது சிறிதளவு தவறினாலும் சர்க்கஸ் வாத்தியார் பிரம்பினால் அவளது தோலையே உரித்து விடுவார். ஞானம்மா யௌவனப் பருவம் அடைந்த பின் தான், அவள் அடிபடுவது நின்றது. அதற்குள் அவள் பல்வேறு வித்தைகளிலும் மிகவும் தேர்ச்சி பெற்று நட்சத்திரமாகி விட்டாள்!

கம்பெனியில் ஞானம்மாவுக்குத் தேவையான உணவும் உடைகளும் கிடைத்தன. அப்படி யிருந்தும் அவள் மனத்தில் ஒருநாள்கூட மகிழ்ச்சியோ, அமைதியோ ஏற்பட்டதில்லை. கம்பெனியில் இருக்கவும் முடியாமல், விலகவும் முடியாமல் வேண்டா வெறுப்புடன் அவள் காலத்தைக் கடத்திக்கொண்டு வந்தாள்.

கம்பெனி சொந்தக்காரர் புதிது புதிதாகச் சிறு பெண்களைக் கொண்டு வந்தபோது, அவர்கள் மீது ஞானம்மாவுக்கு இரக்கம் ஏற்பட்டது. அந்தப் பெண்களின் எதிர்கால வாழ்க்கை என்ன என்ற கேள்வி ஞானம்மாவைச் சோகத்தில் ஆழ்த்தியது. சில கழுகுகளின் பார்வையிலிருந்து அவர்கள் தப்ப முடியாது என்பதை அவள் நன்கு அறிவாள்.

சர்க்கஸ் கம்பெனிக்குச் சொந்தமாக நாலு சிங்கங்களும், ஐந்து சிறுத்தைகளும், ஆறு குதிரைகளும், மூன்று யானைகளும் இருந்தன. ஆடவர்களும் பெண்களுமாக நூறு பேர்கள் இருந்தனர்.

அவர்களில் பலர் ஜீவனத்துக்காகத் தினந்தோறும் மரணத்தின் வாசற்படி வரையில் போய் விட்டு வந்தனர். ஆம், சிங்கம் முதலிய மிருகங்க

விடம் விளையாடுவோர், மோட்டார் சைக்கிளில் பல அடி பாய்ந்து செல்பவர், யானையைத் தங்கள் மார்பு மீது தாங்குபவர் முதலியோரை ஒவ்வொரு நாளும் மரணம் வரவேற்றுக் கொண்டு நிற்பதைப் போல் அவளுக்குத் தோன்றியது.



சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவராகத் திகழும் தியாகராஜர் விழாவை மதுரையில் கோலாகலமாகக் கொண்டாடினார்கள். அவ் விழாவின்போது நடந்த தியாகராஜ சங்கீதப் போட்டியில் குமாரி என். ராஜலக்ஷ்மி முதல் பரிசும், விசேஷப் பரிசும் பெற்றார்.

பழைய மானேஜர் போய்ப் புதிய மானேஜர் வந்ததிலிருந்து பல புதிய வித்தைகளும் வேடிக்கைகளும் சேர்க்கப்பட்டன.

"ஞானம்மா, இது சர்க்கஸ் கம்பெனி என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள். இங்கு மனிதரே இல்லை, எல்லோரும் மிருகங்கள்தான்' என்று அனுபவசாலியான லக்ஷ்மி கூறுவதில் எவ்வளவு உண்மை இருக்கிறது!— இவ்வாறு ஞானம்மா அடிக்கடி என்னுவது உண்டு. சிங்கம் முதலிய மிருகங்கள் கூண்டுக்குள் இருக்கின்றன. எனவே, அவைகளிடம் பயப்பட வேண்டிய அவசியமில்லை. ஆனால், கூண்டுக்கு வெளியே நடமாடும் 'மிருகங்களை'க் கண்டுதான் ஞானம்மா திகில் அடைந்தாள்.

ஞானம்மாவுக்குச் சம்பளம் இல்லை. அவள் மானேஜரிடம் சம்பளம் கேட்கவும் இல்லை. தனக்கு எதற்காகச் சம்பளம்! தனக்கு வேண்டிய உடைகளும் உணவும்தான் கிடைத்து விடுகின்றனவே! எனவே சம்பளத்தின் அவசியத்தை உணரும்படியான சம்பவம் ஞானம்மாவின் வாழ்க்கையில் இதுவரை ஏற்படவேயில்லை.



"பாஷன், பாஷன், என்று எப்படி வெள்ளைமோ ரவிக்கை போட்டுக் கொண்டு விட்டுக் கடையில் நம்ம மாதிரி கை நீளமா ரவிக்கை போட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள்."

"இனிமேல், நம் மாதிரி மடிசஞ்சியையும் தூக்கிக் கொண்டு வந்து விடுவார்கள் என்று நினைக்கிறேன்!"

எனினும், லக்ஷ்மியின் தூண்டுதலின் மீது ஞானம்மா ஒரு சமயம் மானேஜரிடம் சென்று தனக்குச் சம்பளம் கொடுக்க வேண்டுமென்று பணிவுடன் கேட்டாள்.

அதற்கு மானேஜர் என்ன சொன்னார் தெரியுமா?

"ஞானம்மா, காலம் இப்படியே இருந்து விடாது. உன் வயோதிக காலத்தில் உன்னை யார் ஆதரிப்பார்கள்? அப்போது கம்பெனிதான் உனக்கு ஆதரவளிக்கும்" என்று கூறி மானேஜர் தட்டிக் கழித்து விட்டார்.

* * *

கம்பெனியில் உள்ளவர்கள் தன்னை வெறிக்கண் கொண்டு பார்ப்பது ஞானம்மாவுக்கு முதலில் என்னவோ போலிருந்தது.

"அவர்களின் பார்வை என்னைக் கதிகலங்கச் செய்கிறது" என்றாள் ஞானம்மா லக்ஷ்மியிடம்.

"இங்கு இது மிகவும் சகஜம் ஞானம்மா. அந்தப் பார்வைக்கு இரையாகாமல் என்னைப் பார்த்துக் கொள்" என்று கூறினாள் லக்ஷ்மி.

தங்களைப் போல் ஞானம்மாவும் கம்பெனியில் உள்ள ஆடவர்களிடம் கட்டுரிமை கொண்டாடாததைக் கண்டு, மற்றப் பெண்கள் அவள்மீது வெறுப்புக் கொண்டனர்.

ஞானம்மாவின் வாழ்க்கையில் உண்மையான காதல் உணர்ச்சி ஒரே ஒருவனிடம்தான் ஏற்பட்டது. அவன்தான் ஒழுக்கமும் திடகாத்திரமும் வாய்ந்த இளைஞனான சந்திரன் என்பவன். அவன் 'பார்' வேடிக்கைகளில் மிகத் திறமை வாய்ந்தவன்.

சந்திரனும் ஞானம்மாவைக் காதலித்தான். வெண்ணெய் உருகும்போது தாழி உடைந்தது போல், அவர்களுடைய காதலும் கட்டும் முற்றி வரும்போது அச் சம்பவம் நிகழ்ந்தது.

ஒரு நாள் இரவு இரண்டு மணி இருக்கும். எல்லோரும் சர்க்கஸ் முடிந்து திரும்பி வந்தனர். பெண்கள் படுக்கப் போகும் சமயத்தில் ஒருத்தி விஷமச் சிரிப்புடன், "உன்னைப் புது மானேஜர் கூப்பிடுகிறார்" என்றாள் ஞானம்மாவிடம்.

புது மானேஜர் அந்த அகால வேளையில் தன்னை எதற்காகக் கூப்பிட வேண்டும்! ஞானம்மாவுக்கு ஒன்றுமே புரியவில்லை.

அவள் கலக்கத்துடன் அறைக்கு வெளியே சென்றபோது மற்றப் பெண்கள் கை கொட்டிச் சிரித்தது அவள் காதில் விழுந்தது.

மானேஜருடைய அறையின் வாசற்படி சென்றதும் ஞானம்மா ஒரு சிலையைப் போல் அசைவற்று

நின்ருள். அச்சமயம் அவளது ஹிருதயத்தில் பெரும் புயல் அடிக்கத் தொடங்கியது. அப்போது அவளது மனம் சந்திரனை உதவிக்கு நாடியது. ஆனல், அந்த வேளையில் சந்திரன் அங்கு வருவதற்குக் காரணம் என்ன இருக்கிறது !

"ஞானம்மா ! ஏன் அங்கேயே நிற்கிருய் ! உள்ளே வா" என்ருர் மானேஜர் அன்புடன்.

"எதற்காக என்னைக் கூப்பிட்டீர்கள் !"

"உள்ளே வா. உன்னிடம் ஒரு முக்கிய விஷயம் சொல்லவேண்டும்."

அவள் உள்ளே சென்ருள். மானேஜர் எழுந்து கதவைத் தாளிட்டார்.

இதைக் கண்டதும் ஞானம்மாவுக்குத் தலை சுழன்றது.

"நான் போக வேண்டும், கதவைத் திறந்து விடுங்கள் !"

"ஞானம்மா. நீ புத்திசாலி. எல்லோரையும்விட உன்னைத்தான் நான் அதிகமாக......"

இவ்விதம் சொல்லிக் கொண்டே மானேஜர் ஞானம்மாவுக்கு அருகில் வந்து அவளது கையைப் பிடித்தார். அவள் திமிறிக்கொண்டு கூச்சலிடவே. மானேஜர் நிலைகுலைந்து கையை விட்டு விட்டார்,

அவருக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை.

"இதுவரை எந்தப் பெண்ணும் என்னிடம் இப்படி நடந்து கொண்டதில்லை. உன்னை என்ன செய்கிறேன், பார் !"

இவ்வாறு மானேஜர் கூறுவதும் யாரோ அறைக்கதவை ஓங்கி உதைப்பதும் சரியாக இருந்தது. மானேஜர் கோபத்துடன் கதவைத் திறந்தபோது, வாசற்படியில் சந்திரன் நின்று கொண்டிருந்தான்.

"நீ ஏன் இங்கு வந்தாய் ! வெளியே போ !" என்று கத்தினர் மானேஜர்.

"நீங்கள் செய்வது அநியாயம் !"– சந்திரன் ஆத்திரமே உருவாக நின்ருன்.



மானேஜர்:—என்னால் உன்னைச் சமாளிக்க முடியவில்லை! நீ வீட்டுக்குப் போகலாம்!

குமாஸ்தா:—நான் வீட்டுக்குப் போனாலும் என் மனைவியும் இதேதான் சொல்லுவாள், சார்!

---

"உன்னை யார் கேட்டது! நீ வெளியே போய் விடு" என்று கத்திக்கொண்டே மானேஜர் மறுபடியும் கதவைச் சாத்தி விட்டார்.

மறுநாள் சந்திரன் கம்பெனி வேலையை உதறி எறிந்துவிட்டு, எங்கேயோ போய் விட்டான்.

மறுநாள் முழுவதும் ஞானம்மா அழுது கொண்டிருந்தாள். அவள் மனத்தில் கோபமும் துக்கமும் மாறி மாறிப் பொங்கின. முதல் நாள் இரவு சர்க்கஸ் கூடாரத்துக்குத் தீ வைத்து விடலாமா என்று நினைத்தாள். மிருகங்களின் கூண்டுகளைத் திறந்து விடலாமா என்றும் எண்ணினாள். எல்லோருடனும் தானும் அழிந்து போவதையே அவள் விரும்பினாள். எனினும் இறுதியில் அவளுக்கு அத்தகைய துணிச்சல் ஏற்படவில்லை. அதற்குப் பதிலாக இரவு முழுதும் பதறினாள்; விம்மி விம்மி அழுதாள்.

நாளாக ஆக அவளது உடலும், மனமும் உணர்ச்சியற்றுப் போய் விட்டன.

ஆனால், இப்போதெல்லாம் இரவில் யாதொரு அசம்பாவிதமுமின்றி அவள் தன் அறைக்குள் தூங்க முடிந்தது.

ஏனெனில் அவளுக்கு விரோதியாக இருந்த யௌவனம் மறையத் தொடங்கி விட்டதல்லவா! தவிர, அவளைக் காட்டிலும் இளம் பெண்களும் கம்பெனியில் சேர்ந்து விட்டார்கள்!

ஞானம்மாவுக்குத் தன் எதிர்காலம் எல்லையற்ற கோரமான பாலைவனத்தைப் போல் தோன்றியது. யௌவனப் பருவத்தின்போது அவள் கண்ட கனவுகள் எல்லாம் காய்ந்து கருகி விட்டன.

* * *

மூன்று வாரங்களுக்குப் பிறகு ஞானம்மாவின் கைக் கட்டு அவிழ்க்கப்பட்டது. எனினும் அவளுக்குக் கையைக் கீழே தொங்கவிட முடியவில்லை. கை சிறிது கோணலாக இருப்பது போல் அவளுக்குத் தோன்றியது.

"நீ பயப்பட வேண்டாம். உன் கையில் உள்ள கோணல் சிறிது சிறிதாக நேராகி விடும். ஆனால் நீ இனிமேல் வான ஊஞ்சலில் ஆடுவதென்பது சிறிதும் முடியாத காரியம்" என்று கூறி விட்டார் டாக்டர்.

இதைக் கேட்டுக் கொண்டு பக்கத்தில் மானேஜரும் நின்று கொண்டிருந்தார். ஞானம்மாவுக்குப் பகீரென்றது.

ஞானம்மாவின் கை எலும்பு நொறுங்கியது கம்பெனிக்கு நஷ்டம். இனி அவள் கம்பெனிக்குப் பாரமாகத்தான் இருந்து வருவாள் என்று எண்ணமிட்டுக் கொண்டே மானேஜர் அங்கிருந்து சென்று விட்டார்.

சர்க்கஸ் கம்பெனி அந்த ஊரை விட்டு அறுபது மைல்களுக்கு அப்பால் உள்ள வேறு ஊருக்குச் செல்ல வேண்டியிருந்தது. மறு நாள் எல்லோரும் புறப்படுவதாக இருந்தார்கள்.

மானேஜர் ஞானம்மாவைத் தமது அறைக்கு அழைத்து வரச் சொன்னார். இப்போதெல்லாம் ஞானம்மா யாதொரு உணர்ச்சியுமின்றி மானேஜர் அறைக்குச் செல்லுவது வழக்கமாகி விட்டது.

ஞானம்மா உள்ளே சென்றதும், "உன் கை எப்படியிருக்கிறது!" என்று கேட்டார் மானேஜர்.

"இப்போது எவ்வளவோ குணம் ஏற்பட்டிருக்கிறது."

"டாக்டர் கூறியதை நீ கேட்டாயா!"

இதற்கு யாதொரு பதிலும் சொல்லாமல் ஞானம்மா மானேஜரைப் பார்த்தாள். அந்தப் பார்வை அவரை என்னவோ செய்தது.

"உன்னால் இனி எந்த வேடிக்கையும் செய்ய முடியாது என்று டாக்டர் சொல்லி விட்டார் அல்லவா!"

"ஆமாம்" என்றாள் ஞானம்மா. அவள் அவ்விதம் கூறியது உணர்ச்சியற்ற ஓர் யந்திரம் பேசுவது போல் இருந்தது.

"கம்பெனிக்கும் போதிய வருமானம் இல்லை. மிருகங்களையெல்லாம் சரிவரப் பராமரிக்க முடியவில்லை. சிங்கங்களில் ஒன்று இறக்கும் தறுவாயில் இருக்கிறது. எனவே, ஒரு சிலரை வேலையிலிருந்து விலக்கி விடும்படி நேருமோ என்று கவலைப் படுகிறேன்."

மானேஜர் இதே தோரணையில் பேசிக்கொண்டே போனார். ஞானம்மா வாயடைத்துப் போய் அவர் சொல்லுவதையே கேட்டுக் கொண்டிருந்தாள்.

"நீ வேண்டுமானால் கம்பெனியிலேயே இருக்கலாம். ஆனால் ஆதியில் நீ இருந்தது போல்தான் இருக்கும்படி நேரும். நீ என்ன சொல்லுகிறாய்!" என்றார் மானேஜர் கடைசியாக.

"நான் விலகிக் கொள்கிறேன்."

அவ்விதம் ஞானம்மா துணிந்து சொல்லி விட்டாள். ஆனால், அவள் இனி எங்கே செல்ல முடியும்! சர்க்கஸ் கம்பெனிப் பெண்ணுக்கு யார் ஆதரவு அளிப்பார்கள்! அதிலும் நொண்டிக் கையுடன் வரும் அவளை யார் விரும்புவார்கள்!

எனினும், ஞானம்மாவிடமிருந்து மானேஜர் எதிர்பார்த்தது அந்த வார்த்தைகள்தான். ஞானம்மா, "விலகிக் கொள்கிறேன்" என்று கூறியதைக் கேட்ட அவரது முகத்தில் வெற்றிக் களை தாண்டவமாடியது. அவர் உடனே மேஜையைத் திறந்தார். ஐந்து பத்து ரூபாய் நோட்டுகளை எண்ணி ஞானம்மாவின் கையில் கொடுத்தார்.

ஞானம்மா அந்த ஐம்பது ரூபாயைப் பார்த்த வண்ணம் சிலையைப் போல் நின்றாள். அவளுக்கு உலகமே சுழன்றது.

---

Printed and Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram



# நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன்

# செய்தீர்களா?



**ஆம்! நான் இன்று என் பற்களை மக்ளீன்ஸ் பற்பசையைக் கொண்டு சுத்தம் செய்தேன்.**

வசீகரம் வாய்ந்த புன்னகைக்கு ஆரோக்கியமான பற்கள் அத்தியாவசியம். ஆகையால் தான் நான் பிரதி தினமும் இரு முறை எனது பற்களை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக்கொண்டு சுத்தம் செய்கிறேன். மக்ளீன்ஸிலுள்ள ஒரு தனிப்பட்ட பொருள் பற்களின் மேல் படிந்துள்ள ஊத்தையை நீக்கி பற்களுக்கு இயற்கையாக இருக்கும் வெண்மையையும், ஒளியையும் தருகிறது. அதிக வெண்மையான பற்கள் கெட்டியான ஈறு மற்றும் நறுமணமுள்ள சுவாசத்திற்கு மக்ளீன்ஸ் பற்பசையையே உபயோகியுங்கள்.

"... மக்ளீன்ஸ் பற்பசை இப்பொழுது கடைகளில் விற்கப்படும் எல்லா ரகங்களை விட மிக உயர்ந்தது."




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்

MTY-39-TAM

REGISTERED No. M. 4392

*Registered as newspaper in Ceylon*